# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
கவிதையின் பெயர்ப்பு.



*''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்*
*நாட்டுக்கும் முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''*

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக்கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளுவதற்கு நீங்கள் பலம்பெற வேண்டும் என்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன் மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்களது ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை உங்களுக்கு அரசினால் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறிவரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகிற்கும் செயற்றிறன் மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக்கூடிய நிதிக்குப் பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.



**அகில விராஜ் காரியவசம்**
***கல்வி அமைச்சர்***

**முன்னுரை**

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீன மயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் ச ாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கிலேயே தரம் 1 முதல் தரம் 11 வரையிலான சகல பாடநூல்களும் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்தொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக் கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## பாடநூல் அறிமுகம்

வேகமாக மாற்றமடைந்துவரும் அறிவுப் பொருளாதாரத்தை மையப்படுத்திய உலகுடன் நாமும் பயணிக்க வேண்டியவர்களாக உள்ளோம். புத்தாயிரமாண்டின் இரண்டாவது கலைத்திட்ட மாற்றமும் இதனை உள்வாங்கியே மலர்கின்றது. அறிவு, திறன், மனப்பாங்கு நிறைந்த மாணவச் சமூகமொன்றைப் பிறப்பிக்கும் நோக்குடன் உருவாக்கப்படும் பாடநூல்களின் வரிசையில் தரம் 10 - 11 மாணவர்களுக்கான **'தமிழ் இலக்கிய நயம்'** என்ற இந்த நூலும் வடிவமைக்கப்பட்டுள்ளது.

நீண்ட இலக்கிய வரலாற்றுப் பாரம்பரியத்தைக் கொண்டுள்ள தமிழ் இலக்கியப் பரப்பில் இடம்பெறும் செய்யுள்கள், பாடல்கள், நவீன கவிதைகள், சிறுகதைகள், கட்டுரைகள், பத்தி எழுத்துக்கள், நாடகம் முதலான வடிவங்களை அறிமுகம் செய்யும் நோக்குடன் இந்நூல் அமைகின்றது. 22 அலகுகளைக் கொண்டுள்ள இந்த நூலில் இடம்பெறும் ஒவ்வொரு அலகும், இரசனை என்பதற்கு அப்பால் சிந்தனைத் தளத்தை நோக்கியும் நகர்த்தக் கூடியது என்று கருதுகின்றோம்.

அழகியல் பாடத்தைத் தெரிவுசெய்யும் மாணவர்களைக் கவரும் வகையில் பாடங்கள், செயற்பாடுகள், ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன. பாட அலகுகளின் முகப்பில் படைப்பாளி, படைப்புப் பற்றிய அறிமுகத்தையும் பாடத்தின் இறுதியில் மூன்று செயற்பாடுகளையும் கொண்டு ஒவ்வொரு அலகுகளும் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. செயற்பாடுகளை முழுமை செய்வதினூடாக இப்பாடத்தைக் கற்போரும் - கற்பிப்போரும் எதிர்பார்க்கும் இலக்கை அடைய முடியும் என்று கருதுகின்றோம். இவற்றினூடாக இலக்கியப் பாடத்தைக் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கையையும் அதிகரிக்க முடியும்.

எமது முயற்சிக்கு வழிகாட்டிய கல்வி வெளியீட்டுத் திணைக்களத்தின் ஆணையாளர், பல்கலைக்கழக விரிவுரையாளர்கள் ஆகியோர்களுக்கு எமது நெஞ்சம் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்துக்கொள்கின்றோம்.

நூலில் இடம்பெறும் கவிதைகள், சிறுகதைகள், கட்டுரைகள், நாடகம், பாடல்கள் முதலியவற்றைப் படைத்த படைப்பாளிகளுக்கும் எமது நன்றிகளைத் தெரிவித்துக்கொள்கின்றோம்.

இந்நூல் தொடர்பான உங்களது மேலான ஆலோசனைகளையும், கருத்துக்களையும் வரவேற்கின்றோம்.

**எழுத்தாளர் குழு**

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## வழிகாட்டல்

**டபிள்யூ.ஏ. நிர்மலா பியசீலி**
பிரதிக் கல்வி ஆணையாளர் (அபிவிருத்தி)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## இணைப்பாக்கம்

**சி. காண்டீபன்**
அபிவிருத்தி அலுவலர்
கல்வி வெளியீட்டுத் நிணைக்களம்

## பதிப்பாசிரியர் குழு

**பேராசிரியர் செ. யோகராசா**
மொழித்துறை
கிழக்குப் பல்கலைக்கழகம்.

**கலாநிதி ஸ்ரீ பிரசாந்தன்**
முதுநிலை விரிவுரையாளர்
ஸ்ரீ ஜயவர்த்தனபுர பல்கலைக்கழகம்.

**சி. காண்டீபன்**
அபிவிருத்தி அலுவலர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

**வி. விஜயலட்சுமி**
பணிப்பாளர் - தமிழ் மொழித்துறை
தேசிய கல்வி நிறுவகம்
மகரகம.

## நூலாக்கக் குழு

**ஜனாப் எம். எச். எம். ஜவ்பர்**
நு/சரஸ்வதி தமிழ் மகாவித்தியாலயம்
லிந்துல்ல.

**தா. பத்மா பத்மநாதன்**
க/மலைமகள் இந்து மத்தியக் கல்லூரி
தெல்தோட்டை.

**ஜனாப் எம். முஸ்தபா மஃஸூர்**
கொ/அல் - ஹிக்மா கல்லூரி
கொழும்பு - 12.

**ரா. தமிழ்ச்செல்வி சிறிதரன்**
க/ தெ/ ஹிஜ்ராபுர முஸ்லிம் மகாவித்தியாலயம்
தெல்தெனிய.

## சரவை நோக்கு

**கோபால் நவரட்னம் தர்ஷினி**
அபிவிருத்தி உத்தியோகத்தர்
புனர்வாழ்வு மற்றும் சிறைச்சாலைகள் மறுசீரமைப்பு அமைச்சு.

## கணினி வடிவமைப்பு

**பிரியதர்ஷினி ரமேஷ்குமார்**
கணினி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

**ஆறுமுகம் அன்பரசி**
கணினி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## அட்டைப்படம்

**டீ. எச். மிதில உதார**
கணினி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

# பொருளடக்கம்


















# 1 புத்தகசாலை

**பாரதிதாசன் (1891 - 1964)**

பாரதிதாசன் தென்னிந்தியாவின் பாண்டிச்சேரியில் பிறந்தவர். கனக சுப்பு ரத்தினம் என்ற தன் பெயரை பாரதியின் மீது கொண்ட ஈடுபாட்டின் காரணமாகப் பாரதிதாசன் என்று ஆக்கிக்கொண்டார். ஆசிரியராகவும், சட்டமன்ற உறுப்பினராகவும் பணியாற்றிய இவர், திராவிடக் கொள்கையினால் ஈர்க்கப்பட்டார். வீரத்தாய், அழகின் சிரிப்பு, போர் மறவன், பாண்டியன் பரிசு, இருண்ட வீடு முதலான படைப்புக்களையும் ஆக்கியுள்ளார்.



இன்று இணையம் பெற்றிருக்கும் இடத்தை ஒருகாலத்தில் நூலகம் பெற்றிருந்தது. கலை, இலக்கியம், அறிவியல் அனைத்தும் ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்டிருந்தன. ஓலைச் சுவடிகள் செல்வந்தர்களிடமும் குறிப்பிட்ட சிலரிடமும் முடங்கிக் கிடந்த நிலையில் அச்சு இயந்திரத்தின் வருகையுடன் இவைகள் பதிப்பிக்கப்பட்டு நூல்களாகப் பல்கிப் பெருகி அறிவுத்தாகம் நிறைந்தவர்களைச் சென்றடைந்தன. பின்னர் இந்நூல்கள் நூலகத்தில் குவிந்தன. இக்கவிதையும் நூலகத்தின் மீதான ஈர்ப்பு, அது ஏற்படுத்தும் தாக்கம் ஆகியவற்றை விபரிக்கின்றது.

தனித்தமைந்த  வீட்டில் புத்தகமும் நானும்
சையோகம் புரிந்ததொரு வேளைதன்னில்,
இனித்தபுவி இயற்கையெழில் எல்லாம் கண்டேன்;
இசைகேட்டேன்! மணம்மோந்தேன்! சுவைகள் உண்டேன்!
மனிதரிலே மிக்குயர்ந்த கவிஞர் நெஞ்சின்
மகாசோதியிற் கலந்த தெனது நெஞ்சும்!
சனித்ததங்கே புத்துணர்வு! புத்தகங்கள்
தருமுதவி பெரிது! மிகப்பெரிது கண்டீர்!

மனிதரெலாம் அன்புநெறி காண்பதற்கும்
மனோபாவம் வானைப்போல் விரிவடைந்து
தனிமனித தத்துவமாம் இருளைப் போக்கிச்
சகமக்கள் ஒன்றென்ப துணர்வதற்கும்,
இனிதினிதாய் எழுந்த உயர் எண்ணமெல்லாம்
இலகுவது புலவர்தரு சுவடிச்சாலை;
புனிதமுற்று மக்கள் புது வாழ்வுவேண்டில்
புத்தக சாலை வேண்டும் நாட்டில்யாண்டும்.



தமிழர்க்குத் தமிழ்மொழியிற் சுவடிச்சாலை
சர்வகலா சாலையைப்போல் எங்கும்வேண்டும்.
தமிழிலிலாப் பிறமொழிநூல் அனைத்தும் நல்ல
தமிழாக்கி வாசிக்கத் தருதல் வேண்டும்.
அமுதம்போல் செந்தமிழிற் கவிதைநூற்கள்,
அழகியவாம் உரைநடையில் அமைந்த நூற்கள்,
சுமைசுமையாய்ச் சேகரித்துப் பல்கலைசேர்
துறைதுறையாய்ப் பிரித்தடுக்கி வைத்தல்வேண்டும்

நாலைந்து வீதிகளுக் கொன்று வீதம்
நல்லதுவாய் வசதியதாய் இல்லம் வேண்டும்.
நூலெல்லாம் முறையாக ஆங்கமைத்து
நொடிக்குநொடி ஆசிரியர் உதவுகின்ற
கோலமுறும் செய்தித்தாள் அனைத்தும் ஆங்கே
குவிந்திருக்க வகைசெய்து தருதல் வேண்டும்.
மூலையிலோர் சிறுநூலும் புதுநூலாயின்
முடிதனிலே சுமந்து வந்து தருதல் வேண்டும்.

வாசிக்க வருபவரின் வருகை ஏற்றும்
மரியாதை காட்டி அவர்க் கிருக்கை தந்தும்,
ஆசித்த நூல்தந்தும் புதிய நூல்கள்
அழைத்திருந்தால் அதையுரைத்தும், நாளும் நூலை
நேசித்து வருவோர்கள் பெருகும் வண்ணம்
நினைப்பாலும் வாக்காலும் தேகத்தாலும்
மாசற்றதொண் டிழைப்பீர்! சமுதாயச்சீர்
மறுமலர்ச்சி கண்டதென முழக்கஞ் செய்வீர்!.

**அரும்பதங்கள்**

**சையோகம்** - *இணைந்திருத்தல்*
**சனித்தது** - *பிறந்தது*
**கோலம்** - *அழகு*
**மாசற்ற** - *குற்றமற்ற*
**சுவடிச்சாலை** - *ஆவணக் காப்பகம்*
**ஆசித்த** - *விரும்பிய*

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. புத்தக வாசிப்பில் மூழ்கியபோது கவிஞர் எவற்றைக் கண்டதாகக் குறிப்பிடுகின்றார்?

2. **புத்தகசாலை வேண்டும் நாட்டில் யாண்டும்** என்று கவிஞர் கூறுவதற்கான காரணங்கள் எவையெனக் குறிப்பிடுக.

3. கவிஞர் காண விழையும் நூலகம் எத்தகையது என்பதைத் தெளிவுபடுத்துக.

4. பின்வரும் அடிகளின் இலக்கியச் சிறப்புகளை விளக்குக.
   **அ. மகாசோதியில் கலந்த தெனது நெஞ்சம்!**
   **ஆ. அமுதம்போல் செந்தமிழிற் கவிதைநூற்கள்.**
   **இ. மனோபாவம் வானைப்போல் விரிவடைந்து**
   **தனிமனித தத்துவமாம் இருளைப் போக்கி.**

## குழுமச் செயற்பாடு

தமிழ்ப் பத்திரிகைகள், சஞ்சிகைகள் பற்றிய தகவல்களைத் திரட்டி அவற்றைக் கால அடிப்படையில் அட்டவணைப்படுத்திக் காட்சிப்படுத்துவோம்.

## திறன் வளர் செயற்பாடு

'வாசிப்பு மனிதனைப் பூரணத்துவமுடையவனாக்கும்' என்ற தொனிப் பொருளில் சொற்பொழிவு ஒன்றை ஆற்றுவோம்.

# 2 பத்தி எழுத்துக்கள்

## கவிக்கோ அப்துல் ரஹ்மான்

தமிழகத்தைச் சேர்ந்த இவர் கல்லூரிப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். கவிஞர், பத்தியாளர், ஆய்வாளர், பேச்சாளர் என்று விரிவடையும் இவரது ஆளுமையின் அறுவடைகளாக முட்டை வாசிகள், சொந்தச் சிறைகள், அவளுக்கு நிலாவென்று பெயர் முதலான நூல்களையும், புதுக்கவிதையில் குறியீடு என்ற ஆய்வு நூலையும், பால்வீதி, சுட்டுவிரல் முதலான கவிதைத் தொகுப்புகளையும் கூறலாம். ஹைகூ, கஸல் முதலான பிறமொழிக் கவிதை வடிவங்களையும் தமிழில் பரப்பியவர்.



பத்தி எழுத்து என்பது பத்திரிகைகள் வெளிவரத் தொடங்கிய பின்னர் தமிழுக்குக் கிடைத்த புதியதொரு வடிவமாகும். கட்டுரைக்குரிய மரபுகளை மீறி ஆக்கப்படும் இந்த வடிவம் ஒரு வகையில் படைப்பாக்கமாகவே அமைகிறது. இங்கு இடம்பெறும் இந்த இரண்டு பத்திகளும் எடுத்துக்கொண்ட விடயங்களைப் புதிய நோக்கில், புதிய நடையில், புதிய பாணியில் விபரிக்கின்றன.

## அ. மரம் என்பது உயர்திணை

சாலையில் நடக்கிறேன். இருபுறமும் மரங்கள். மலர் சொரிந்து என் பயணத்தை ஆசீர்வதிக்கும் மரங்கள். வெயிலுக்குக் குடை பிடிக்கும் மரங்கள். நான் களைப்படையும் போதெல்லாம் தாய்ப் பாசத்தோடு தங்கள் மடியில் என்னை ஆசு வாசப்படுத்தும் மரங்கள்.

நன்றி என் கண்களில் சுரக்கிறது.

மனிதனின் வாழ்க்கைப் பாதையைப் பார்க்கிறேன். அங்கும் வரிசையாக மரங்கள்.

அவன் குழந்தைப் பருவத்தில் தொட்டிலாகி, நடைபழகும் பருவத்தில் நடை வண்டியாகி, பள்ளிப் பருவத்தில் ஏடுகளாகி, மணப்பருவத்தில் கட்டிலாகி, கிழப்பருவத்தில் ஊன்றுகோலாகி, இறந்த பிறகும் பாடையாகி சிதையிலும் உடன்கட்டை ஏறி அவன் சாம்பலோடு சாம்பலாகிக் கலந்து - மனிதனுக்காகவே தங்களை முற்றிலும் அர்ப்பணம் செய்யும் மரங்கள்.

மனிதனின் தாகத்திற்குப் பானம் தந்து, பசிக்கு உணவூட்டி, உடுத்த உடையாகி, வசிக்க வீடாகி, நோய்க்கு மருந்தாகி, அவன் பயணத்திற்குச் சக்கரங்களாகி, அவன் வேலைகளில் கைகளுக்குக் கைகளாகி, அவன் சுவாசத்திற்காகக் காற்றைச் சலித்துக் கொடுத்து, அவனுக்காக மேகங்களைக் கெஞ்சிப்பிச்சை கேட்டு, - ஓ! மரங்கள் மட்டும் இல்லையென்றால் மனிதன் வாழ்ந்திருப்பானா?

சரித்திரச் சாலையைப் பார்க்கிறேன். அங்கும் மரங்கள்

அதோ! போதி மரங்கள்; பாவ வெயில் மறைக்கும் அறக் குடைகள்.

அதோ! காவல் மரங்கள்; ஊர்ப் பொது மன்ற மரங்கள்; பொருட்பாலின் அத்தாணி மண்டபங்கள்.

அதோ! வசந்த மரங்கள்; மன்மதனின் அம்பறாத் தூணிகள்; வாலிபங்கள் பள்ளியறைப் பாடம் கற்கும் பள்ளியறைகள் .

அதோ! கல்லால மரங்கள்; வீட்டு நெறிக்குக் கைகாட்டும் மரங்கள்.

*மனிதனைப் பார்க்கிறேன். அவன் மரத்திலிருந்தே கோடரிக் காம்பு செய்து கொண்டிருக்கிறான். தருகின்ற தருக்களின் தயவில் வாழ்ந்தாலும் மனிதன் நன்றி கெட்டவனாகவே இருக்கிறான்.*

*மனிதனை 'மரமே' என்றால் கோபித்துக் கொள்கிறான். நானோ மரத்தை வச வாக்கியவனைக் கோபிக்கிறேன். மரம் என்பது வசவா?*

*மனிதன் மரமாக முடியுமா? மனிதனுக்கும் மரத்திற்கும் எவ்வளவு வேறுபாடுகள்!*

*மண் மனிதனுக்குப் புதை குழி; மரத்துக்கோ கருவறை.*

*மனிதன் தன்னை மண்ணின் மைந்தன் என்று வெட்கமில்லாமல் சொல்லிக் கொள்கிறான். உண்மையில் மண்ணின் மைந்தர்கள் மரங்களே; மனிதர்கள் அல்லர்.*

*பிறந்த இடத்தில் பற்று வைத்து வரவு வைப்பவை மரங்கள். மனிதன் பிறந்த இடத்தைச் செலவு செய்கிறவன்.*

*மரங்கள் சாய்ந்தால் காட்டிலிருந்து வீட்டுக்கு வரும். மனிதன் சாய்ந்தால் வீட்டிலிருந்து காட்டுக்குப் போகிறான்.*

*மரம் புழுதியில் பூக்களையும், கழிநீரில் கனிகளையும் செய்கிறது. மனிதன் பூக்களில் புழுதியையும், கனிகளில் கழிநீரையும் செய்கிறான்.*

*மனிதர்களுக்கு ஒரே ஒரு சிபி; ஒரே ஒரு சீதாக்காதி. மரங்களில் எல்லாமே சிபிகள்; எல்லாமே சீதக்காதிகள்.*

*மரம் கொடுப்பதற்காகவே கைகளை நீட்டுகிறது. மனிதன் வாங்குவதற்காகக் கைகளை நீட்டுகிறான்.*

*மரம் அத்தனை கைகளாலும் கொடுக்கிறது; மனிதன் வலக் கையால் கொடுப்பதை இடக்கையால் வாங்கிக் கொள்கிறான்.*

*மரம் வானத்தை நோக்கியே வளர்கிறது; மனிதன் புழுதியிலேயே புரளுகிறான்.*

*மரமாகத்தான் முடியவில்லை; மரங்களைப் படைக்கவாவது மனிதனுக்குத் தெரிகிறதா?*

இதோ! அவன் படைத்த மரங்கள்; தூக்கு மரங்கள், சிலுவை மரங்கள், கழு மரங்கள், கொடி மரங்கள். அத்தனையும் மாமிசப் பட்சிணி மரங்கள்; மலர்களைத் தின்று முட்களை உற்பத்தி செய்யும் மரங்கள்; வெயிலை விநியோகிக்கும் மரங்கள்.

இந்த அழகில் மனிதன் உயர்திணையாம்; மரம் அஃறிணையாம். சரிதானா?

**பொருளுணர் திறன் செயற்பாடு**

1. மரம் உயர்திணை என்பதற்கு பத்தியாளர் கூறும் காரணங்களை எழுதுக.
2. மரங்களுடன் மனிதனை ஒப்பிடுமாற்றிலுள்ள சிறப்புகளை விளக்குக.
3. இப்பத்தி எழுத்தாளர் தனது கருத்துக்களை முன்வைப்பதற்கு கையாண்ட உத்திகளை எடுத்துக்காட்டுக.
4. ஆசிரியரின் மொழி நடை சிறப்புப் பற்றி உமது கருத்துக்களைத் தருக.

## ஆ. மென்மையே வாழும்

'வாழ்க்கை என்பது போராட்டம். இதில் வலிமையானவையே வாழும் (Survival of the fittest)' என்றார் டார்வின்.

ஆனால் சீன ஞானி கன்ஃபூஷியஸோ, ' மென்மையானவையே நீண்ட நாள் வாழும்' என்கிறார்.

கன்ஃபூஷியஸ் மரணப் படுக்கையில் இருந்தார்.

படுக்கையைச் சுற்றி அவருடைய சீடர்கள் கண்களில் நீரோடு நின்று கொண்டிருந்தனர்.

சீடர் ஒருவர் தழுதழுத்த குரலில்,'குருவே! கடைசியாக எங்களுக்கு ஏதாவது அறிவுரை கூறுங்கள்' என்றார்.

கன்ஃபூஷியஸ் தம் வாயைத் திறந்து காட்டி, ' என் வாயில் என்ன தெரிகிறது, பார் என்றார்.

சீடர் வாய்க்குள் பார்த்துவிட்டு, 'நாக்கு தெரிகிறது' என்றார்.

‘பற்கள் இருக்கின்றனவா?’ என்று கேட்டார் கன்ஃபூஷியஸ்.

‘இல்லை’ என்றார் சீடர்.

‘இதில் இருந்து என்ன தெரிகிறது?’ என்று கேட்டார் கன்ஃபூஷியஸ்.

‘எனக்கு ஒன்றும் தெரியவில்லை. நீங்களே சொல்லிவிடுங்கள்’ என்றார் சீடர்.

‘நாக்கு மென்மையானது. பல் வலிமையானது. நாக்கு நான் பிறந்ததிலிருந்து இருக்கிறது. பல் பிறகுதான் முளைத்தது. வயது முதிர முதிர என் பற்கள் விழுந்து விட்டன. நாக்கு அப்படியே இருகின்றது. நான் சாகும்வரை அப்படியே இருக்கும். இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால் வலிமையானவை சீக்கிரம் அழிந்துவிடும். மென்மையானவை நீண்ட நாள் இருக்கும். எனவே நீங்கள் மென்மையானவர்களாக இருங்கள். நீண்ட நாள் வாழ்வீர்கள். இதுதான் உங்களுக்கு என் கடைசிச் செய்தி’ என்றார்.

அவர் ஆவி பிரிந்தது.

கன்ஃபூஷியஸின் பார்வை (Observation) அற்புதமானது.

அது இயற்கையின் ரகசியங்களுள் ஒன்றைப் பார்த்துவிட்டது.

மென்மையானது சீக்கிரம் அழிந்துவிடும். வன்மையானது அழியாது என்பதுதான் பொது நம்பிக்கை.

வயதானால் பற்கள் விழுந்துவிடுகின்றன.

அவை அப்படி விழுவதற்குக் காரணம் அவற்றின் வலிமையே.

நாக்கு அப்படி விழுவதில்லை. காரணம் அதன் மென்மை.

நீர் மென்மையானது என்று நினைக்கின்றோம்.

ஆனால் அது வெள்ளமானால் கரைகளை உடைத்துவிடுகிறது. வலிமையான அணைகளைத் தகர்த்துவிடுகிறது. ஊர்களையே அழித்துவிடுகிறது.

நெருப்பு வன்மையானது. ஆனால் அந்த நெருப்பை மென்மையான நீர் அணைத்துவிடுகிறது. நெருப்பு அழியும். நீர் அழியாது.

காற்று மென்மையானது. ஆனால் அது புயலானால் பெரிய மரங்களைச் சாய்த்துவிடுகிறது.

புயலில் வலிமையான மரம் விழுந்துவிடுகிறது. மென்மையான நாணல் தப்பித்து விடுகிறது.

பூகம்பத்தில் மனிதன் கட்டும் வலிமையான வீடுகள் உடைந்து போகின்றன. மென்மையான சிலந்தியின் வீடு தப்பித்துவிடுகிறது.



வேர் மென்மையானது. கல் வன்மையானது. ஆனால் வன்மையான கல்லை மென்மையான வேர் பிளந்துவிடுகிறது.

வெப்பம் வன்மையானது. ஒளி மென்மையானது.

ஆனால் வெப்பம் பாயாத தூரத்துக்கு ஒளி பாய்ந்துவிடுகிறது.

வன்மையான பொருள்கள் நுழைய முடியாத இடங்களில் நீர் நுழைந்துவிடுகின்றது.

வன்மையான பொருள்கள் நுழையக் கடினமான உடலில் ‘எக்ஸ்’ கதிர்கள் நுழைந்து விடுகின்றன.

வலிமையானவர்களே போருக்கு அனுப்பப்படுகிறார்கள். அங்கே அவர்கள் மடிந்து போகிறார்கள்.

மென்மையானவர்கள் தப்பித்துவிடுகிறார்கள்.

பழங்காலத்தில் போர் மூண்டால் ‘முதியவர்கள், பெண்கள், குழந்தைகள் பத்திரமான இடங்களுக்குச் சென்றுவிடுங்கள்’ என்று அறிவிப்பார்கள்.

முதியவர்களையும், பெண்களையும், குழந்தைகளையும் அவர்களுடைய மென்மையே காப்பாற்றுகிறது.

வன்மை வன்மையின் மேல்தான் போர் தொடுக்கிறது.

வலிமைதான் பாதுகாக்கும் என்று நினைக்கின்றோம்.

வன்முறையை வாழ்க்கையாகக் கொண்ட ரவுடிகள் வன்முறையாலேயே அழிகிறார்கள்.

வலிமையான ரவுடிகள் சீக்கிரம் செத்துப் போகிறார்கள். மென்மையானவர்கள் நீண்ட நாள் வாழ்கின்றார்கள்.

‘வாளை உருவியவன் வாளாலேயே சாவான்’ என்கிறது பைபிள்.

வலிமையே வெல்லும் என்று நினைக்கிறோம்.

ஆனால் ஆங்கிலேயரின் வலிமையான படையை காந்தி அடிகளாரின் அகிம்சை வென்றதை வரலாறு காட்டுகிறது.

கொடியவர்களையும் இசை மென்மையானவர்களாக்கி விடுகிறது.

பாலைப் பண், வழிப்பறிக் கொள்ளைக்காரர்களின் கொடிய மனத்தையும் மாற்றி ஆயுதங்களைக் கீழே போட்டுவிடச் செய்யும் என்கிறார் பொருநராற்றுப்படையில் முடத்தாமக் கண்ணியார்.

ஆறலை கள்வர் படை விட, அருளின்
மாறுதலை பெயர்க்கும் மருவின் பாலை

வன்மையின் வெற்றி அற்பமானது. மென்மையின் வெற்றி நுட்பமானது.

ஆண் வன்மையானவன். பெண் மென்மையானவள்.
இருவரும் மற்போர் புரிந்தால் ஆண் வென்று விடுவான்.
பெண் ஆணை அன்பால் வென்று விடுவாள்.

போர்க்களத்தில் மாவீரர்களையும் வென்ற வீரன், பாவையின் பார்வை அம்பு பட்டால் தோற்றுப்போய் அவள் காலடியில் விழுந்துவிடுகின்றான்.

‘போர்க்களத்தில் பகைவரும் அஞ்சும் என் வலிமை இந்தப் பெண்ணின் வதன வனப்புக்குத் தோற்று அழிந்து விட்டதே, ‘ஓ’ என அலறும் ஒரு போர் வீரனைக் காமத்துப் பாலில் காட்டுகிறார் திருவள்ளுவர்.

வன்மையின் வெற்றி புறவயமானது. மென்மையின் வெற்றி அகவயமானது. ஆண் புறவயமாகவே பெண்ணை ஆள முடியும். பெண்ணோ ஆணை அகவயமாக ஆள்கிறாள்.

வன்மையால் மண்ணைத்தான் பிடிக்க முடியும்.

மனங்களைப் பிடிக்க மென்மைதான் உதவும்.

வன்மையானவர்களுக்கு வரலாறு என்ற மயானத்தில் மட்டுமே இடம் கிடைக்கிறது.

மென்மையானவர்களுக்கோ அழியாத காவியங்களில் இடம் கிடைக்கிறது.

வன்மையின் வெற்றிக்கு அற்பாயுசு, மென்மையின் வெற்றிக்கோ தீர்க்காயுசு.

உண்மையில் மென்மையே வன்மை.

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. குரு - சீடன் உரையாடல் மூலம் வெளிப்படுத்தப்படும் கருத்து யாது?
2. ‘மென்மையானது விரைவில் அழிந்துவிடும், வன்மையானது அழியாது’ என்ற கூற்றுக்கு முரணாகப் பத்தி எழுத்தாளர் கூறும் கருத்துக்களைத் தெளிவுபடுத்துக.
3. மென்மை குறித்த அப்துல் ரஹ்மானின் நோக்கினை விளக்குக.

## குழுமச் செயற்பாடு

‘தாவரம்’ என்ற தலைப்பில் ஐந்து நிமிடத்திற்கு ஏற்ற வகையில் வீதி நாடகம் ஒன்றினை ஆக்கி நடித்துக்காட்டுவோம்.

## திறன் வளர் செயற்பாடு

பின்வருவனவற்றுள் ஒன்றைத் தெரிவு செய்து 100 சொற்களுக்குக் குறையாமல் பத்தி எழுத்து ஒன்றினை ஆக்குவோம்.

★ நட்சத்திரங்கள் ★ சாவிகள் ★ நிறங்கள்

# 3 வாய்மொழிப் பாடல்

நாட்டார் பாடல்கள், கிராமியப் பாடல்கள் போன்ற பெயர்களால் வழங்கப்படும் இப்பாடல்கள் கிராமிய மக்களால் பாடப்பட்டவைகளாகும். நாட்டுக்கு நாடு, பிரதேசத்திற்குப் பிரதேசம், சமூகத்திற்குச் சமூகம் வேறுபட்டு ஒலித்தாலும் கூட்டு வாழ்வையும் அதன் இன்ப துன்பங்களையுமே இவை பாடுபொருளாய்க் கொண்டுள்ளன. தொன்மையும், இலக்கியச் செழுமையும் உடைய இப்பாடல்கள் நாட்டுப்புறவியல் ஆய்வாளர்களாலும், ஆர்வலர்களாலும் தேடித் தொகுக்கப்படுவதுடன், ஆய்வுகளும் மேற்கொள்ளப்படுகின்றன.



மருத்துவிச்சிப் பாடல் என்பது வாய்மொழிப் பாடல்களின் ஒரு கிளையாகும். வைத்தியர்களும், வைத்தியசாலைகளும் செல்வாக்குப் பெற்றிராத கிராமங்களில் மருத்துவிச்சியே பிரசவச் சிகிச்சைகளை மேற்கொண்டுள்ளாள். தாயையும், குழந்தையையும் பாதுகாத்த அவளுக்கு அரிசி, நெல், மிளகு முதலான பொருட்கள் வழங்கப்படுவதுண்டு. பிரசவம் பார்த்த மருத்துவிச்சி குழந்தையைக் கைகளில் தூக்கியவாறு பாடப்படும் பாடலே இப்பாடலாகும்.

### *மருத்துவிச்சி வாழ்த்து*

அயலும் புடையும் வாழ வேண்டும்
அன்னமும் சுற்றமும் வாழ வேண்டும்
ஆச்சியும் அப்புவும் வாழ வேண்டும்
அம்மானும் மாமியும் வாழ வேண்டும்.

அரிசிப் பொதியோடும் வந்தீரோ தம்பி,
அரிசி மலைநாடும் கண்டீரோ தம்பி?

நெல்லுப் பொதியோடும் வந்தீரோ தம்பி,
நெல்லு மலைநாடும் கண்டீரோ தம்பி?

மஞ்சள் பொதியோடும் வந்தீரோ தம்பி,
மஞ்சள் மலைநாடும் கண்டீரோ தம்பி?

மிளகுப் பொதியோடும் வந்தீரோ தம்பி,
மிளகு மலைநாடும் கண்டீரோ தம்பி?

உள்ளிப் பொதியோடும் வந்தீரோ தம்பி,
உள்ளி மலைநாடும் கண்டீரோ தம்பி?

இஞ்சிப் பொதியோடும் வந்தீரோ தம்பி,
இஞ்சி மலைநாடும் கண்டீரோ தம்பி?

உப்புப் பொதியோடும் வந்தீரோ தம்பி,
உப்பு மலைநாடும் கண்டீரோ தம்பி?

காசுப் பொதியோடும் வந்தீரோ தம்பி,
காசு மலைநாடும் கண்டீரோ தம்பி?

வேந்தர்க்கு வேந்தராய் வந்தீரோ தம்பி,
வேந்தர் மணிமுடியும் கண்டீரோ தம்பி?

கோச்சி வாழ கொப்பர் வாழ
பேத்தி வாழ பேரன் வாழ

பூட்டி வாழ பூட்டன் வாழ
கொம்மான் வாழ மாமி வாழ

குஞ்சியாச்சி வாழ குஞ்சியப்பு வாழ
பெரியாச்சி வாழ பெரியப்பு வாழ

ஊர் வாழ தேசம் வாழ
குருவுக்கும் சிவனுக்கும்
நல்ல பிள்ளையாய் இருந்து வாழ்க.

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. *மருத்துவிச்சியின் மனப்பாங்கு பற்றிய உமது கருத்தினை முன்வைக்குக.*
2. *குழந்தை எவ்வாறெல்லாம் வாழ வேண்டும் என மருத்துவிச்சி விரும்புகிறாள்?*
3. *இப்பாடலில் கிராமிய மண்வாசனை வெளிப்படுமாற்றினைத் தெளிவுறுத்துக.*
4. **''வேந்தருக்கு வேந்தராய் வந்தீரோ தம்பி
வேந்தர் மணிமுடியும் கண்டீரோ தம்பி''**
*இவ் அடிகள் மூலம் நீர் விளங்கிக் கொண்டதை விளக்குக.*
5. *இப்பாடல் பகுதியில் வெளிப்படும் அழகியல் உணர்வினை எடுத்துக் காட்டுக.*

## குழுமச் செயற்பாடு

*நாம் வாழும் பிரதேசத்தில் வழக்கிலுள்ள நாட்டார் பாடல்களைத் தொகுத்து குறும்புத்தகம் ஒன்றைத் தயாரிப்போம்.*

## திறன் வளர் செயற்பாடு



*படம் உணர்த்தும் கருத்துக்களை மையமாகக் கொண்டு பாடல் ஒன்றினை ஆக்கி அதனைக் கிராமிய மெட்டில் பாடுவோம்.*

# 4 இனிது என

கணவன் - மனைவி ஆகியோரின் இல்லறப் பண்பாட்டைத் தமிழ் இலக்கியங்கள் செம்மையாகப் புலப்படுத்தி வந்துள்ளன. இவ்விரு பாடல்களின் உள்ளடக்கங்களும் ஒரே நேர்கோட்டில் பயணிக்கிறன. குறுந்தொகைப்பாட்டில் சித்திரிக்கப்படும் மனைவி, அமுதம் என்ற கவிதையில் சித்திரிக்கப்படும் கணவன் ஆகிய வார்ப்புகள் இல்லறத்தின் சிதையாத சிறப்பைக் காட்டுகின்றன.



## அ. முளிதயிர்

### கூடலூர்க்கிழார்

கூடலூர்க்கிழார் சங்ககாலப் புலவர்களில் ஒருவர். சங்கநூல் தொகுப்பில் இவரது நான்கு பாடல்கள் உள்ளன. செவிலித்தாய் கடிநகர் சென்று தன் வளர்ப்பு மகள் மகிழ்வாக வாழ்வதை அவளைப் பெற்ற நற்றாய்க்கு எடுத்துரைக்கும் பாடல் இது.

**கடிநகர்** - பெண் திருமணம் செய்துகொண்டு வாழும் இல்லம்

**செவிலித்தாய் கூற்று**

**முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழா அது உடீஇக்**
**குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்**
**தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்**
**இனிதெனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே.**

- கூடலூர்க்கிழார்

தன் அன்புக் கணவனுக்கு குழம்பு வைப்பதற்கென மனம் வைத்தாள் தலைவி. கட்டித் தயிரைத் தன் காந்தள் போன்ற மென்மையான விரல்களால் பிசைந்தாள். தன் உயர் ரக ஆடையின் (பட்டாடையின்) பெறுமதியையும் பொருட்படுத்தாது அவ்வாடையிலேயே தன் கைகளைத் துடைத்து, தாளித்த புகை அவளது குவளை மலர் போன்ற மைதீட்டிய கண்களைச் சூழ்ந்து வருத்திய போதிலும் தலைவனுக்கு தான் செய்யும் கறியின் சுவை கெட்டுவிடக் கூடாதே எனக் கருதி, துளாவித் துளாவிச் சமைத்து விடுகிறாள். உணவருந்தும் தலைவனோ புளிக்குழம்பினை இனிது இனிது எனக் கூறி விருப்புடனே உண்பதனால் ஒளிபடைத்த தலைவியின் நெற்றியும் முகமும் மகிழ்ச்சியினால் நுண்மையாகப் பூரித்துவிட்ட அழகுதான் எத்தனை. இதுதான் அங்குள்ள நிலை எனச் செவிலி தன் வளர்ப்பு மகளின் இல்லறப் பாங்கினைப் புகழ்ந்து பேசுகிறாள்.

### அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| முளிதயிர் | - | நன்கு தோய்ந்த கட்டித் தயிர்/ முற்றிய தயிர் |
| கலிங்கம் | - | பெறுமதியான பட்டாடை |
| குய் | - | தாளிப்பு |
| கழும | - | நிறைய |
| பாகர் | - | குழம்பு |

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. *இப்பாடலில் தலைவனிடத்தில் தலைவி கொண்ட அன்பு எவ்வாறு வெளிப்படுகிறது?*

2. **முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்** *இவ் அடியில் வெளிப்படும் அணிச் சிறப்பை எடுத்துக்காட்டுக.*

3. *தலைவியின் செயற்பாடுகளினூடாக வெளிப்படும் இல்லறப்பாங்கை விளக்குக.*

## ஆ. அமுதம்

### சச்சிதானந்தன் (1921 - 2008)

கணபதிப்பிள்ளை சச்சிதானந்தன் ஈழத்துக் கவிஞரும், எழுத்தாளரும் ஆவார். இவர் யாழ்ப்பாணம் நல்லூரில் பிறந்தவர். இவரது முதற் சிறுகதை 'தண்ணீர்த்தாகம்' 1939 ஆம் ஆண்டு பெப்ரவரி 12 ஆம் நாள் ஈழகேசரிப் பத்திரிகையில் வெளிவந்தது. ஆனந்தன் என்ற புனைபெயரில் இவர் எழுதிய எட்டுச் சிறுகதைகள் 1939-1944 காலகட்டத்தில் ஈழகேசரியில் வெளிவந்தன.



மனைவி சமைத்துக் கொடுத்த உணவைப் பயணத்தின் இடை நடுவே பிரித்து உண்ணத் தொடங்குகிறான் கணவன். அந்த உணவு அவன் உள்ளத்தில் ஏற்படுத்தும் உணர்வுகளை இப்பாடல் சித்திரிக்கின்றது.

தங்க வளைக்கைகள் தொட்டுச் சமைத்தது
சாலக்கமழு தையா - இதில்,
அங்கமெ லாம்மிகப் பொங்கி வழிந்திடும்
அன்புங் கலந்த தையா

கொட்டிய உப்புக் கசப்பதென்றாலுமுள்
கூடியினிக்கு தையா - இது
விட்டுப் பிரிகையிற் சொட்டுக் கண்ணீர்பட்ட
விண்ணின் அமுதமையா

சொன்னபடிநட வாத துடிப்பயல்
தொட்டுச் சுவைத்த தையா - இது
சின்னஞ் சிறுகைக் குழந்தை யளைந்தது
தெய்வ அமுத மையா

ஆகக் கரிந்து பொரிந்ததென் றாலுமே
அன்பு மணக்கு தையா - இது
வேகவைக் காததென் றாலும் எனக்கொரு
விந்தை உருசி யையா

ஊது குழற்சத்தம் கேட்டவ திப்பட்டு
ஓடிவருகை யிலே - இது
பாதி வழிவந்து தாமரைக் கைதந்த
பச்சை அமுதமையா

கட்டிய அன்புக் கயிற்றினிற் சுற்றிய
கட்டுப் பொதியி தையா - இதைத்
தொட்டுச் சுவைக்கையில் உள்ளமெல் லாமொரு
சோதி மிளிரு தையா.

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. *மனைவி சமைத்த உணவைக் கணவன் எவ்வாறெல்லாம் புகழ்ந்துரைக்கின்றான்?*

2. ***விட்டுப் பிரிகையிற் சொட்டுக் கண்ணீர்பட்ட விண்ணின் அமுதமையா*** *இவ்வடியில் காணத்தக்க இலக்கியச் சிறப்பைக் குறிப்பிடுக.*

3. *அமுதம் என்ற தலைப்பு இக்கவிதைக்குப் பொருந்துமாற்றினை விளக்குக.*

## குழுமச் செயற்பாடு

ஒரு குடும்பத்தின் மனமகிழ்ச்சிக்குக் காரணம் பணமா? மனமா? என்ற தலைப்பில் பட்டிமன்றம் ஒன்றை நடத்துவோம்.

## திறன் வளர் செயற்பாடு

இல்லறப் பண்பாட்டை விளக்கும் வகையிலான சினிமாப்பாடல்களை உள்ளடக்கி இசையும் கதையும் பிரதி ஒன்றினை ஆக்குவோம்.

# 5 தாய்ப்பசு

**அகிலன் (1922 - 1988)**

தமிழகத்தைச் சேர்ந்த இவர் சிறுகதைகள், நாவல்கள் முதலான பல இலக்கியங்களையும் கட்டுரைகளையும் ஆக்கியுள்ளார். சித்திரப்பாவை என்ற நாவலுக்காக ஞானபீட விருதையும், வேங்கையின் மைந்தன் என்ற நாவலுக்காகச் சாகித்திய அகடமி விருதையும் பெற்றவர். இவரது படைப்புகள் பல - மலாய், சீன, ரஷ்ய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவரது பாவை விளக்கு, கயல்விழி முதலிய நாவல்கள் முறையே பாவை விளக்கு, மதுரைமீட்ட சுந்தர பாண்டியன் என்ற பெயர்களில் திரைப்படங்களாக வெளிவந்துள்ளன.



மனிதனுக்கும் விலங்குகளுக்குமிடையிலான உறவு மிகவும் தொன்மையும், நெருக்கமானதுமாகும். மனிதனுக்காக யானை, மாடு, குதிரை முதலான விலங்குகள் தம்மையே அர்ப்பணிக்கின்றன. ஆனால் மனிதன் இவற்றுக்கு என்ன கைம்மாறு செய்துள்ளான்?..... என்னதான் செய்தாலும் மனிதனோடு ஒட்டி உறவாடும் விலங்குகள் நேயத்தை வெளிப்படுத்தித்தான் வருகின்றன என்பதை இந்தச் சிறுகதை புலப்படுத்த முனைகிறது.

பட்டணத்துப் பால்காரன் மாடசாமியின் வீட்டுப் பசு மாடு ஒரு காளைக் கன்றுக்குத் தாயாகி இருந்தது. பசுவுக்கு இது இரண்டாவது ஈற்று. முதலில் பிறந்த கிடாரிக் கன்று வளர்ந்து பெரிதாகி எங்கோ கைமாறிப் போய் விட்டது. இப்போது இது இரண்டாவது குழந்தை; ஆண் குழந்தை. அது அங்குமிங்கும் துள்ளிக் குதித்து ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருந்தது.

தாய்ப்பசுவுக்குப் பெருமைதாங்கவில்லை. மடி நிறையப் பால் சுரந்தும்கூட, அதைக் குடிக்காமல், இப்படி முட்டி மோதிக்கொண்டு எந்தப் பிள்ளையாவது விளையாடித் திரியுமா?

சீம்பாலைக் கறந்து விற்க முடியாது என்பதால் மாடசாமியும் கன்றுக் குட்டியைப் பிடித்துக் கட்டி வைக்கவில்லை. குடித்தால் குடித்துவிட்டு போகட்டுமே என்ற தாராளம்

கன்றுக் குட்டிக்கோ நினைத்த போதெல்லாம் குடித்துக் கொள்ளலாமே என்ற அலட்சியம்.

அதற்கு ஒரு தோழனும் கிடைத்துவிட்டான்; மாடசாமியின் மகன் குமரன். முதலாளியின் மகனும், தன் மகனும் ஒன்றாய்க் குலவுவதைக் கண்ட தாய்ப்பசு, பெருமையோடு அதைத் தன் துணைவனுக்குச் சுட்டிக் காட்டுவதற்காக அடுத்த வீட்டுப் பக்கம் திரும்பியது.

அடுத்த வீட்டுக் காளைதான் அந்தப் பசுவுக்குத் துணை; அதன் குழந்தையின் தகப்பன்.

அந்தச் செவலைக்காளையும் அப்போது துள்ளிக் குதிக்கும் தன் கன்றுக்குட்டியைத்தான் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. “பார்த்தாயா உன் மகனை, உன்னைப் போலவே பிறந்திருக்கிறான்’’! என்று பசு தன் கண்களால் பேசிய பேச்சை அது புரிந்து கொள்ளாமல் இல்லை.

காளைக்கன்று ஓடியாடித் திரிந்து விட்டுத் தன் தாயின் அருகில் வந்து நின்றது. அதன் தோழனான குமரனும் கன்றுக்குட்டியின் கழுத்தைக் கட்டிக் கொண்டு பசுவின் அருகில் வந்தான். பசு இருவரையும் மாறி மாறிப்பார்த்தது. இரண்டு குழந்தைகளுமே தன் குழந்தைகள் என்பது போல் நாக்கால் குமரனையும் கன்றுக் குட்டியையும் மாறி மாறித் தடவிக் கொடுத்தது.

ஒரு வகையில் பார்க்கப்போனால் குமரனும் தாய்ப் பசுவின் குழந்தைதான். மாடசாமியின் மனைவி அவனைப் பெற்றுவிட்டாளே தவிர, அவளிடம் பிள்ளையை

வளர்ப்பதற்குப் பால் இல்லை.பசுவின் பால்தான் இப்போது அவனுடைய தேகத்தில் ஓடும் இரத்தம்.

இரண்டு மூன்று நாட்கள் சென்றன.

காளைக் கன்றுக்குட்டிக்குக் கழுத்துச் சங்கிலியோடு வாய்ப்பூட்டான கூடையும் கிடைத்தது. நினைத்த நேரத்தில் பால் குடிக்க முடியவில்லை.

பால் கறக்கும் நேரத்தில் மட்டும் கன்றுக்குட்டியை அவிழ்த்துவிடும் மாடசாமி, சரியாகப் பால் சுரந்து அதன் வாய்க்கு வரும் நேரத்தில் அதை இழுத்துப் பிடித்துக் கட்டிவிட்டுக் கறக்கத் தொடங்கிவிடுவான். அவன் கறந்து முடித்துவிட்டு அவிழ்த்து விடும்போதே மடியில் ஒரு சொட்டுப் பால் கூட மீதமிருக்காது.

கன்றுக் குட்டி முட்டிப் பார்க்கும்; மோதிப் பார்க்கும்; கதறிப்பார்க்கும். இந்தத் துடிப்பைக் காணும் அடுத்த வீட்டுக் காளையோ தன் அடித்தொண்டையிலிருந்து குரல் எழுப்பும்; குறுக்கே நிற்கும் சுவரில் தன் கொம்புகளை அது மோதுவதும் உண்டு.

தாய்ப் பசுவுக்கோ இந்த வேதனைகளைத் தாங்கவே முடிவதில்லை. அதனால் என்ன செய்ய முடியும்? கன்றுக் குட்டியின் கன்னங்கரிய பெருவிழிகள் இரண்டும் ஒளி இழந்து வந்தன. அதனால் துள்ளவும் முடியவில்லை. குதிக்கவும் முடியவில்லை; தளதளவென்று சதைப் பிடிப்போடு இருக்கவேண்டிய மேனியில் எலும்புக் கூடு புறப்படத் தொடங்கியது.

கன்று தாயை ஏக்கத்தோடு பார்க்கும்; தாய் ஏக்கத்தோடு கன்றைப் பார்க்கும். இரண்டையும் சேர்த்துப் பார்க்கும் அடுத்த வீட்டுக் காளையோ, மூச்சுவிடுவதற்குப் பதிலாக நெருப்புக் கனலைக் கக்கும்.

இந்தச் சமயத்தில்தான் ஒருநாள் மாடசாமி வழியில் போய்க்கொண்டிருந்த மற்றொரு பால்காரனைக் கூப்பிட்டு அவனோடு ஏதோ பேச்சுக் கொடுத்தான். அந்தப் பால்காரனின் தோளிலும் ஒரு கன்றுக்குட்டி இருந்தது. ஆனால், அது உயிரில்லாத கன்றுக்குட்டி. தோலை உரித்து உள்ளே வைக்கோலைத் திணித்து, ஏதோ குச்சி களை வைத்துக் கட்டி, சோளக்கொல்லைபொம்மை போல் ஒரு உருவத்தை வைத்துக்கொண்டிருந்தான் அவன்.

“மாடசாமி! கிடாரிக் கண்ணுக்குட்டியா இருந்தாலும் பரவாயில்லை. வளர்ந்தாலும் நாளைக்குப் பால் கொடுக்கும். நல்ல விலைக்கு யாரும் கேட் டால் கொடுத்திடலாம். இதை வச்சுக்கிட்டு என்ன செய்யப் போறே?'' ‘‘என்ன செய்யறதுன்னுதான் எனக்கும் புரியலே. ஒரு நாளைக்கு இதுவே ஒரு படி பாலைக் குடிச்சிடும் போலே இருக்கு''!

மாடசாமியின் பேச்சைத் துளிகூடநம்பாத அந்தப் பால்காரன் கலகலவென்று சிரித்தான். "செய் செய் நான் எதைச் செய்தேனோ அதைத்தான் நீயும் செய்துகிட்டுவர்றே! துணிஞ்சு செய்! இன்னம் ஒரு வாரம் இப்படியே செய்தீன்னா தன்னாலே எல்லாம் சரியாகப் போகும்.!

சொல்லிவிட்டுச் சிரித்துக் கொண்டே அவன் போய் விட்டான். மனிதர் களையும் சரி, மிருகங்களையும் சரி, வயிற்றில் அடித்துப் பட்டினிபோட்டு அணு அணுவாகக் கொன்றால், அதைத் தடுப்பதற்கு எந்தச் சட்டமுமில்லை என்று அவன் மறைமுகமாக உபதேசம் செய்துவிட்டுக் கிளம்பி விட்டான்.

ஒரு வாரம் கூடத் தாங்கவில்லை. ஒருநாள் காலையில் கன்றுக் குட்டியின் முகத்தில் ஈக்கள் மொய்த்தன. அதை எங்கேயோ இழுத்துக் கொண்டு போய்விட்டான் மாடசாமி. சில தினங்களுக்குள்ளாகவே தாய்ப் பசுவுக்கு முன்னால் ஒரு வைக்கோல் போர் அடைத்த கன்றுக்குட்டியைக் கொண்டு வந்து நிறுத்தினான் அந்தப் பால்க்காரன்.

பசுவின் மடியும் பால் சுரந்தது; கண்களில் நீரும் வழிந்தது; அது கதறிய கதறலுக்கு, சுவருக்கு அப்பால் நின்ற காளைமாடும் எதிரொலி கொடுத்தது.

தைப்பொங்கல் வந்தது. மனிதர்கள் சாப்பிட்ட மறுநாள் மாட்டுக்காகவும் பொங்கல் வைத்தார்கள்.

அடுத்தவீட்டுக் காளைக்கு அதன் சொந்தக்காரன் கொம்பு சீவிவிட்டு, அலங்காரங்கள் செய்துவைத்து, அதைத் தட்டிக்கொடுத்து ஊர் சுற்ற அனுப்பி வைத்தான். கிராமத்தில் அது இருந்தபோது மஞ்சுவிரட்டில் கலந்து கொண்டு ஊரையே கதி கலக்கிய காளை. பட்டணத்திற்கு வந்த பிறகு அப்படியெல்லாம் ஒன்றும் நடக்கவில்லை. பார வண்டி இழுப்பதோடு சரி.

அந்தக் காளைமாட்டுக்கு மஞ்சுவிரட்டு நினைவு வந்து விட்டது. அந்த நினைவோடு சுவருக்கு அப்பால் நின்ற பசுவை எட்டிப்பார்த்தது. பசு தனக்கெதிரில் வைத்த பொங்கலை முதலில் முகர்ந்து பார்த்துக் கண்ணீர் வடித்தது; பிறகு தன் கொம்புகளால் அந்தப் பாத்திரத்தையே மோதிக் கீழே உருட்டிவிட்டது.

மாடசாமிக்கு ஒன்றும் புரியவில்லை; அருகில் நின்ற அவனுடைய மகனுக்கும் ஒன்றும் புரியவில்லை. மாடசாமி பசுவின் கழுத்தில் அன்போடு தடவிக் கொடுத்துப் பார்த்தான். அதன் முகத்தில் மெதுவாகத் தட்டிக் கொடுத்தான். மறுபடியும் சாப்பாட்டுப் பாத்திரத்தை எடுத்து அதன் அருகில் கொண்டு வந்தான்.

இந்த வேலைகளுகிடையில் அவனுடைய மகன் குமரன் சற்று விலகிப் போய் விளையாடியதை அவன் கவனிக்கவில்லை.

திடீரென்று ஏதோ ஓர் பரப்பரப்பான சத்தம் கேட்டது. நாலுகால் பாய்ச்சலில் தெருவே அதிரும் ஓசையுடன் அடுத்த வீட்டுக் காளை அங்கே வந்துகொண்டிருந்தது. சீவி விட்ட கொம்புகள் மின்னல் கீற்றுகளைப் போல் ஒளிர்ந்தன. கண்களில் நெருப்புப் பொறிகள் பறந்தன.



தரையைக் குத்திக் கிளறி, ஒவ்வொரு கொம்பிலும் ஒவ்வொரு பிடி மண்ணைச் சுமந்து கொண்டு, அது அடுத்த பாய்ச்சலுக்கு மாடசாமியின் மகன் குமரனைக் குறி வைத்தது.

மாடசாமி வெடவெடத்துப் போனான். மகனைக் காப்பாற்றப் போனால் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள முடியாது என்ற பயம் வந்துவிட்டது அவனுக்கு. குலை நடுங்கியதால் ஏதேதோ உளறிக் கூக்குரலிட்டான்.

நொடிப்பொழுதில் என்னென்னவோ நடந்து விட்டது.

தாய்ப்பசு முளைக் கயிற்றை அறுத்துக்கொண்டு, நாலுகால் பாய்ச்சலில் போய்க் குமரனுக்கும் காளை மாட்டுக்கும் இடையில் நின்றது. காளைமாட்டின் கொம்புகள் அதன் கழுத்தில் பாய்ந்தன. குறுக்கே விழுந்த பசுவைக் கண்டவுடன் காளையின் சீற்றம் பசுவின் பக்கம் திரும்பியது. அது அலறிய அலறலில், ‘கொலைக்குக் கொலை! பழிக்குப் பழி’ என்ற ஆவேசம் குமுறியது.

தாய்ப் பசுவும் பதிலுக்கு அதைப் பார்த்துக் கதறியது. “சீ! நீ என்ன, மனிதனைப் போல் கேவலமாய் நடந்துகொள்கிறாய்? குமரனும் என் பால் குடித்து வளர்ந்தவன்!.... உனக்கு ஏன் இவ்வளவு வெறி வந்துவிட்டது?’’ என்று ஆத்திரத்தோடு கதறியது.

மனிதனான மாடசாமிக்கு எதுவும் புரியவில்லை! மாடுகள் புரிந்துகொண்டு கண்ணீர் வடித்தன.

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. பசுவின் தாய்மை உணர்வு வெளிப்படும் சந்தர்ப்பங்கள் இரண்டினை எழுதுக.
2. **பசுவின் மடியும் பால் சுரந்தது; கண்களில் நீரும் வழிந்தது.** என்ற வரிகள் உமக்கு ஏற்படுத்தும் உணர்வு எத்தகையது என்பதைத் தெளிவுபடுத்துக.
3. காளை குமரனைத் தாக்குவதற்குக் காரணமாய் அமைந்த சம்பவத்தை விளக்குக.
4. பின்வரும் கூற்றுகள் இடம்பெறும் சந்தர்ப்பங்களை விளக்குக.
   **அ) கிடாரிக் கண்ணுக்குட்டியா, இருந்தாலும் பரவாயில்லை வளர்ந்தாலும் பால்கொடுக்கும்.**
   **ஆ) குமரனும் என் பால் குடித்து வளர்ந்தவன். உனக்கு ஏன் இவ்வளவு வெறி வந்து விட்டது.**
5. 'ஜீவ காருண்யத்தின் தேவையை இச்சிறுகதை வலியுறுத்துகின்றது' ஆராய்க.

## குழுமச் செயற்பாடு

இச்சிறுகதையை நாடகமாக நடித்துக் காட்டுவோம்.

## திறன் வளர் செயற்பாடு

மனித நேயத்தைக் கருவாகக் கொண்டு, குட்டிக்கதை ஒன்றினை ஆக்குவோம்.

# 6 கிட்கிந்தைப் படலம்

**கம்பர்**

சோழர் காலத்தைச் சேர்ந்த கவிச்சக்கரவர்த்தியே கம்பர் ஆவார். வட மொழியில் வால்மீகி பாடிய இராம கதையை தமிழ்ப் பண்பாட்டு செல்நெறியைத் தழுவி இராமாயணமாகப் பாடியுள்ளார். கம்பரின் புலமையை மையப்படுத்திப் பல்வேறு புனைவுகள் வழக்கில் உள்ளன. ஏர் எழுபது, சடகோபர் அந்தாதி, சரஸ்வதி அந்தாதி, திருக்கை வழக்கம் முதலிய சிற்றிலக்கியங்களையும், தனிப்பாடல்கள் சிலவற்றையும் இவர் பாடி இருப்பதற்கான சான்றுகள் உள்ளன.



கார்காலம் முடிந்ததும் சுக்கிரீவன் தன் சேனைகளுடன் வராது இருந்தான். இதனை அறிந்த இராமன் சினம் கொள்கிறான். எனவே இலக்குமணனைக் கிட்கிந்தைக்கு அனுப்பி வைக்கிறான். கிட்கிந்தையை அடைந்த இலக்குமணனைப் பற்றி வானரங்கள் அங்கதனுக்குத் தெரிவிக்கின்றனர். அங்கதன் சுக்கிரீவனிடம் செல்கிறான்.

சுக்கிரீவனோ மது மயக்கத்தில் அந்தப்புரத்தில் கிடக்கிறான். எனவே அங்கதனும், அநுமானும் தாரையிடம் சென்று இலக்குமணனின் வருகையை அறிவிக்கின்றனர். இலக்குமணன் வரும் வழியை வானரங்கள் கற்களைக் கொண்டு மூடிவிட இதனை உடைத்து விட்டு உள்ளே வருகிறான். இலக்குமணனின் வருகையை நிறுத்த தாரை தன் சேடியர்களுடன் முன்னே நிற்கின்றாள். இப்பெண்களைக் கண்டு இலக்குமணன் வெட்கப்பட்டு நிற்கின்றான். இப்பின்னணியை விபரிக்கும் வகையில் பின்வரும் பாடல்கள் அமைந்துள்ளன.

**கார்காலம் கடந்தும் சுக்கிரீவன் வராமையால், இராமனும், இலக்குமணனும் ஆலோசித்தல்**

1. அன்னகாலம் அகலும் அளவினில்,
முன்னை வீரன், இளவலை, ''மொய்ம்பினோய்!
சொன்ன எல்லையின் ஊங்கினும் தூங்கினன்;
மன்னன் வந்திலன்; என் செய்தவாறு அரோ?''

**அரும்பதங்கள்**

(**முன்னம்** - *சிங்கம்;* **மொய்ம்பு** - *வலிமை;* **ஊங்கு** - *மேலும்;* **தூங்குதல்** - *இருத்தல் / தாமதித்தலுமாம்)*

**பொழிப்புரை**

*அத்தகைய கார்காலம் முடிந்த அளவில், மூத்தவனும், வீரனும், சிங்கம் போன்றவனுமான இராமன், தன்தம்பி இலக்குமணனை நோக்கி, ''வலிமை யானவனே! நாம் கூறிய கார்கால எல்லையாகிய நான்கு மாதங்கள் கழிந்தும் வாராது, அதற்கு மேலும் காலம் தாழ்த்திக்கொண்டிருக்கிறானே இந்த மன்னனான சுக்கிரீவன்? இவன் என்ன செய்கிறான்'' என்று கேட்டான்.*

*தான் சொன்ன சொல்லைக் காப்பாற்றாததாலும், காலம் தாழ்த்தியதாலும், செய்ந்நன்றி மறந்ததாலும், சுக்கிரீவன் என்ன செய்து கொண்டிருக்கிறான் என்றான் இராமன் என்பதாம்.*

*2.* 'பெறல் அரும் திருப்பெற்று, உதவிப் பெருந்
திறன் நினைந்திலன்; சீர்மையின் தீர்ந்தனன்;
அறம் மறந்தனன்; அன்புகிடக்க; நம்
மறன் அறிந்திலன்; வாழ்வின் மயங்கினான்.

**அரும்பதங்கள்**

**திரு** - *அரசச் செல்வம்;* **திறன்** - *நன்றி / தகுதி;* **சீர்மை** - *ஒழுக்கம் / மேன்மை;* **அறம்** - *செய்ந்நன்றி;* **மறன்** - *மறம் / வீரம்;* **மயங்குதல்** - *அமிழ்ந்து கிடத்தல்;* **தீர்தல்** - *விட்டு நீங்குதல்.)*

**பொழிப்புரை**

*''யாவராலும் எளிதில் பெறுவதற்கு அரிய அரசச் செல்வத்தையும், இழந்த மனைவியையும், நம் உதவியால் பெற்ற பெரிய தகுதியை நினைவிற் கொள்ளாது மறந்து விட்டான் போலும்'' அவன் தனது நல்லொழுக்கமான மேன்மையிலிருந்து நீங்கிவிட்டான்; அவன் நன்றியறிதல் என்ற தருமத்தை முற்றும் மறந்து போயினான்; அவன் நம்முன் செய்து கொண்ட நட்பு ஒரு புறம் இருக்கட்டும்; நமது வீரத்தையும், போராற்றலையும் அறியவில்லையே? புதிதாகத் திரும்பக் கிடைத்த மனைவியுடனும், அரசுடனும் இனிதாக சுகபோகத்தில் திளைக்கிறான் போலும்!''.*

**இராமன் இலக்குமணனைக் கிட்கிந்தைக்குச் சென்று வரப் பணித்தல்.**

*3.* ‘‘நன்றிகொன்று, அரு நட்போடு நார் அறுத்து
ஒன்றும் மெய்மை சிதைத்து, உரை பொய்த்துளார்
கொன்று நீக்குதல் குற்றத்தின் நீங்குமால்;
சென்று மற்றுஅவன் சிந்தையைத் தேர்குவாய்.’’

### அருஞ்சொற்கள்

*(**கொல்லுதல்** - சிதைத்தல்; **நார்** - அன்பு / பிணிப்பு / பாசம் / கயிறு; **ஒன்றுதல்** - பொருந்துதல்; **மெய்மை** - வாய்மை; **சிந்தை** - மனக்கருத்து; **தேர்தல்** - ஆராய்ந்து தெரிந்துகொள்ளுதல்.)*

### பொழிப்புரை

*‘‘நாம் செய்த உதவியை மறந்தான், நாம் நீட்டிய பெறுதற்கரிய நட்புக்கரத்தையும் அறுத்து விட்டு எல்லோருக்கும் பொருந்துவதான வாய்மையையும் குலைத்து விட்டான். தான் சொன்ன சொல்லைக் காப்பாற்றாதும் தவிர்த்து விட்டான். எனவே இவ்வளவு குற்றங்களைச் செய்தவனைக் கொன்று தீர்த்தல் கூடக் குற்றத்தின் பாற்படாது. அதைச் செய்வதன் முன், நீ சென்று அவனது உள்ளக்கருத்தினை அறிந்து வருவாயாக!’’ என்றான் இராமன்.*

*4.* வானரங்கள் வெருவி, மலைஒரீஇ
கான் ஒருங்குபடர, அக்கார்வரை,
மீன் நெருங்கிய வானகம் மீன்எலாம்
போனபின், பொலிவற்றது போன்றதே.

### அருஞ்சொற்கள்

*(**வெருவி** - அஞ்சி / பயந்து; **ஒரீஇ** - நீங்கி; **படர்தல்** - சேர்தல்; **கார்** - மேகம்; **மீன்** - நட்சத்திரங்கள்; **பொலிவு** - அழகு)*

### பொழிப்புரை

*இவ்வாறு குரங்குகள் இலக்குமணனின் வருகை கண்டு அஞ்சி, கிட்கிந்தை மலையைவிட்டு நீங்கி, எல்லாம் ஒன்று சேர்ந்து காட்டுக்குள் சென்று ஒளிந்து கொண்டதால் அந்தக் கரியமேகம் போன்ற கிட்கிந்தை மலை, நட்சத்திரங்கள் நெருங்கியிருந்த ஆகாயம், அந்த நட்சத்திரங்கள் எல்லாம் மறைந்துபோன பின், எப்படி அழகு அற்று விளங்குமோ, அவ்வாறு பொலிவற்று விளங்கியது.*

## 5. இலக்குமணன் நகரத்தினுள் நுழைதல்

அன்ன காலையின், ஆண்தகை ஆளியும்,
பொன்னின் நல்நகர் வீதியில் புக்கனன்;
சொன்ன தாரையைச் சுற்றினர் நின்றவர்
''என்ன செய்வது? எய்தினன்' என்றனர்.

### அருஞ்சொற்கள்

*(**ஆண்தகை** - ஆடவரிற் சிறந்தோன்; **ஆளி** - சிங்கம்; **சொன்ன** - இடித்துரைத்த; **பொன்** - அழகு)*

### பொழிப்புரை

*அப்பொழுது, ஆண்களில் சிறந்தவனும் சிங்கம் போல்பவனுமாகிய இலக்குமணன் அழகும் சிறப்பும் மிக்க கிட்கிந்தை நகரத்தின் வீதியில் நுழையலானான். முன்பு கடிந்துரைத்துக் கொண்டிருந்த தாரையைச் சுற்றி நின்ற வானரர்கள் இது கண்டு ''இப்பொழுது இலக்குமணன் நகருக்குள் வந்துவிட்டானே. இனி நாம் என்ன செய்வது?'' என்று தாரையிடம் ஆலோசனை கேட்டனர்.*

## *6.* அப்பொழுது அனுமான் ஓராலோசனை கூறுதல்

''அனை! எதிர்ந்து இவண் ஆய்வளையாரோடும்
மனையின் வாயில் வழியினை மாற்றினால்,
நினையும் வீரன் அந் நீள் நெறி நோக்கலான்;
வினையம் ஈது'' என்று, அனுமன் விளம்பினான்.

### அருஞ்சொற்கள்

*(**அனை** - அன்னை; **ஆய்** - ஆராய்ந்த; **எதிர்ந்து** - எதிரில் சென்று; **மாற்றுதல்** - தடைசெய்தல்; **நினையும்** - சிந்திக்கும் ஆற்றல்; **வினையம்**-உபாயம் / தந்திரம்.)*

### பொழிப்புரை

*அப்போது, அனுமன் தாரையை நோக்கி ''அன்னையே! தாங்கள், ஆராய்ந்து தெரிந்து எடுக்கப்பட்ட வளையல்களை அணிந்த சில பெண்களுடன், அவன் வரும் வழியில் எதிரில் சென்று அரண்மனையின் வாயிலில் அவனைத் தடுத்துவிட்டால், சிந்தித்து முடிவெடுக்கும் இலக்குமணன் பெண்கள் நிற்கின்ற நீண்டவழியில் செல்லுவதை எண்ணமாட்டான். இப்போது நாம் செய்யக்கூடிய தந்திரம் இதுவேயாகும்''. என்றான்.*

## 7. தாரை அவ்வாறே செய்தல்

''நீரெலாம் அயல் நீங்குமின்; நேர்ந்து, யான்
வீரன் உள்ளம் வினவுவல்'' என்றலும்,
பேர நின்றனர் யாவரும்; பேர்கலாத்
தாரை சென்றனள் தாழ்குழலாரொடும்.

### அருஞ்சொற்கள்

*(**அயல்** - அப்பால்; **நீங்குதல்** - அகலுதல்; **நேர்தல்** - எதிரில் செல்லுதல்; **உள்ளம்** - மனக்கருத்து; **பேர** - விலகி/அகன்று/ ஒதுங்கி; **பேர்கலாத** - பின்னிடாத)*

### பொழிப்புரை

*தாரை, அங்கதன் முதலிய வானர வீரர்களை நோக்கி, ''சரி நீங்களெல்லாம் சற்று அப்பால் அகன்று செல்லுங்கள்; நான் இலக்குமணனிடம் சென்று, அவனது உள்ளக் கருத்தைக்கேட்டு அறிவேன்'' என்றாள்; உடனே எல்லோரும் சற்று ஒதுங்கி நின்றனர்; தனது உறுதியான கொள்கையிலிருந்து பின்வாங்காத பெருமையை உடைய தாரை, நீண்டு தாழ்ந்து தொங்குகின்ற கூந்தலை உடைய தன் தோழிப்பெண்களுடன், இலக்குமணனை நோக்கிச் சென்றாள்.*

## *8.* தாரை இலக்குமணனைத் தடுப்பதுபோல் நிற்றல்.

உரைசெய் வானரவீரர் உவந்து உறை
அரசர்வீதி கடந்து, அகன்கோயிலைப்
புரசையானை அன்னான் புகலோடும், அவ்
விரைசெய் வார்குழல் தாரை, விலக்கினாள்.

### அருஞ்சொற்கள்

*(**புரசை** - கழுத்திலிடும் கயிறு; **உரை** - புகழ்; **அகன்** - இடம் அகன்ற; **கோயில்** - அரண்மனை; **விரை** - நறுமணம்; **வார்** - நீண்ட; **குழல்** - கூந்தல்; **விலக்குதல்** - குறுக்கிடுதல்/ தடைசெய்தல்/ வழிமறித்தல்)*

### பொழிப்புரை

*கழுத்திலிடும் கயிறுடைய யானையைப் போன்ற இலக்குமணன், எல்லோராலும் புகழ்ந்து சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற படைத் தலைவர்களான வானர வீரர்கள் மகிழ்ச்சியுடன் தங்கியிருக்கும் இராச வீதியினைக் கடந்து சென்று, சுக்கிரீவன் வாழும் இடமகன்ற அரண்மனையுள் புகுகின்ற சமயத்தில், இயற்கையிலேயே நறுமணம் கமழும் நீண்ட கூந்தலையுடைய தாரை குறுகிட்டு, இலக்குமணனை வழிமறித்தாள்.*

**9.** விலங்கி மெல்லியல், வெள் நகை, வெள்வளை,
இலங்கு நுண்ணிடை, ஏந்து இள மென் முலை,
குலம்கொள் தோகை மகளிர் குழாத்தினால்,
வலம்கொள் வீரன் வருவழி மாற்றினாள்.

### அருஞ்சொற்கள்

*(**விலங்கு** - குறுக்கிட்டு; **நகை** - பற்கள்; **ஏந்து** - உயர்ந்த; **குலம்** - நல்லினம்/ நற்குடிப்பிறப்பு; **வலம்** - வெற்றி; **மாற்றுதல்** - தடுத்தல்)*

### பொழிப்புரை

*அவ்வாறு குறுக்கிட்டு, மென்மையான தன்மையையும், வெள்ளிய பற்களையும், சங்குகளால் ஆகிய வெண்மையான வளையல்களையும், மின்னல் போல் ஒளிர்கின்ற நுட்பமான இடையையும், உயர்ச்சியும், இளமையும் கொண்ட மெல்லிய கொங்கைகளையும், நற்குடியில் பிறந்த மயில்போலும் சாயலையும் உடைய, வானரமகளிரின் கூட்டத்தினால், வெற்றியும் மேன்மையும் பொருந்திய இலக்குமணன் வருகின்ற அந்த வீதியின் நீண்ட வழியைத் தாரை தடுத்தாள்.*

*10.* **வானர மகளிர் குழுவின் தோற்றம்**

வில்லும் வாளும் அணிதொறும் மின்னிட
மெல் அரிக்குரல் மேகலை ஆர்த்து எழ,
பல்வகைப் புருவக்கொடி பம்பிட
வல்லிஆயம் வலத்தினில் வந்ததே.

### அருஞ்சொற்கள்

*(**மின்னிட** - ஒளிவிட்டுப்பிரகாசிக்க; **எழ** - ஒலிக்க; **பம்புதல்** - செறிந்து தோன்றுதல்/ நிரம்பிநிற்றல்; **பலம்** - வெற்றி; **ஆயம்**- சேனை/ திரள்; **அரிக்குரல்** - பறைமுழக்கம்; **வல்லி** - கொடி / மகளிர்; **அரி** - பரற் கற்களுமாம்)*

### பொழிப்புரை

*அம்மகளிர் அணிந்திருகின்ற ஆபரணங்கள், விற்படை போலவும், வாட்படை போலவும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கவும், அவர்கள் காலில் அணிந்துள்ள சிலம்புகளின் உள்ளிருக்கும் பரல்கற்கள் ஒலிசெய்யவும், அவர்கள் இடையில் அணிந்திருக்கும் மேகலை முரசம்போல் ஒலிஎழுப்பவும், பலவகைப்பட்ட கொடிகள் போல அவர்கள் புருவங்கள் விளங்கவும், மகளிரின் சேனைபோன்ற திரள் வந்து, இலக்குமணனைச் சுற்றிவளைத்துச் சூழ்ந்து கொண்டது.*

### *11.* இலக்குமணன் அவர்களைப் பார்க்க அஞ்சுதல்

ஆர்க்கும் நூபுரங்கள் பேரி, அல்குலாம் தடந்தேர் சுற்ற,
வேற்கண் விற்புருவம் போர்ப்ப, மடந்தையர் மிடைந்த போது
பேர்க்க அரும சீற்றம்பேர, முகம்பெயர்த்து ஒதுங்கிற்றல்லால்
பார்க்கவும் அஞ்சினான், அப்பருவரை அனைய தோளான்.

**அருஞ்சொற்கள்**

*(**பரு** - பருத்த; **வரை** -மலை; **நூபுரம்** - கால்சிலம்பு; **சுற்ற** - சூழ; **போர்ப்ப** - மறைக்க; **மிடைதல்** - நெருங்கிவருதல்; **போர்த்தல்** - மாற்றுதல்; **போதல்** - நீங்குதல்; **பெயர்த்தல்** - திருப்பிக்கொள்ளுதல்; **பேரி** - பேரிகை/ முரசம்/ பறை; **ஆர்த்தல்** - ஒலித்தல்)*

**பொழிப்புரை**

*அவ்வாறு அவ்வானர மகளிர் கூட்டம், தங்கள் கால்களில் அணிந்திருக்கும் சிலம்பின் ஒலி பேரிகைபோல் ஒலிக்கவும், அவர்கள் அல்குல் பெரிய தேர்களைப் போல் சூழ்ந்து கொள்ளவும் வேற்படையாகிய கண்களும், விற்படையாகிய புருவங்களும் அவனை வந்து மறைத்துக் கொள்ளவும், தன்னை நெருங்கி வந்த போது, நீக்க முடியாத பெருங்கோபம் கொண்டு வந்த, பருத்த மலை போன்ற தோள்களையுடையவனான இலக்குமணன், இப்பொழுது அக்கோபம் சற்றுத் தணியப் பெற்று, தன்முகத்தை வேறுபக்கம் திருப்பிக் கொண்டு, தன் பின்னால் நிற்கும் அம்மகளிரை ஏறெடுத்துப் பார்ப்பதற்குக்கூட அச்சமுற்று, உள்ளம் கூசி, ஒதுங்கி நின்றான்.*

### *12.* தாரை கூறத் தொடங்குதல்

தாமரை வதனம் சாய்த்து,
  தனு நெடுந் தரையின் ஊன்றி
மாமியர் குழுவில் வந்தானாம்
  என, மைந்தன் நிற்ப
பூமியில் அணங்கு அனார்தம்
  பொது விடைப்புகுந்து, பொன்தோள்
தூ மன நெடுங்கண் தாரை,
  நடுங்குவாள், இனைய சொன்னாள்.

**அருஞ்சொற்கள்**

*(**வதனம்** - முகம்; **பொன்** - அழகிய; **அணங்கு** - தெய்வப்பெண்; **பொதுவிடை** - நடுவில்; **மைந்தன்**- இளையோன்; **தனு** - வில்; **சாய்த்தல்** - வளைத்தல் / குனிதல்)*

### பொழிப்புரை

*இணையேனாகிய இலக்குமணன், தனது தாமரை போன்ற முகம் சற்றுத்தாழ, தலைகுனிந்து, தன்னுடைய பெரிய வில்லைத் தரையில் ஊன்ற வைத்து, மாமியர்கள் சூழ்ந்துள்ள கூட்டத்தில் வந்த புது மருமகனைப் போல் கூச்சமுற்று நின்றான். அப்பொழுது, அழகிய தோள்களை உடையவளும், தூய்மையான மாசற்ற உள்ளத்தையுடையவளும், நீண்ட கண்களையுடையவளுமான தாரை, மண்ணுலகில் வந்து தோன்றிய தேவமகளிர் போன்ற வானரப்பெண்கள் கூட்டத்தின் இடையில் புகுந்து நின்று கொண்டு, சற்று நடுக்கத்துடன், கீழ்க்கண்டவற்றைக் கூறத் தொடங்கினாள்.*

*13.* **தாரை இலக்குமணனைப் புகழ்ந்து பேசுதல்**

''அந்தம்இல் காலம் நோற்ற
 ஆற்றல் உண்டாயின் அன்றி,
இந்திரன் முதலினோர்க்கும்
 எய்தலாம் இயல்பிற்றாமோ?
மைந்த! நின்பாதம்கொண்டு,
 எம் மனை வரப்பெற்று வாழ்ந்தேம்;
உயந்தனம்; வினையும் தீர்ந்தேம்;
 உறுதி வேறு இதனின் உண்டோ?''

### அருஞ்சொற்கள்

*(**மைந்து** - வலிமை; **மைந்தன்** - வலிமைமிக்கவீரன்; **நோற்றல்** - தவம்செய்தல்; **எய்தல்** -வருகை; **உறுதி** - நன்மை; **அந்தம்** -முடிவு)*

### பொழிப்புரை

*''வீரனே! அளவற்றகாலம் தவம்புரிந்தாலன்றி நீ உன் திருவடி நோக, எங்கள் மனைக்கு எழுந்தருளியிருப்பது சாத்தியமாகுமோ? நாங்கள் செய்த தவத்தின் பயனால் நீ வரப்பெற்றதால் இப்பிறப்பில் நல்வாழ்வும், மறுமையில் நற்கதியும் பெற்று, எங்கள் தீவினைகளெல்லாம் நீங்கப்பெற்றோம். இதனைக் காட்டிலும் எங்களுக்கு வேறு நன்மை கிடைக்கற்பாலதோ?'' என்றாள் தாரை.*

*14.* ''வெய்தின் நீ வருதல் நோக்கி வெருவி நின் சேனைவீரர்
செய்திதான் உணர்கிலாது, ''திருஉளம் தெரித்தி'' என்றார்;
ஐய! நீ ஆழி வேந்தன் அடியிணை பிரிகிலாதாய்,
எய்தியது என்னை?'' என்றாள், இசையினும் இனிய சொல்லாள்.

### அருஞ்சொற்கள்

*(**வெய்து** -வெம்மை/கோபம்; **வெருவி** -அஞ்சி; **தெரித்தல்** - அறிந்து கூறுதல்; **செய்தி** -செயல்/ காரணம்)*

## பொழிப்புரை

*''வீரனே! நீ மிக்க சீற்றம் கொண்டு வருவதைக் கண்டு, உன்னுடைய வானர வீரர்கள் அச்சம் கொண்டுள்ளனர்; நீ எதற்காக வந்திருக்கிறாய் என்பதை அவர்களால் அறிந்துகொள்ளமுடியவில்லை. அவர்கள் என்னை அணுகி, ''இலக்குமணனது உள்ளக் கருத்தை அறிந்து எங்களுக்குத் தெரிவியுங்கள்'' என்று கூறினார்கள். எனவே! மைந்தனே! நீ எப்பொழுதும் ஆணைச் சக்கரத்தை உடைய இராமபிரானின் திருவடிகளை விட்டு இமைப்பொழுதும் பிரியாத இயல்புடையவனாயிற்றே? இப்பொழுது அவனைப் பிரிந்து, நீ மட்டும் தனியாக இங்கு வந்திருப்பதன் காரணம் என்ன? என்று கேட்டாள், இசைப்பாட்டைவிட இனிமையான சொற்களைப் பேசும் தாரை.*

## *15.* இலக்குமணன் தாரையை நோக்குதல்

''ஆர்கொலோ உரைசெய்தார்?''
என்று அருள்வர, சீற்றம் அஃகக
பார்குலாம் முழு வெண் திங்கள்,
பகல்வந்த படிவம் போலும்,
ஏர்குலாம் முகத்தினாளை,
இறைமுகம் எடுத்து நோக்கி,
தார்குலாம் அலங்கல் மார்பன்,
தாயரை நினைந்து நைந்தான்.

## அருஞ்சொற்கள்

(**அலங்கல்**- *அசைத்தல்/ ஒளிவிடுதல்;* **அஃகல்** - *குறைதல்/ தணிதல் / அகலுதல்;* **பார்**- *பூமி;* **ஏர்** - *அழகு;* **குலாம்** - *விளங்கும் /திகழும்/குலவும்;* **இறை** *-சிறிது;* **எடுத்து** - *உயர்த்தி/நிமிர்த்தி;* **நைதல்**- *வருந்துதல்;* **வர –** *தோன்ற/ வெளிப்பட)*

## பொழிப்புரை

*மலர்மாலைகள் அசைந்தாடி ஒளிவீசும் மார்பினை உடையவனான இலக்குமணன், ''இத்தகைய இனிய சொற்களைச் சொன்னவர் யார்?'' என்று பார்க்க வேண்டித் தன் முகத்தைச் சிறிது உயர்த்திப் பார்த்தான். அந்த அளவில் அவன் கோபம் தணிந்தது; அருள் வெளிப்பட்டது. காரணம் அங்கே நின்றது, ஒரு களங்கமும் அற்ற முழு வெண்மதி, நிலத்தில், அதுவும் பகலில் தோன்றினால் எப்படி ஒளி குறைந்து தோன்றுமோ, அதுபோல ஒளி மழுங்கிய முகத்துடன் வாலியின் மனைவியான தாரை, விதவைக் கோலத்தில் தோன்றினாள். அதைக் கண்டதும், இலக்குமணன் தன் தாயாராகிய சுமித்திரை, கோசலை முதலியோரும் இவ்வாறு தானே கைம்மைக் கோலத்தில் இருப்பார்கள் என்று எண்ணித் தன் மனம் மிகவும் வருந்தினான்.*

16. **தாரையை நோக்கிய இலக்குமணன் நிலை.**

மங்கல அணியை நீக்கி, மணிஅணிதுறந்து, வாசக்
கொங்குஅலர்கோதை மாற்றி, குங்குமம் சாந்தம் கொட்டாப்
பொங்கு வெம்முலைகள், பூசக்கழுத்தொடு மறையப் போர்த்த,
நங்கையைக் கண்ட வள்ளல், நயனங்கள் பனிப்ப நின்றான்.

**அருஞ்சொற்கள்**

(**மங்கள அணி** - *தாலி / மங்கல நாண் / திருமாங்கல்யம்;* **கொங்கு** - *தேன்* *கோதை / மாலை;* **சாந்தம்** - *சந்தனக்குழம்பு;* **கொட்டா** - *பூசப்படாத;* **பொங்கு** - *பருத்த;* **பூசம்** - *கமுகுமரம்;* **நயனங்கள்** - *கண்கள்;* **பணிப்ப** - *சிந்த / சொரிய.)*

**பொழிப்பு**

*தன்னுடைய மங்கல நாணையும் நீக்கிவிட்டு, இரத்தினங்கள் பதித்துச் செய்யப்பெற்ற மற்ற அணிகலன்களையும் தவிர்த்து, நறுமணம் பொருந்தியதும், தேன் பெருகுவதுமான மலர்மாலைகளையும் அணியாது விடுத்து, குங்குமம், சந்தனம் ஆகிய கலவைகளைத் தன்மார்பில் பூசிக்கொள்ளாது, பருத்த, வெம்மையுடைய கொங்கைகளைத் தன் பாக்குமரம் போன்ற கழுத்தோடு சேர்த்துத் தன் மேலாடையால் மூடிக்கொண்டு தன் எதிரில் வந்து நின்ற தாரையை, கருணை மிகுந்தவனான இலக்குமணன் கண்டதும், தாரையின் நிலையை எண்ணியும், தன் தாயாரின் நிலையை எண்ணியும் தன் கண்கள் கண்ணீர் சிந்தக் கலங்கி நின்றான்.*

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. இராமன் இலக்குமணனிடம் சுக்கிரீவன் குறித்து ஆவேசப்பட்டு முறையிடுபவற்றை எழுதுக.
2. இலக்குமணனைத் தடுத்து நிறுத்த அனுமன் தாரையிடம் கூறிய உபாயம் என்ன?
3. தாரை மகளிர் குழாம் சூழ வந்து இலக்குமணனை வழிமறிக்கும் காட்சியை விபரிக்குமாற்றிலுள்ள சிறப்புக்களை விளக்குக.
4. பின்வரும் அடிகளின் சிறப்புக்களை விளக்குக.
   **(அ) 'தாமரை வதனம் சாய்ந்து, தனு நெடுந் தரையில் ஊன்றி'**
   **(ஆ) 'தார் குலாம் அலங்கல் மார்பன்'**
5. பின்வரும் கூற்றுகள் இடம்பெறும் சந்தர்ப்பங்களை விளக்குக.
   **அ. உரை பொய்த்துளார்க் கொன்று நீக்குதல் குற்றத்தின் நீங்குமால்**
   **ஆ. ''மைந்த நின்பாதம் கொண்டு, எம்மனை வரப்பெற்று வாழ்ந்தேம்''**
   **இ. ஐய நீ ஆழி வேந்தன் அடி இணை பிரிகலாதாய் எய்தியது என்னை? என்றாள்.**

## குழுமச் செயற்பாடு

**இப்பகுதியை நாடகப் பிரதியாக்கம் செய்து நடித்துக் காட்டுவோம்.**

## திறன் வளர் செயற்பாடு

**தாரை, இலக்குமணன் ஆகியோரின் செயற்பாடுகள் தொடர்பான விமர்சனங்களை எழுத்து வடிவத்தில் அல்லது பேச்சு வடிவத்தில் முன் வைப்போம்.**

# 7 விவேக சிந்தாமணி

இந்நூல் எந்தக் காலத்திற்கு உரியது, யாரால் பாடப்பட்டது என்பது தொடர்பான தகவல்கள் கிடைக்கவில்லை. நாயக்கர் காலத்திற்குரிய சிற்றிலக்கியம் என்றும் கூறுவர். நீதிக்கருத்துக்கள், சிருங்காரச் சுவை நிரம்பிய பாடல்களை உள்ளடக்கிய இவ்விலக்கியம், தனிப்பாடல்களின் தொகுப்பு என்ற கருத்தும் நிலவுகின்றது.



இப்பாடல்கள் பெண்ணின் அழகை நாகரிகமான முறையில் விபரிக்கின்றன. கவிஞனின் சொல்லாட்சியும் கற்பனையும் இரசித்து இன்புறத்தக்கன

### வந்தது வான்உறு மதியமோ!

அ. தேன்நுகர் வண்டு மதுதனை உண்டு
தியங்கியே கிடந்ததைக் கண்டு
தான்அதைச் சம்பு வின்கனி என்று
தடங்கையில் எடுத்துமுன் பார்த்தாள்;
வான்உறு மதியம் வந்ததுஎன்று எண்ணி
மலர்க்கரம் குவியுமென்று அஞ்சிப்
போனது வண்டோ பறந்ததோ பழந்தான்
புதுமையோ இது எனப் புகன்றாள்.

### பொருள்

*தேனை உண்ணும் இயல்புடைய வண்டுகள் மலர்களில் உள்ள தேனையுண்டு மயங்கிக் கிடந்தன. அவற்றைக் கண்டாள் ஒரு மங்கை. அவற்றை நாவல் பழங்கள் என நினைத்து அவற்றுள் ஒன்றைத் தன் பெரிய கையில் எடுத்துப் பார்த்தாள். அப்போது அந்த வண்டு அவளது முக அழகால் வானத்தில் உலாவும் சந்திரன் வந்தது என எண்ணி, (அவளது) கையான தாமரை மலர் குவிந்துவிடும் என அஞ்சிப் பறந்து போய்விட்டது. பின்னர் அவள் பறந்து போனது வண்டோ, அன்றிப் பழமோ வேறு என்ன புதுமையோ எனச் சொன்னாள்.*

#### அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| நுகர் (தல்) | - | *உண்(ணு)* |
| மது | - | *கள் / தேன்* |
| தியங்கி | - | *மயங்கி* |
| தடங்கை | - | *அகன்ற கை* |
| வான் | - | *வானம்* |
| மதியம் | - | *நிலவு* |
| புகன்றாள் | - | *சொன்னாள்* |

#### பொருளுணர் திறன் செயற்பாடு

*1. கவிஞனின் கற்பனையாற்றலை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.*

*2. இச் செய்யுளில் இடம்பெறும் அணிகளைக் குறிப்பிட்டு அதன் சிறப்பினை விளக்குக.*



**கண்டது கெண்டையோ!**

ஆ. தண்டு உலாவிய தாமரைப் பொய்கையில்
மொண்டு நீரை முகத்தருகு ஏந்தினாள்;
'கெண்டை' 'கெண்டை' யெ னக்கரை ஏறினாள்;
கெண்டை காண்கிலள் நின்று தயங்கினாள்.

**பொருள்**

*ஒருத்தி கொடிகளை யுடைய தாமரைப் பொய்கையில் உள்ள தண்ணீரைக் கையால் முகந்து தன் முகத்தருகே ஏந்திப் பார்த்தாள். அதில் தெரிந்த தன் நிழலைப் பார்த்து 'கெண்டை மீன், கெண்டை மீன்!' எனக் கூவிக் கொண்டே (நீரைக் கீழே விட்டுத்) தரையில் ஏறிப் பார்த்தபோது அக்கெண்டை மீனைக் காணாமல் நின்று மயங்கினாள்.*

**அரும்பதங்கள்**

பொய்கை - *நீர்த்தடாகம்*
மொண்டு - *அள்ளி*
கெண்டை - *ஒரு வகை மீன்*

**பொருளுணர் திறன் செயற்பாடு**

*1. நீரில் தலைவி கண்ட காட்சி யாது?*

*2. கண்களின் அழகினை கவிஞர் விபரிக்குமாற்றிலுள்ள நயத்தினை விளக்குக.*

## கலகமே செய்யும் கண் இதுவாம்

இ. அலகு வாள்விழி ஆயிழை நன்னுதல்
திலகம் கண்டுஎதிர் செஞ்சிலை மாரனும்
கலக மேசெயும் கண்இது வாம்என
மலரம்பு ஐந்தையும் வைத்து வணங்கினான்.



### பொருள்

வாள் போன்ற கண்களையுடைய எம் கன்னியின் நல்ல நெற்றியில் உள்ள பொட்டினது அழகைக் கரும்பு வில்லையுடைய மன்மதன் பார்த்தான். இவளுடைய கண் கலகம் விளைவிப்பதோ என்று எண்ணித் தன் கையில் உள்ள மலர் அம்புகள் ஐந்தையும் அவள் முன்னர் வைத்து வணங்கினான்.

**பொருளுணர் திறன் செயற்பாடு**

1. *இப்பாடலில் இடம்பெறும் உவமை அணியின் சிறப்பினை விளக்குக.*
2. *மலர் அம்பு ஐந்தையும் வைத்து வணங்கினான் என்ற அடிகளின் பொருத்தப் பாட்டினை விளக்குக.*

**குழுமச் செயற்பாடு**

**''தேனுகர் வண்டு''** என்ற பாடலை அடிப்படையாகக் கொண்டு (50 சொற்களுக்குக் குறையாமல்) நயவுரை எழுதுவோம்.

**திறன் வளர் செயற்பாடு**

பெண்களின் அழகை இலக்கியச்சுவையோடும், நாகரிகமாகவும் விபரிக்கும் பாடல்களைத் திரட்டி எழுதி அவற்றின் சிறப்புக்கள் பற்றி வகுப்பறையில் கலந்துரையாடுவோம்.

# 8 உரிமையும் கடமையும்

**டாக்டர் மு. வரதராசன் (1912 - 1974)**

தமிழகத்தின் திருப்பத்தூரில் பிறந்தவர். தமிழகத்தில் முதன்முதலாக கலாநிதிப்பட்டம் பெற்ற தமிழர் என்ற பெருமையும் இவரைச் சாரும். அத்துடன் அமெரிக்கப் பல்கலைக்கழகம் ஒன்றில் டி.லிட் சிறப்புப்பட்டம் பெற்ற முதல் தமிழறிஞராகவும் விளங்குகின்றார். ஆசிரியர், விரிவுரையாளர், துணை வேந்தர் முதலான பணிகளையாற்றிய இவர் தமிழ், ஆங்கிலம், தெலுங்கு, மலையாளம், ஹிந்தி முதலிய மொழிகளில் புலமை உடையவராகவும் விளங்குகின்றார். நாவல், சிறுகதை, நாடகம், வாழ்க்கை வரலாறு முதலிய துறைகளுடன் தொடர்பான 85 நூல்களை எழுதியுள்ளார்.



*மனிதகுல வரலாற்றில் மனிதன் பல்வேறு சவால்களையும், தோல்விகளையும் சந்தித்து வருகின்றான். மனிதனை நிர்மாணிக்க முனைந்த முடியரசுகளும், குடியரசு களும், சகலருக்கும் பொருந்தக்கூடிய சமத்துவத்தையும், விடுதலையையும் வழங்கிவிட வில்லை. இதிலிருந்து மீளுவதற்கான தனிமனிதனது பங்களிப்புக்களை இக்கட்டுரை தூண்டுகிறது.*

நாம் இந்தப் பெரிய உலகத்தில் ஒரு சிறிய மூலையில், ஒரு சூழ்நிலையில், ஒரு குடும்பத்தில், வாழ்கின்றோம்; அவ்வாறு வாழ்வதற்கு உரிமை வேண்டும்; உரிமை இல்லாத வாழ்வு உயிரற்ற வாழ்வு. ஆனால், மனம் போனபடி வாழ முழு உரிமை எவருக்கும் கிடைக்காது; என்றும் கிடைக்காது; ஓரளவுதான் உரிமை கிடைக்கும்; ஓரளவு கட்டுப்பாடு இருக்கத்தான் வேண்டும்.

அந்த அளவு உரிமை பெற்று வாழ வேண்டுமானால், அதற்காக நாம் உலகிற்குச் செலுத்தவேண்டிய வரி ஒன்று உண்டு. அதுதான் கடமை என்று கூறப்படுவது. கடமையைச் செய்யத் தவறுகிறவர்களுக்கு உரிமை கிடையாது.

குடும்பத்தில் தந்தை என்று வாழ்கின்ற ஒருவருக்குச் சில உரிமைகள் உண்டு; ஆனால் பொருள் வருவாய்க்கு உழைத்தல், குடும்பத்தைக் காப்பாற்றுதல் போன்ற கடமைகளும் அவருக்கு உண்டு. மகனுக்கும் சில உரிமைகள் உண்டு. தன் பெற்றோருக்குக் கட்டுப்பட்டு ஒழுங்காக நடக்க வேண்டும்; ஆசிரியர்களுக்குக் கட்டுப்பட்டு ஒழுங்காகப் படிக்க வேண்டும்; இவ்வாறு மகனுக்கும் சில கடமைகள் உண்டு. அலுவலகத்தில் அல்லது தொழிற்சாலையில் வேலை செய்வோருக்கு ஊதியம் பெறுதல், விடுமுறை பெறுதல், மருத்துவ வசதி பெறுதல் முதலிய உரிமைகள் உண்டு; அங்கே நேரத்துடன் சென்று குறிப்பிட்ட வேலைகளை ஒழுங்காகச் செய்யும் கடமைகளும் உண்டு.

உரிமையும் கடமையும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை. உரிமையை மட்டும் மிகுதியாக விரும்பிக் கடமையைப் புறக்கணித்தால், குழப்பம்தான் மிஞ்சும்; உள்ள உரிமையும் நிலைக்காது. இன்று உலகத்தில் பல பகுதிகளில் உள்ள சீர்கேடுகளுக்கும் குழப்பங்களுக்கும் இந்தத் தவறுதான் காரணம். பலர் இன்று உரிமையைப் பற்றியே போராடுகின்றார்கள். கடமையில் கருத்துச் செலுத்துவது குறைகின்றது. அலுவலகம், தொழிற்சாலை முதலியவை மட்டும் அல்ல; குடும்பமும் அப்படித்தான். எந்தக் குடும்பத்தில் கணவனும் மனைவியும் உரிமையைப் பற்றி மிகுதியாக நினைத்து, கடமையைப் புறக்கணிக்கின்றார்களோ, அந்தக் குடும்பத்தில் போராட்டம் ஏற்படும்; உரிமைப் போராட்டம் வளர்ந்தால் கணவன் மனைவி பூசல் வளரும்; மக்கள் ஒழுங்காக நடக்க மாட்டார்கள்; காதல், கற்பு முதலியவற்றிற்கு இடம் இருக்காது.

ஆகவே; எல்லோரும் ஒத்த அன்பு செலுத்தித் தன்னலத்தைக் குறைக்க வேண்டும்; அல்லது உரிமை பற்றி எண்ணும் அளவுக்குக் கடமை பற்றியும் உணர்வதற்குக் கற்றுக் கொள்ள வேண்டும். இல்லையானால், குடும்பப் போராட்டம், நாட்டுக்கலகம், உலகப் போர் முதலியவற்றைத் தவிர்க்க முடியாது.

எண்ணமும் பேச்சும் போதுமா? இவற்றைப் போக்க வழி என்ன என்று எண்ணிப் பார்த்து, ஒவ்வொருவரும் தம்மால் இயன்ற சிறு பங்கைச் செய்ய வேண்டும். போக்குவதற்கு வழி உள்ளது; அன்பை வளர்க்க வேண்டும். உரிமையைப் போலவே கடமையையும் போற்ற வேண்டும்; அல்லது, இயலுமானால் உரிமையை விட கடமையைப் பெரிதாகப் போற்றி வாழ வேண்டும்.

உரிமைக்கும் கடமைக்கும் இடையே உள்ள ஏற்றத்தாழ்வை நீக்குவதற்காக இயற்கை அமைத்த ஓர் அருமையான பாதுகாப்பே அன்பு எனப்படுவது. அன்பு எங்கே உயர்ந்து விளங்குகின்றதோ, அங்கே உரிமைப் போராட்டம் இல்லை; கடமைக் குறைவு இல்லை. அதனால் ''அன்பின் வழியது உயிர்நிலை'' என்கிறார் திருவள்ளுவர். அன்பு இல்லாத வாழ்க்கை பாலை நிலத்தில் உள்ள பட்டமரம் போன்றது என்றும் கூறுகின்றார். அதனால் குடும்பத்தில் அன்பு ஆட்சி செய்யவேண்டும் என்று முன்னோர்கள் ஏற்படுத்தினார்கள். இல்வாழ்க்கையை ஓர் அறம் என்று சிறப்பித்து, இல்லறம் என்றார்கள். மக்கட் பேறு, சுற்றம் தழுவுதல் முதலியவற்றை அதன் அங்கம் ஆக்கினார்கள். தேசபக்தி என்று அமைந்த அன்பு அப்படியே நாடு என்ற பெரிய குடும்பத்தைப் போற்றி வளர்ப்பதற்கு ஏற்பட்டதாகும். சமயம் அல்லது கடவுள் நெறி என்பதும், உலகத்தில் வாழும் எல்லோரிடமும் அன்பு செலுத்தி, உலகத்தையே கடவுளின் குடும்பம் என்று கருதும் பரந்த நோக்கத்தை வளர்ப்பதற்கு ஏற்பட்டதாகும்.

ஆனால், குடும்பத்தில் தாய் செலுத்தும் அன்பைத் தவறாகப் பயன்படுத்திக் கொண்டு தந்தையோ மக்களோ தன்னலம் உடையவர்களாய்த் தீமை செய்வார்களானால் என்ன ஆகும் ? அப்படித்தான், நாட்டில் ஒரு சாராரின் அன்பைத் தவறாகப் பயன்படுத்திக் கொண்டு மற்றொரு சாரார் தன்னலமாக வாழ்வார்களானால், அன்பு வரண்டு போகும். உரிமைக்கும் கடமைக்கும் போராட்டம் ஏற்படும்.

பழங்காலத்தில் சமுதாயத்தில் ஆள்வோரும் ஆளப்படுவோரும் வெவ்வேறாக இருந்தார்கள். இக்காலத்தில், ''எல்லாரும் இந்நாட்டு மன்னர்'' என்ற நிலைமை உள்ளது. ஆளப்பிறந்தவர்கள் என்று யாரும் இல்லை. பழங்காலத்தில் இருந்த நிலைமைக்கு ஏற்றபடி உரிமை சிலருக்கும் கடமை பலருக்கும் என்று இருந்தன. இக் காலத்தில் ஒவ்வொருவருக்கும் உரிமையும் உண்டு; கடமையும் உண்டு. எதிர் காலத்தில் வேலைக்காரர் என்று ஒரு சாரார் இருக்க மாட்டார்கள். எல்லோரும் ஒவ்வொரு வேலை செய்து உழைத்துப் பழக வேண்டி ஏற்படும். வேலைகளிலும் உயர்ந்த வேலை தாழ்ந்த வேலை என்பது போய்விடும். வியர்வை வராத வேலைக்கு மதிப்பும் வியர்வை விடும் வேலைக்கு மதிப்புக் குறைவும் உள்ள நிலமை மாறிவிடும். ஆகையால், எந்த உழைப்பிற்கும் பழக்கப்படுத்திக்கொள்வோரே நன்றாக வாழ முடியும்.இப்போதே அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ் முதலான நாடுகளில் உடம்பால் உழைப்பவர்கள் நல்ல ஊதியம் பெற்று மூளையால் உழைக்கும் அலுவலர்க்கு நிகராக வாழ்கின்றார்கள். அந்நாடுகளில் வீடுகளில் போலவே அலுவலகங்களிலும் எடுபிடி ஆட்கள் குறைந்து

வருகின்றார்கள். ஆகையால் சிறுசிறு வேலைகளையும் நாமே செய்து பழகுவது நல்லது. காரில் போகும் வசதி உடையவர்கள் காரைத் தூசு துடைக்கவும் கற்றுக்கொள்ள முன்வர வேண்டும். சைக்கிளில் போகின்றவர்களும் அதைத் துடைக்கவும் பழுது பார்க்கவும் கற்றுக்கொள்ள வேண்டும். உடம்பால் உழைக்கும் வேலைகள் இழிவானவை என்ற எண்ணம் நம் மனதை விட்டுப் போக வேண்டும்.

முன்னேறிவரும் அரசியல் நோக்கோடு சமுதாய நோக்கோடு பார்த்தாலும் சரி சமயநோக்கோடு பார்த்தாலும் சரி, மனிதருக்கு மனிதர் எந்த வகையான வேறுபாடும் கருதக்கூடாது. ஏழை என்றும் அடிமை என்றும் எவரும் இல்லை என்றார் பாரதியார். உயர்ந்தவர் என்றும் தாழ்ந்தவர் என்றும் எவரும் இல்லை. மனித சமத்துவம் எல்லா நாட்டு அறிஞர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மையாகும். சாதி, மதம், நிறம் முதலான எந்தக் காரணம் பற்றியும் வேறுபாடு செய்யாத நிலையை நோக்கி உலகம் நடக்கின்றது. எவ்வளவு பெரிய அமைப்பாக இருந்தாலும் எவ்வளவு பெரிய சமயமாக இருந்தாலும், மனிதரிடயே வேறுபாடுகளை வளர்க்கும் எதுவும் எதிர்காலத்தில் வாழ முடியாது. ஆகவே உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற கருத்தையே மறக்க வேண்டும்; உயர்ந்த தொழில் தாழ்ந்த தொழில் என்ற வேறுபாட்டை ஒழிக்க வேண்டும். அவரவர் பெறும் உரிமைகளுக்கு வரியாக அவரவர்க்கு வாய்க்கும் கடமைகளை மதித்துச் செய்யவேண்டும்.

**பொருளுணர் திறன் செயற்பாடு**

1. பின்வரும் தொடர்கள் இடம்பெறும் இலக்கியங்களையும், அவ் இலக்கியங்களைப் படைத்தவர்களையும் குறிப்பிடுக.
   அ. அன்பின் வழியது உயிர் நிலை ...
   ஆ. எல்லோரும் இந்நாட்டு மன்னர்
2. ‘‘உரிமையும் கடமையும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள்’’ என்ற தொடரினூடாக ஆசிரியர் வலியுறுத்தம் கருத்துக்களைக் குறிப்பிடுக.
3. கட்டுரை ஆசிரியர் தான் கூறவிழைந்த விடயங்களை வலியுறுத்தக் கையாண்ட உத்திகளைத் தெளிவுபடுத்துக.
4. உரிமை, கடமை, அன்பு இவற்றிற்கிடையிலான தொடர்பினைக் கட்டுரையை ஆதாரமாகக் கொண்டு விளக்குக.

**குழுமச் செயற்பாடு**

நமது பிரதேசத்தைச் சேர்ந்த படைப்பாளி ஒருவரை நேர்காணல் செய்து அவரது கருத்துக்களையும் தகவல்களையும் கொண்டு நேர்காணல் பிரதியாக்குவோம்.

**திறன் வளர் செயற்பாடு**

''கடமைகளைச் செய்தால் உரிமைகளைப் பெறலாம்'' என்ற தலைப்பில் சிற்றுரை ஆற்றுவோம்.

# 9 எலியம்

## உமா வரதராஜன்

இவர் கிழக்கிலங்கையின் பாண்டிருப்பில் 1956 பிறந்தார். சிறுகதை இலக்கிய விமர்சனம், திரைப்பட விமர்சனம், பத்தி எழுத்து, கவிதை, நாவல் என்று விரியும் இவரது ஆளுமையின் உச்சமாக வெளிப்படுவது சிறுகதை என்ற வடிவமேயாகும். ஈழத்திலும் தமிழகத்திலும் ஐரோப்பிய நாடுகள் சிலவற்றிலிருந்தும் வெளிவரும் பத்திரிகைகள், சஞ்சிகைகளில் இவரது படைப்புக்கள் வெளி வருகின்றன. இவரது சிறுகதைகள் ஜேர்மன், சிங்களம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவர் தொலைக்காட்சித் தொகுப்பாளராகவும் பணியாற்றி வருகின்றார். ''உள்மன யாத்திரை'' என்ற இவரது சிறுகதைத் தொகுப்பு வடகிழக்கு மாகாண சபையின் விருது பெற்றுள்ளது.



எலிகள் பற்றிய சித்திரிப்புகள் பல வடிவங்களில் அமைந்திருப்பதனைக் காண முடிகிறது. பொதுவாகச் சுரண்டல் முறையைக் குறிக்க எலிகளைக் குறியீடுகளாகக் கொள்வர். அதே வேளை மிக்கிமவுஸ் என்ற கார்டூன் எலி, நகைச்சுவை உணர்வையும் புத்திசாலித்தனத்தையும் வெளிப்படுத்துகிறது. இக்கதையும் எலி ஒன்றை மையப் படுத்தியே சுழல்கின்றது.

**கொ**ஞ்சம் பழைய வீடுதான். ஆனால், அது ஓர் அழகான வீடு. பக்கத்துக் கொன்வென்றில் இருந்து வாத்தியம்மா சொல்லிக் கொடுக்கும் வாசகங்களை அப்படியே ஒப்புவிக்கும் பாலர்களின் ஒருமித்த குரல்கள் அடிக்கடி கேட்டுக் கொண்டிருக்கும். வைத்தியசாலை வெகு கிட்டத்தில் இருந்தது. சந்தைகூட அவ்வளவு தூரத்தில் இல்லை. இவன் வீட்டுக்கு நேர் எதிரே புகைப்படப்பிடிப்புநிலையம் ஒன்று இருக்கின்றது. தேவையானால் இவன் தன் வீட்டிலிருந்தே ஒப்பனை செய்து கொண்டுப் போய்ப் படம் எடுத்துக் கொள்ளலாம். அவர்களுடைய பௌடரையும், ஒல்லாந்தர் காலத்து அழுக்கு நிரம்பிய சீப்பையும் பாவிக்க வேண்டுமென்ற அவசியமில்லை. அதற்குப் பக்கத்திலுள்ள பேக்கரியில் பாண் போடுவார்கள். 'கேக்' கும் போடுவார்கள். ஆனால் இரண்டுக்குமிடையில் அதிக வித்தியாசம் இருப்பதாக இதுவரையில் தெரியவில்லை. பாண் வேகும் முறுகலான மணம் அவ்வப்போது வீசிக் கொண்டிருக்கும்.

இவையெல்லாம் அந்த வீட்டுக்குக் குடிவந்த அவனைச் சந்தோசமடையச் செய்தன. ஆனால் அந்த வீட்டில் எலிகள் இருக்கும் என அவன் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.

எலிகளை அவனுக்கு எப்போதுமே பிடிக்காது. இவனைப் போலவே எலிகளைப் பிடிக்காத ஒருவன் தான் உயிரியல் பயிற்சி வகுப்புக்கு எலிகளை வெட்டி ஆராயும் முறையைக் கொணர்ந்திருக்க வேண்டும். எலிகளை மாத்திரமல்ல - பல்லி, கரப்பான் பூச்சி, பூரான், நத்தை... எல்லாவற்றுக்கும் மேலாக மிக அவதியுடன் கழிப்பறைக்குள் நுழையும் போது வழிமறித்துக் கொண்டு பேந்தப் பேந்த விழித்தபடி காத்துக் கொண்டிருக்குமே அந்தத் தேரை.. இவற்றையெல்லாம் அவனுக்குக் கண்ணில் காட்டக் கூடாது.

எலி, பிள்ளையாரின் வாகனம் என அம்மா அடிக்கடி சொல்லுவா. அதனால் எலியைத் துன்புறுத்துவது தெய்வ நிந்தனையாம். ஆனால் பள்ளி நாட்களில் எலி வேண்டுமென உயிரியல் வாத்தியார் சொல்லியதைத் தெரிவித்தபோது அம்மா மௌனமே சாதித்தாள். அன்று மாமா என்னமாய்க் கஸ்டப்பட்டு எலியைப் பிடித்துத் தந்தார்.

எதிர்காலத்தில் ஒரு பெரிய வைத்திய கலாநிதியாக ஆஸ்பத்திரி விறாந்தையில் இவன் உலா வருவது போலவும், இவன் பின்னால் இவனுடைய 'ஸ்டெதெஸ்கோப்பை' ஏந்தியபடி தான் வருவது போலவும் மாமா எலியை அமுக்கிப் பிடித்த அந்த தருணத்தில் கனவு கண்டிருக்கக்கூடும்.

எலிகள் என்றதும் அந்தத் திருட்டு முழிகள்தான் முதலில் மனதில் தோன்றுகின்றன. தேங்காய், மாங்காய், அரிசி, பருப்பு... எவற்றை இந்த எலிகள்

விட்டுவைக்கின்றன. நேற்று வாங்கிய புத்தம்புது மணச்சவர்க்காரத்தை இன்று காணவில்லை. எலிக்கு எதற்கு மணச்சவர்க்காரம் என அவனுக்குப் புரியவில்லை. ஒரு வேளை எலிஸாவுக்குக் கொண்டு போய்ச் சேர்க்கா விட்டால் முகத்தைத் திருப்பிக் கொள்ளுமோ? (எலியின் மனைவி அல்லது காதலியின் பெயர் எலிஸாவாக இருக்க வேண்டும் என்பது அவனது ஊகம்.)

எலிகளுக்கும் அவனுக்குமிடையே யுத்தப் பிரகடனம் நேற்றிரவு ஏற்பட்டுவிட்டது. லதா மங்கேஸ்காரின் மீரா பஜனையை அவன் நேற்றிரவு கேட்டுக் கொண்டிருந்தான். எம்.எஸ். சுப்புலெச்சுமியின் மீரா பஜனைக்கும், இதற்கும் உள்ள பிரத்தியேக விசேஷங்கள் குறித்து அவன் தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்த போது தொப்பென்று ஓர் எலி கட்டிலில் விழுந்தது. அது வழி தடுமாறி அவனுடைய கால் வழியாகக் கடக்க முற்படுகையில், அவன் காலை உதறிக் கட்டிலின் மீதேறித் துள்ளிக் குதித்தான். கட்டில் என்பதைத் தச்சர்கள் படுப்பதை உத்தேசித்தே செய்திருப்பார்கள். அவன் இவ்விதம் துள்ளிக் குதிப்பான் என முன்னரே தெரிந்திருந்தால் இன்னமும் பலமான மரத்தைக் கட்டில் செய்த தச்சன் இவனுக்காகத் தேர்ந்தெடுத்திருக்கக் கூடும். கட்டிலின் குறுக்குப் பலகை சடசடவென்ற ஒலியுடன் முறிய அவனுடைய ஒற்றைக் கால் பள்ளத்தில் இறங்கித் தரையைத் தொட்டது. கைகளை மெல்ல ஊன்றியவாறு வெகு பிரயாசையுடன் அவன் தன் காலை விடுவித்தான். முழங்கால் வலித்தது. தீக்குச்சி அளவில் முழங்காலில் ரத்தக் கீறல் ஒன்று.

இந்தச் சம்பவத்துடன் எலியை அவன் தன் மாபெரும் எதிரியாகப் பிரகடனம் செய்தான். தேரை, தவளை, பாம்பு, பல்லி, ஓணான், பூரான், கரப்பான்.... இவற்றைப் பற்றிக் கூட இந்த அளவுக்கு அவன் கவலைப்பட்டதில்லை. அவற்றால் இந்தளவு அவஸ்தையை அவன் அனுபவித்தது கிடையாது.

அவனது வீட்டின் பின்புறம் ஒரு பாழ் வளவு இருக்கின்றது. குட்டையாகவும், நெட்டையாகவும் பற்றைகள் அங்குண்டு. அந்த வளவுக்குள் வெறுங்காலாய் நடந்தால் உடைந்த போத்தல் ஓடுகளோ, கறள் ஆணிகளோ, முட்களோ காலில் சேதம் விளைவிப்பது நிச்சயம். குப்பை கொட்டும் பிரதேசமாக அயலவர்கள் அதை ஆக்கி வைத்திருந்தனர். அந்த வளவு மூலையில் ஓர் அநாதைக் கார் குப்புறக் கிடந்தது. இந்த நாடு இறக்குமதி செய்த முதல் நூறு கார்களுள் இதுவும் ஒன்றாக இருந்திருக்கும். இந்தக் காரை வாங்கியவனின் பேரனோ அல்லது கொள்ளுப் பேரனோ காலப்போக்கில் இந்தக் காரின் வடிவமைப்பையும் தாத்தாவின் ரசனையையும் சகிக்க முடியாமல் தீ மூட்டிக் கொழுத்தி இப்படிப் போட்டிருக்க வேண்டும்.

தனக்கு அச்சம், அருவருப்பு தரும் அத்தனை ஜீவ ராசிகளும் அந்த பாழ் வளவுக்குள் இருந்துதான் படையெடுத்து வருவதாக அவனுக்குத் தோன்றிற்று. பாழ்வளவுக்கும்,இவன் வீட்டுக்கும் நடுவில் இருக்கும் வேலியில் இரவில் சரசரப்புக்

கேட்கும் போது அது பாம்பா, எலியா, வேறெதுவோ எனப் புரியாமல் குழம்பிக் கொண்டிருந்தான்.

இந்த நிலையில் அவன் ஒரு தீர்மானத்திற்கு வந்தான். அவனுக்கு நல்ல ஞாபகம். பாட்டியுடன் அவன் இருந்த காலத்தில் அவள் ஒரு எலிப்பொறி வைத்திருப்பாள். பாட்டியின் வீட்டு அறையுள் அடுக்கப்பட்டிருக்கும் நெல் மூட்டைகளைத் தேடி வரும் எலிகள் இவனைப் போலவே பாட்டிக்கும் அந்தக் காலத்தில் பெரும் பிரச்சி னையைத் தந்தன. தேங்காய்த் துண்டை நறுக்கி எடுத்து, நெருப்பில் சுடுவாள் பாட்டி, பின்னர் பொறியில் பொருத்தி விட்டு இவனும் பாட்டியும் தூங்கப் போவார்கள். எனினும் எலிகள் ஒரு நாளும் அகப்படவில்லை. பொறியில் தேங்காய்த் துண்டு அப்படியே இருக்கும், ஒவ்வொரு நாளும் மூட்டையிலிருந்து கொட்டப்பட்டு, சிதறிக் கிடக்கும் நெல் மணிகள் குறைந்த பாடாயில்லை.

இப்போது எலிப்பொறியை நம்புவதைத் தவிர இவனுக்கும் வேறு வழி இருக்கவில்லை. கடைக்காரன் நான்கைந்து விதமான எலிப்பொறிகளைத் தூக்கிக் காண்பித்தான். பாட்டியின் வீட்டுப் பொறிக்கும் இந்தப் பொறிக்கும் எவ்வளவு வித்தியாசங்கள். அது வெறும் தகரத்துண்டு; இந்தப்பொறிகளின் வடிவமைப்பே அலாதியானது. இந்தப் பொறிகளைத் தயாரித்த நாட்டின் பெயரைக் கடைக்காரன் தெரிவித்த போது அவனது நம்பிக்கை மேலும் அதிகரித்தது. இந்த உலகுக்கும் அப்பால் பல கிரஹங்களிலும் எவ்வளவு சாதனை புரிந்தவர்கள், புரிகின்றவர்கள் அந்த நாட்டினர். அவர்களுடைய தொழில்நுட்பத்தின் முன்னால் இந்தச் சுண்டெலிகள் எம்மாத்திரம்? அவன் ஒரு பொறியைத் தேர்ந்தெடுத்து வாங்கிக்கொண்டான்.

பாட்டியின் உத்தியை அவன் கையாளவில்லை. தேங்காய்த் துண்டுக்குப் பதிலாக நெத்திலிக் கருவாட்டைச் சூடு காட்டிப் பொறியில் பொருத்தி வைத்தான். எலிகள் அதிக அளவில் புழங்கிய பிரதேசம் எனக்கருதப்பட்ட இடத்தில் பொறி வைக்கப்பட்டது. வாய் திறந்து காத்திருக்கும் முதலை போல அது அப்போது தோன்றியது.

அவன் தூங்கப் போனான். தூக்கம் வரவில்லை. கருவாட்டிற்காக மூஞ்சியை நீட்டி, மரண அடி வாங்கப் போகும் எலியை நினைத்துக் கொண்டதும் குதூகலம் சூழ்ந்து கொண்டது. ஏதோ ஒரு கட்டத்தில் கேட்கப் போகும் எலியின் கீச்சிடலுக்காகக் காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டிருந்த அவன் ஒரு கட்டத்தில் தவறி, அப்படியே தூங்கியும் போனான்.

காலையில் எழுந்ததும் முதல் வேலையாக எலிப்பொறியை பார்க்க ஓடிப்போனான். எலிப்பொறியில் இருந்த கருவாட்டுத் துண்டை எறும்புகள் மொய்த்திருந்தன. எலிகள் எல்லாம் சைவத்தைத் தழுவிவிட்டனவா என எண்ணி அவன் எரிச்சலடைந்தான்.



மறுநாளும் பொறியில் சுட்ட கருவாடு இடப்பட்டது. பொறி வைக்கப்படும் இடத்தை மட்டும் அவன் மாற்றிக் கொண்டான். படுப்பதற்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்த போது பொறி மேலெழும்பி விழுந்ததற்கு அடையாளமான ஒரு சத்தமும், எலியின் கீச்சிடலும், பொறி இழுப்பட்டுச் செல்லும் ஓசையும் கேட்டன. அவன் பரப்பரப்புடன் ஓடிப்போய் விளக்கைப் போட்டான். ரத்தச் சொட்டுக்கள் நிலத்தில் கிடந்தன. கழுத்து நெரிபட்ட எலியின் பற்கள் அகோரமாய் வெளியில் தெரிந்தன. சண்டையிடும் நாய்களின் வாய் பிளந்து, மேலுதடு விரிந்து பற்கள் தெரியும் தோற்றம்.

'ஹா ! முதற்பலி'

குரூரமான ஒரு சந்தோஷம், வெற்றிப் பெருமிதம் எல்லாம் அவனை ஆட்கொண்டிருந்தன. வெளியில் வந்து, மண்ணைக் கிண்டி, சின்ன மடுவொன்றைப் போட்டான். எலியைப் பொறியினின்று மெதுவாக எடுத்து அதன் வாலைப் பிடித்தவாறு கொண்டு போய் மடுவில் வீழ்த்தினான். பொறியை நன்றாகக் கழுவித் துடைத்து எண்ணெய் தடவினான். எலிகள் சாமர்த்தியம் மிக்கவை. அவற்றுடைய ரத்தத்தின் வாடைகூட 'ரத்ததின் ரத்தங்களுக்கு' வீசக்கூடாது என்பதில் கவனமாக இருந்தான். மறுபடியும் பொறி கருவாட்டுத்துண்டு வைத்து நாணேற்றப்பட்டது. அவன் மிக மகிழ்ச்சியுடன் தூங்கிய நாளது.

காலையில் எழுந்ததும் ஒரு விரிந்த மலர் போல மறுபடியும் சந்தோஷம் காத்திருந்தது. அடுத்த எலி ! வயிற்றுப்பாகம் அரைவாசி பிளந்தபடி பொறியில் கிடந்தது இந்த எலி. பொறியின் உதவி கொண்டு உலகத்தின் அத்தனை எலிகளையும் ஒழித்துக் கட்டுவேன் என அவன் தனக்குள் ஒருதரம் சொல்லிக் கொண்டான். கர்ணனுக்குக் கிடைத்த நாகாஸ்திரத்தை ஒத்த இந்த எலிப்பொறியைத் தடவிப் பார்ப்பதில் சந்தோஷமடைந்தான்.

அலுவலகம் சென்றதும், கையெழுத்துக் கூடப்போட மறந்து அங்குள்ள நண்பர்களிடம் மிகவும் மகிழ்ச்சியாகச் சொன்னான் '' ஒரே இரவில் ரெண்டு எலிகள் குளோஸ் ! ஹா...ஹா...''

அவர்கள் அவனை ஒருவிதமாக உற்றுப் பார்த்தனர். இவர்களைப் போன்ற விபரமறியாத பேர்வழிகள் ஒரு காலத்தில் ஆர்கிமிடீஸைக் கூட அப்படித்தான் பார்த்திருப்பார்கள், பரவாயில்லை.

நம்பவில்லையல்லவா? .... நம்பமாட்டீர்கள் இரண்டு எலிகள் ஒரே ராத்திரியில் முடித்து விட்டேன் நண்பர்களே.''

நண்பர்கள் அதற்குப் பிறகு ஒன்றும் பேசவில்லை. அவர்களுடன் மேற்கொண்டு இது சம்பந்தமாகப் பேச அவனும் விருப்பம் இல்லாதவனாகவே இருந்தான். ''அப்பாவி உயிர்கள்'' என்று கூறி எலிகளுக்காக அவர்கள் வக்காலத்து வாங்கக் கூடும். அல்லது ஜீவகாருண்ய சங்கத் தலைவர் யாருக்காவது இந்த விசயத்தை இவர்கள் தெரியப்படுத்த முனையலாம். அவரும் தன் கடிதத் தாள் ஒன்றை விரயம் செய்து ''அப்பாவி உயிர்களைக் கொல்லும் உன் மேல் நாங்கள் ஏன் நடவடிக்கை எடுக்கலாகாது''. என மிரட்டல் கடிதம் ஒன்றை அனுப்பக்கூடும். எனவே தற்போதைக்கு அவையடக்கம் ரொம்பவும் முக்கியம் என அவனுக்குத் தோன்றியது.

அன்றிரவு மீண்டும் பொறி தயார் நிலையில் வைக்கப்பட்டது. அகழி நிறைய முதலைகளும், கோட்டையின் அரண்கள் தோறும் ஆயுதம் ஏந்திய சிப்பாய்களும் கிடைக்கப்பெற்ற அரசனாகத் தன்னை நினைத்து அவன் படுக்கைக்குப் போனான்.

ஆனால் அன்றிரவு எதிர்பாராத இரு சம்பவங்கள் நடந்தன. ஒன்று பின்னிரவில் கொஞ்சம் மழை பெய்தது. அந்த மழைச் சத்தத்தை கேட்டபடியே அவன் தூங்கிப்போனான். மற்றச் சம்பவம் முக்கியமானது. எலியொன்று தன்னிஷ்டத்துக்கு நேரம் எடுத்து, அவனுடைய நேசத்துக்குரிய சட்டை ஒன்றைக் குதறிவிட்டுப் போயிருந்தது. வரைபடத்தில் இருக்கும் அவுஸ்திரேலியாக் கண்டத்தை ஞாபகப்படுத்தும் ஒரு கிழிசல் சட்டைப் பை இருக்கும் இடத்தில் தோன்றியிருந்தது.

காலையில் சட்டையைக் கையில் எடுத்து அவன் வெகு நேரம் வரை திகைத்துப் போயிருந்தான். அந்தச் சட்டையை இனி அணிய முடியுமென அவனுக்குத் தோன்றவில்லை. கிழிசல் உள்ள சட்டைகளை அணிகின்ற ஒரு நாகரிகம் இந்த நாட்டில் வரும் வரைக்குமாவது அவன் பொறுத்திருக்கத்தான் வேண்டும்.

உலகத்தின் கெட்ட வார்த்தைகளை எல்லாம் சொல்லி அவன் எலிகளைத் திட்டினான். வைத்த இடத்தில் பொறி அப்படியே இருக்க, கருவாடு மட்டும் காணாமற் போன மாயம் ஆச்சரியம் ஊட்டியது. எறும்புகள் அபகரித்தனவா? அல்லது சாமர்த்தியம் மிக்க எலிகளின் ''தோலிருக்கச் சுளை முழுங்கும்'' சாகஸ வேலையா என அவன் யோசித்தான். முதற் தடவையாகப் பொறியின் மீது அவன் நம்பிக்கை இழந்தது அப்போதுதான்.

எலிகளின் தொல்லை குறித்து யாரிடமாவது கூறி ஆலோசனை கேட்க வேண்டுமென இப்போது அவனுக்குத் தோன்றியது. பக்கத்து வீட்டுக்காரரான லோரன்ஸை நாடுவதைத் தவிர அவனுக்கு வேறு வழி இருக்கவில்லை. லோரன்ஸை நாடுவதற்குச் சில காரணங்கள் உண்டு.

லோரன்ஸ் கோழிகளைச் சத்தமில்லாமல் அமுக்குவதில் அதிதிறமைசாலி. இரவில் மரக்கிளைகளில் தங்கிவிடும் கோழிகளை எவ்விதச் சத்தமும் இல்லாமல் கைப்பற்றுவது எப்படி என்பதை ஒரு தடவை அவர் காட்டித் தந்திருக்கின்றார். பொந்துக்குள் உடும்பொன்று ஒரு நாள் போய்ப் புகுந்து கொண்டது. உடும்பின் வாலை மாத்திரம் வெளியில் எடுத்து சுழற்றிய வேகம் அற்புதம். மறுகணம் நிலத்தில் முகம் மோதி அவருடைய கையில் இருந்து விழுந்தது உடும்பு.கூடுமானவரை அவருடைய வேட்டை அனுபவங்களைக் கேட்பதை அவன் தவிர்த்தே வந்திருக்கின்றான். ஏனெனில் முயல் வேட்டை அனுபவத்தைச் சொல்லி முடிக்க அவர் கிட்டத்தட்ட முப்பது நிமிஷங்களும், வேட்டையாடப்பட்ட ஜீவராசி காட்டெருமையாக இருந்தால் ஏறத்தாழ இரண்டு மணித்தியாலங்களும் எடுப்பார். எனவே சிறிய ஜீவராசிகளுடன் அவர் நடத்திய போராட்டங்கள் சுருக்கமாக முடிவதனால் அவற்றைக் கேட்கவே அவன் பிரியப்படுவான். லோரன்ஸ் மரை இறைச்சி கொண்டு வருவதாகக் கூறி கடந்த இரண்டு வருடங்களாகின்றன. தன்னுடைய பற்கள் உதிர்ந்து பொக்கை விழுந்த பின்னராவது அவர் வேட்டையாடி மரையைக் கொண்டு சேர்த்து விடுவார் என அவன் நம்பிக்கை வைத்திருந்தான். பெரிய ஜீவராசிகளோடெல்லாம் போராட்டம் நடத்தும் லோரன்ஸ்க்கு எலி என்பது ஓர் அற்ப விஷயம் என அவன் நினைத்துக் கொண்டான்.

எலிப்பாஷணத்தைக் கலந்து வைக்கும் முறையைத்தான் லோரன்ஸ் அவனுக்குச் சிபாரிசு செய்தார். எலிப்பாஷணம் வாங்க மருந்துக் கடைக்குச் சென்ற போது கடைக்காரன் அவனை ஒரு மாதிரியாகப் பார்த்தான். இரண்டு வாரமாகச் சவரம் செய்யாத முகத்துடன் தான் வந்து எலிப்பாஷணம் கேட்டிருக்கத் தேவையில்லை எனப் பின்னர் தான் அவனுக்கு உறைத்தது.

'எலிக்குத்தானே?' என்ற ஒரு அபத்தமான கேள்வியுடன் கடைக்காரன் மருந்துப் போத்தலைத் தந்தான்.

அன்றிரவு ஒரு கோப்பை உணவுடன் அவன் மருந்தைக் கலக்கும் போது லோரன்ஸூம் கூட இருந்தார்.

''இன்றைக்கு இரவைக்குப் பாருங்க முசுப்பாத்தியை'' என்றார்.

விடிந்தது.

உணவுப் பாத்திரத்தைச் சுற்றி வர எலிகளின் பட்டாளமொன்று செத்து வீழ்ந்து கிடக்கும் என்று நம்பிச் சென்றவனுக்குக் காலையில் ஏமாற்றம் தான் மிஞ்சியது. சோற்றுப் பருக்கைகள் இறைபட்டுக் கிடந்தன.

எலிகளின் ஆரவாரம் இப்போது இல்லாத போதிலும் அவன் உற்சாகமிழந்தவனாக ஒவ்வொரு நாளையும் கழித்தான். அவன் மனம் நாடியதெல்லாம் எலிகளின் பிணங்கள்.

சரியாக மூன்றாம் நாள் அலுவலகத்திலிருந்து வந்து வீட்டுக் கதவை திறந்த போது அவனுடைய மூக்கில் அந்தத் துர்நாற்றம் வந்து மோதியது. அவன் மூக்கைப் பிடித்துக் கொண்டு அறைக்குள் போனான். அந்தத் துர்நாற்றத்தின் பிறப்பிடம் மர அலுமாரியின் பின்புறம் தான் எனத் தோன்றிற்று. மெதுவாக அலுமாரியை நகர்த்தியதும் 'அது' அவனுக்குத் தெரிந்தது. அதன் உடலில் உண்டான புழுக்கள் நெளிந்தபடி இருந்தன. ஒரு தடித்த அட்டையில் எலியின் உடலை அள்ளி, வெளியில் கொண்டு வந்து போட்டான். திடீரெனத் தோன்றிய காகம் அதைக் கவ்விற்று.

வீட்டினுள் நுழைந்தவன் மீண்டும் துர்நாற்றம் வீசுவதை உணர்ந்தான். எலிகளின் உடல்களைத் தேடவேண்டிய நிர்ப்பந்தம் தனக்கு ஏற்பட்டு விட்டதை அவன் புரிந்து கொண்டான். தேடல் வேட்டை ஆரம்பமாயிற்று. எலிப்பாஷணத்தினால் அங்கும் இங்கும் செத்துப் போன எலிகளை மீட்பது எவ்வளவு, கடினமான வயிற்றைப் புரட்டும் வேலை என எண்ணி அவன் சலிப்புற்றான்.

மூஞ்சி கறுத்த ஓர் எலியின் உடல் பழைய பத்திரிக்கைகளின் இடுக்கில் கிடந்தது.இன்னொன்று அவனுடைய பழைய சப்பாத்துக்குள், மற்றது மோட்டு வளையுள் எல்லாவற்றையும் நல்லடக்கம் செய்தபின் அவன் தலை முழுகினான்.

அதன் பிறகு கொஞ்ச நாட்களாக எந்தப் பிரச்சினையும் எழவில்லை. அவனை யாராவது வந்து இது பற்றிக் கேட்டால் தொலைக்காட்சி நிருபருக்குப் பேட்டி அளிக்கும் பாவனையில் தோள்களைச் சற்றுக் குலுக்கிக் கொண்டு .... ஆம்.... மிகவும் மனவருத்தம் தான். ஆனால் இது தவிர்க்கப்பட முடியாதது. இந்த முடிவைத் தவிர வேறு எந்த முடிவும் எடுக்கப்பட முடியாதது. எனச் சொல்லுவதற்கு அவன் தயாராக இருந்தான்.

மூன்று வாரங்கள் போயிருக்கும். அவனுடைய எதிரி மறுபடியும் தோன்றிற்று. கண்ணாடிக் குவளையொன்றைத் தட்டிவிட்டுக் கண்ணெதிரே சுவர் ஏறி ஓடியது. தான் முறிந்து விழுவதைப் போல் உணர்ந்தான். அடுத்த கட்ட ஆலோசனைக்காக லோரன்ஸ் வீட்டுக்கு மறுபடியும் போக வேண்டி வரும் என அவன் நினைக்கவேயில்லை.

அவன் போனபோது லோரன்ஸ் கோழியொன்றை உரித்துக் கொண்டிருந்தார். அரைக்கால் பங்கு உயிருடன் கோழி மன்றாடிக் கொண்டிருந்தது.

விஷயத்தை அவன் லோரன்ஸிற்குச் சொன்னான். தான் சொல்வதை லோரன்ஸ் கவனிக்கின்றாரா அல்லது கோழியின் பித்தப்பை அகற்றுவதில் தான் கண்ணுங்கருத்துமாக இருக்கின்றாரா எனத் தீர்மானிக்க இயலாத நிலையில் அவன் இருந்தான்.

லோரன்ஸ் சாதாரணமாகப் பதில் சொன்னார். '' ஒரு சுலபமான வழி இருக்கின்றது பூனை வளர்த்தால் எலி கிட்டேயும் வராது. பூனை ஒன்றை வளருங்கள்''

இது ஒரு புதுவிதமான அணுகு முறை என்றே அவனுக்கும் பட்டது. பூனையை உடனே அவன் வரவழைத்து விட்டான். அதற்கு ஓர் ஆங்கிலப் பெயரை அவன் சூட்டினான். தமிழ்ப் பெயர்கள் செல்லப் பிராணிகளுக்கு ஏனோ அவ்வளவு பொருந்துவதில்லை.(தேவருடைய படங்களைத் தவிர).

பூனை வந்ததும் வீடு முழுக்க மியாவ் மியாவ் சத்தத்தால் நிரம்பியது. எலிகளின் கீச்சிடலை விட பூனைகளின் மியாவ் மியாவ் எவ்வளவோ மேலானது என அவன் நினைத்துக் கொண்டான். வீட்டின் சகல பகுதிகளுக்கும் சென்று பூனை உரிமை கொண்டாடிற்று. அது தன் கட்டிலில் சில வேளைகளில் சுருண்டு படுப்பதைக் கூட அவன் பொறுத்துக் கொண்டான். ஜேம்ஸ்பாண்ட் படத்து வில்லன் போல் மடியில் அதைத் தூக்கி வைத்து, தடவவும், கொஞ்சவும் அவன் தயாராய் இருந்தான்.

அது ஒரு ஞாயிற்றுக் கிழமை, அதிகாலையில் தேவாலயம் சென்று பசியுடன் திரும்பியவனுக்கு அதிர்ச்சி காத்திருந்தது. கறிச்சட்டியில் இருந்தவற்றை காலி பண்ணிய திருப்தியுடன் இவனை நிமிர்ந்து பார்த்து ''மியாவ்'' என்றது சனியன்.

வெறிபிடித்தவனைப் போல பூனையை அவன் துரத்தினான், சாது வேஷத்துடன் மியாவ் மியாவ் என்று பதிலுக்குக் கத்தியபடி அவனிடமிருந்து தப்பி ஓடியது அந்தப் பூனை. அவ்வளவும் பாசாங்கு ! 'திருட்டுப் பூனையே ஒழிந்து போ' என அவன் பொல்லால் எறிந்தான். அதன் பின்பும் கொஞ்ச நாட்கள் வரை அது வீட்டைச் சுற்றி சுற்றி வந்தது. பின்னர் ஒரு நாள் காணாமலே போயிற்று.

லோரன்ஸிடம் இனிப் போனால் நாய் வளர்க்கும் ஆலோசனையைச் சமர்ப்பிக்கக் கூடும் என அவனுக்குத் தோன்றிற்று. அவன் சுயமாக ஒரு முடிவுக்கு வந்தான். பின்னால் இருக்கும் பாழ்வளவை சுத்தப்படுத்திவிட்டால் எலிகள் மட்டுமல்ல, அவன் அருவருக்கும் எந்த ஜீவராசிகளும் இனித் தலை காட்டப் போவதில்லை.

கூலியாட்களை அவன் வரவழைத்தான். பாழ்வளவைத் துப்புரவு செய்யும் வேலை தொடங்கிற்று. வேலியில் படர்ந்திருந்த கல்யாணப்பற்றையில் அவர்கள் ஆரம்பித்தார்கள். வளவைச் சுத்தம் பண்ணும் போது நிறையப் பொந்தெலிகளும், பாம்புகளும் அகப்பட்டதாகக் கூலிக்காரர்கள் சொன்னார்கள். ஆனால் அவன் பார்க்கவில்லை.

குப்பைகள் ஒரு மூலைக்குள் கூட்டியெடுக்கப்பட்டு அன்று மாலை தீயிடப் பட்டது. நத்தைகளின் ஓடுகள் வெடிக்கும் சத்தம் வெகுநேரம் வரை கேட்டது.

அதன் பின்பே அவன் நிம்மதி அடைந்தான். ஒரு நாள் லோரன்ஸிடம் காட்டை அழித்தது குறித்து வேடிக்கையாகச் சொன்னான். ''முதலில் செய்ய வேண்டிய காரியத்தை நாம் கடைசியாகச் செய்திருக்கின்றோம்.''

அதன் பின்னர் அவன் எலிகள் பற்றி மறந்தே போனான்.

வோல்ட் டிஸ்னியின் படம் பார்க்கும் போது மாத்திரம் எலியின் ஞாபகம் வந்தது. எல்லா எலிகளும் வோல்ட் டிஸ்னியின் மிக்கி மௌஸைப் போல இருந்தால் என்ன என்று அப்போது நினைத்துக் கொண்டான்.

வீட்டின் பின்புறம் ஒருநாள் தற்செயலாகப் பார்த்தவன் மறுபடியும் உன்னிப்பாக பார்வையைச் செலுத்தினான். 'பச்சைகள்' மறுபடியும் தலை தூக்கியிருந்தன. மண்ணுக்குள் வேர்களை விட்டுவைத்தால்தான் தங்களுக்கு மறுபடியும் வேலை வரும் என யோசித்த கூலிக்காரர்களின் தந்திரத்தை, சாமர்த்தியத்தை எண்ணி அவன் புன்னகைத்தான்.

அன்றிரவு பத்துமணியளவில் கட்டிலில் அவன் காலடியில் தொப்பென ஏதோ விழுந்தது. அவன் திடுக்கிட்டு எழுந்து விளக்கைப் போட்டான். எலியொன்று ஓடி மறைந்தது. 'மறுபடியும் எலி' என அவன் ஈனசுரத்தில் முனகிக் கொண்டான்.

இப்போது எலிகளை அழிக்கும் எண்ணம் அவனிடம் இல்லாமல் போயிற்று. எலிகளிடமிருந்து தன்னை எவ்வாறு காப்பது என்ற பயம் மேலோங்கத் தொடங்கியிருந்தது.

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| கொன்வென்ற் | - | கன்னியர் இல்லம் |
| சாகஸம் | - | வீரதீரச்செயல் |
| அவஸ்தை | - | வேதனை |
| அகோரம் | - | அவலட்சணம் |
| நாகாஸ்திரம் | - | இலக்கியங்களில் பேசப்படும் விசேட ஆயுதம் |
| முசுப்பாத்தி | - | வேடிக்கை அல்லது பகிடி |
| ஜீவகாருண்யம் | - | உயிர்கள் மீதான கருணை |
| (எலிப்)பாஷாணம் | - | (எலி)மருந்து |
| மடு | - | குழி |

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. *எலிகளை ஒழிக்க மேற்கொள்ளும் முயற்சிகள் பற்றிய விபரிப்பில் இழையோடும் அங்கதத்தினை சுருக்கமாக விளக்குக.*
2. *''முதலில் செய்ய வேண்டிய காரியத்தைக் கடைசியில் செய்திருக்கின்றோம்'' என்று கூறப்பட்டது ஏன்? விளக்குக.*
3. *''மறுபடியும் பொறி கருவாட்டுத்துண்டு வைத்து நாணேற்றப்பட்டது'' ''கர்ணனுக்குக் கிடைத்த நாகஸ்திரத்தை ஒத்த எலிப்பொறி'' இக் கூற்றுக்களால் நீர் விளங்கிக் கொள்வது யாது?*
4. *பின்வரும் கூற்றுக்கள் இடம்பெறும் சந்தர்ப்பங்களை விளக்குக.*
   - **அ. நம்பவில்லையா? நம்பமாட்டீர்கள்; இரண்டு எலிகள் ஒரே ராத்திரியில் முடித்து விட்டேன்.**
   - **ஆ. இன்றைக்கு இரவைக்குப் பாருங்கள் முசுப்பாத்தியை.**
   - **இ. ஒரு சுலபமான வழி இருக்கின்றது; பூனை வளர்த்தால் எலி கிட்டேயும் வராது.**
5. *கதையில் கையாளப்பட்ட மொழிநடை பற்றிய உமது கருத்துக்களை விபரிக்குக.*

## குழுமச் செயற்பாடு

*இக்கதையைப் பின்புலமாகக் கொண்டு ''தாளலயமொன்றை'' இயற்றி நிகழ்த்திக் காட்டுவோம்.*

## திறன் வளர் செயற்பாடு

*இக்கதையை வாசித்து விளங்கி விமர்சனம் ஒன்று எழுதுவோம்.*

# 10 நலம் புனைந்து உரைத்தல்

**திருவள்ளுவர்**

**திருவள்ளுவர் சங்கமருவிய காலத்தில் வாழ்ந்தவர். இவர் எந்தச் சமயத்தையும் சாராதவர் என்ற கருத்தும் நிலவுகிறது. வள்ளுவர் தொடர்பாக அதிகமான கர்ண பரம்பரைக் கதைகளே உண்டு. வள்ளுவனின் கவிதா ஆளுமையில் தன்னைப் பறிகொடுத்த மஹாகவி பாரதியாரும்** *''யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல், வள்ளுவனைப் போல், இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணும் பிறந்ததில்லை''* **என்கின்றார். திருவள்ளுவமாலை என்ற நூலில் 53 புலவர்கள் வள்ளுவரின் புலமையைப் புகழ்ந்து பாடியுள்ளனர்.**



*திருக்குறளில் காமத்துப்பால் என்ற அதிகாரத்தில் இடம்பெறும் நலம் புனைந்துரைத்தல் என்ற இவ்வதிகாரம் தலைவன் தன் தலைவியின் பேரழகை புகழ்ந்துரைப்பதாக அமைந்துள்ளது.*

*1.* **நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்**
**மென்னீரள் யாம்வீழ் பவள்.**

| | | |
|---|---|---|
| ***அனிச்சமே!*** | = | *அனிச்சப்பூவே!* |
| ***வாழி*** | = | *நீ வாழ்வாயாக,* |
| ***நல் நீரை*** | = | *(மென்மைத் தன்மையால் நீ எல்லாப் பூவினும்) நல்ல குணமுடைய (ஆயினும்)* |
| ***யாம் வீழ்பவள்*** | = | *எம்மால் விரும்பப்பட்டவள்* |
| ***நின்னினும்*** | = | *உன்னைக் காட்டிலும்* |
| ***மெல் நீரள்*** | = | *மென்மைத் தன்மையை உடையவள்.* |

**பொருள்**

*அனிச்சமே! நீ மிக மென்மையாக உள்ள பூவாயினும், என்னால் விரும்பப்படும் இவள் உன்னைக் காட்டிலும் மென்மைத் தன்மை உடையவள்.*

*2.* **மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்**
**பலர்காணும் பூவொக்கும் என்று.**

| | | |
|---|---|---|
| ***நெஞ்சே!*** | = | *என் நெஞ்சமே!* |
| ***இவள் கண்*** | = | *(நானே காணப்பெற்ற) இவள் கண்கள்* |
| ***பலர் காணும்*** | = | *பலரும் காண்கின்ற* |
| ***பூ ஒக்கும் என்று*** | = | *மலர்களை ஒத்திருக்கின்றன என்று எண்ணி* |
| ***மலர் காணின்*** | = | *(தாமரை , குவளை, நீலம் முதலிய) மலர்களைக் கண்டால்* |
| ***மையாத்தி*** | = | *மயங்கி நின்றாய். ( உன் அறிவு இருந்த விதம் என்ன?)* |

**பொருள்**

*நெஞ்சே! பலரும் காணும் தாமரை, குவளை, நீலம் முதலிய மலர்களைக் காணும் போது உன் தலைவியின் கண்களை இவை ஒத்திருக்கிறது என்று நீ மயங்குகின்றாய். ஆனால் அவள் கண்களுக்கு அவை ஒப்பாக மாட்டா.*

*3.* **முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்**
**வேல்உண்கண் வேய்த்தோ ளவட்கு.**

| | | |
|---|---|---|
| **வேய்த்தோள் அவட்கு** | = | *மூங்கிலைப் போன்ற தோள்களை உடையவளுக்கு* |
| **மேனி** | = | *உடலின் நிறம்* |
| ***முறி*** | = | *தளிரேதான்* |
| **முறுவல்** | = | *பல்* |

| | | |
|---|---|---|
| **முத்தம்** | = | முத்தே தான் |
| **நாற்றம்** | = | இயல்பான மணம் |
| **வெறி** | = | நறுமணமாக இருக்கும் |
| **உண்கண்** | = | மை பூசப்பட்ட கண் வேலேதான். |

**பொருள்**

மூங்கிலைப் போன்ற தோளை உடையவளுக்கு உடல் நிறம் தளிரேதான்; பல் முத்தேதான்; இயற்கை மணம் மிகுதியானது; கண் வேலே தான்.

4. **காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்**
   **மாண்இழை கண்ஒவ்வேம் என்று.**

| | | |
|---|---|---|
| **குவளை** | = | குவளை மலர்கள் |
| **காணின்** | = | காணும் இயல்பைப் பெற்றுக் காணுமானால் |
| **மாண்** | = | சிறப்பமைந்த |
| **இழை** | = | அணிகலன்களை உடையவளது |
| **கண்** | = | கண்ணுக்கு |
| **ஒவ்வேம் என்று** | = | யாம் ஒப்பாக மாட்டோம் என்று எண்ணி |
| **கவிழ்ந்து** | = | தலைகுனிந்து |
| **நிலன் நோக்கும்** | = | (நாணத்தால்) நிலத்தைப் பார்க்கும், |

**பொருள்**

ஆபரணங்களை அணிந்த மாட்சிமைப் பெற்ற இவளது அழகை குவளை மலர்கள் கண்டால் இவளுக்கு நாம் ஒப்பாக மாட்டோம் என்று தலைகுனிந்து கொள்ளும்.

5. **அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு**
   **நல்ல படாஅ பறை.**

| | | |
|---|---|---|
| **அனிச்சப் பூ** | = | (இவள் தன் மென்மைத் தன்மையைக் கருதாமல்) அனிச்சப்பூவை |
| **கால்** | = | காம்பை |
| **களையாள்** | = | நீக்காமல் |
| **பெய்தாள்** | = | (கூந்தலில்) சூடிக்கொண்டாள் |
| **நுசுப்பிற்கு** | = | (ஆதலால்) இவளுடைய இடுப்பிற்கு |
| **நல்ல பறை** | = | நல்ல பறைகள் (மேளங்கள்) |
| **படாஅ** | = | ஒலிக்க மாட்டா, |

**பொருள்**

*இவள் தன் மென்மையைக் கருதாமல் அனிச்சப் பூவைக் காம்பு நீக்காமல் சூடிக்கொண்டதால் இடுப்பு ஒடியும். ஆதலால், இடுப்பின் முறிவிற்கு நல்ல பறைகள் ஒலிக்க மாட்டா.*

6. **மதியும் மடந்தை முகனும் அறியா**
   **பதியின் கலங்கிய மீன்.**

| | | |
|---|---|---|
| ***மீன்*** | = | *நட்சத்திரங்கள்* |
| ***மதியும்*** | = | *சந்திரனுக்கும்* |
| ***மடந்தை முகனும்*** | = | *இவளுடைய முகத்துக்கும்* |
| ***அறியா*** | = | *வேறுபாடு அறியாமல்* |
| ***பதியின்*** | = | *தம் நிலையினின்றும்* |
| ***கலங்கிய*** | = | *கலங்கித் திரிகின்றன.* |

**பொருள்**

*வானத்து நட்சத்திரங்கள் நிலவையும் எமது மடந்தை முகத்தினையும் இதுதான் நிலவு, இதுதான் முகம் என்று அறிந்துகொள்ள முடியாது மயங்கித் திரிகின்றன.*

7. **அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல**
   **மறு உண்டோ மாதர் முகத்து.**

| | | |
|---|---|---|
| ***அறுவாய்*** | = | *குறைந்த இடமெல்லாம்* |
| ***நிறைந்த*** | = | *படிப்படியாக நிறைந்து தோன்றும்* |
| ***அவிர்*** | = | *ஒளி வீசும்* |
| ***மதிக்குப் போல*** | = | *சந்திரனுக்கு இருப்பதைப் போல* |
| ***மாதர் முகத்து*** | = | *இப்பெண்ணின் முகத்தில்* |
| ***மறு உண்டோ?*** | = | *களங்கம் உண்டோ? (இல்லையே!)* |

**பொருள்**

*சந்திரனிடத்து இருப்பதைப்போல இப்பெண்ணின் முகத்தில் எவ்விதக் கறையும் இல்லையே!*



*8.* **மாதர் முகம் போல ஒளிவிட  வல்லையேல்**
**காதலை வாழி மதி.**

| | | |
|---|---|---|
| ***மதி!*** | = | *மதியே!* |
| ***வாழி*** | = | *நீ வாழ்வாயாக* |
| ***மாதர் முகம் போல்*** | = | *இப்பெண்ணின் முகத்தைப்போல* |
| ***ஒளிவிட வல்லையேல்*** | = | *ஒளிவீச உன்னால் முடியுமானால்* |
| ***காதலை*** | = | *நீயும் என் காதலுக்கு உரிமை பெறுவாய்.* |

**பொருள்**

*நிலவே நீ என் தலைவியைப் போல ஒளிவீசுவாயானால் நீயும் என் காதலுக்கு உரியவளாய் இருப்பாய்.*

**9. மலர்அன்ன கண்ணாள் முகம்ஒத்தி யாயின்**
**பலர்காணத் தோன்றல் மதி.**

| | | |
|---|---|---|
| ***மதி!*** | = | *சந்திரனே!* |
| ***மலர் அன்ன கண்ணாள்*** | = | *மலர் போன்ற கண்ணையுடைய இவளின்* |
| ***முகம் ஒத்தியாயின்*** | = | *முகத்தைப் போன்றிருக்க விரும்புவாயானால்* |
| ***பலர் காணத்தோன்றல்*** | = | *பலரும் காணும்படியாகத் தோன்றாதிருப்பாயாக.* |

**பொருள்**

*சந்திரனே! மலர் போன்ற கண்களையுடைய இவள் முகத்தைப் போன்று இருக்க நீ விரும்பினால் பலரும் காணும்படி தோன்றாதே.*

*10.* **அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்**
**அடிக்கு நெருஞ்சிப் பழம்.**

| | | |
|---|---|---|
| **அனிச்சமும்** | = | *(மிக மென்மையுள்ள ) அனிச்சப் பூவும்,* |
| **அன்னத்தின் தூவியும்** | = | *அன்னப் பறவையின் சிறகும்,* |
| **மாதர் அடிக்கு** | = | *இப் பெண்ணின் அடிகளுக்கு,* |
| **நெருஞ்சிப் பழம்** | = | *நெருஞ்சி முள்போல வருத்தம் செய்யும்.* |

**பொருள்**

*அனிச்சப் பூவும், அன்னத்தின் சிறகும் மிக மென்மையாயினும், அவை நெருஞ்சி முள்போல இவள் அடிகளை வருத்தும்.*

**பொருளுணர் திறன் செயற்பாடு**

1. *தலைவன் தலைவியின் நலங்களை எவ்வாறெல்லாம் புனைந்துரைக்கிறான்?*
2. *தலைவியின் பாதங்களை நெருஞ்சி முட்கள் போல் உறுத்துவன எவை என வள்ளுவர் கூறியுள்ளார்.*
3. **அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல**
   **மறு உண்டோ மாதர் முகத்து.**
   *அ. இக்குறளின் பொருளை உமது மொழிநடையில் எழுதுக.*
   *ஆ. பெண்ணின் அழகை விபரிக்குமாற்றிலுள்ள சிறப்புக்களை விளக்குக.*
4. *இவ்வதிகாரத்தில் கையாளப்பட்டுள்ள அணிகள் எவை? அவற்றின் பொருத்தப்பாட்டினை ஆராய்க.*
5. *இக்குறள்களில் இழையோடும் வள்ளுவரின் கற்பனையாற்றலை உதாரணம் தந்து விளக்குக.*

## குழுமச் செயற்பாடு

அறத்துப்பாலில் விரும்பிய அதிகாரங்களைத் தெரிவு செய்து, உவமைகள் இடம்பெறும் பத்துக் குறள்களையும், அவற்றின் சிறப்புக்களையும் எழுதிக் காட்சிப்படுத்துவோம்.

## திறன் வளர் செயற்பாடு

தெரிவு செய்த குறள்களின் கருத்துக்களைக் கொண்ட கவிதை ஒன்றினை ஆக்குவோம்.

# 11 புதுமைப் பெண்ணாய் மாறிடுவோம்

**குறிஞ்சித் தென்னவன் (1934 - 1998)**

இவர் மலையகத்தில் நுவரெலியா மாவட்டத்தின் நோர்வூட் - தென் மதுரைத் தோட்டத்தில் பிறந்தார். தனது 11 ஆவது வயதிலேயே தோட்டத் தொழிலாளியாகப் பெயர் பதிந்துகொண்ட இவர், தான் அனுபவித்த வேதனைகளை மையப்படுத்தி கவிதைகளை எழுதத் தொடங்கினார். நாடகங்களையும், பக்திப் பாடல்களையும் குறும்பாக்களையும் எழுதியுள்ள போதிலும் கவிதைகளே இவரது ஆளுமையைப் பறைசாற்றி நிற்கின்றன. சிங்களத்திலும், ஆங்கிலத்திலும் இவரது கவிதைகள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. குறிஞ்சித் தென்னவன் கவிச்சரங்கள் என்ற பெயரில் சாரல் நாடன் இவரது கவிதைகளைத் தொகுப்பாக வெளியிட்டுள்ளார். இலக்கிய வித்தகர், கலா பூஷணம் ஆகிய மகுடங்கள் இம்மக்கள் கவிஞனுக்குக் கிடைத்த கௌரவங்களாகும்.



*இக்கவிதை தோட்டத் தொழிலாளிப் பெண்களின் வேதனைகளையும் அதிலிருந்து மீளத்துடிக்கும் அவர்களது வேட்கையையும் வெளிப்படுத்துகிறது.*

காலையிலே பனி காயுமுன்னே குளிர்
காற்றைக் கிழித்துமே ஓடுகின்றோம்! - தொழிற்
சாலையிலே சங்கு ஊது முன்னே பசுந்
தங்கத் தளிரினை கிள்ளிடுவோம்!

வெண்டை விரல்கள் விறைத்திடினும் எங்கள்
மேனி குளிரில் நடுங்கிடினும், - இரு
கெண்டை விழிகள் பளபளக்கும், தளிர்
கிள்ளவோ கைகள் பரபரக்கும்!

கூடை அசைந்து பக்கத்திலும் வந்து
கூட்டும் 'கிறுக் கிறுக்' கோசையிலே-நெஞ்ச
மேடையிலே சதி ராடுமெண் ணங்களின்
வேதனை துன்ப ஒலிகேட்கும்!

பக்க நிரைச்செடி சிக்கிடும் போதிலும்
பக்குவ மாகவி லக்கிச் செல்வோம் - எம்மைச்
சிக்கவைத் திருக்கும் அடிமைத் தளையினை
தூக்கி யெறியத் துணிவு கொள்வோம்!

வெட்டிய செடியில் புடைத்தெழும் அரும்பென
மேலுறும் எண்ணம் எங்கள் மனதில், - இனி
முட்டித் ததும்பி முளைத்து விடும் எம்மை
மூடிய பேரிருள் ஓட்டிடுவோம்

என்றும் அடிமைச் சிறையினி லேவைத்த
எத்தர்கள் கொட்ட மடக்கிடவே பெருங்
குன்று நிகர்த்த மனவுறுதி கொண்டு
கோதையர் போரிட முன்வருவோம்!

பெண்ணுக்கு கல்வி பெருந்தீது, உரிமை
பேசிடி லோஅது பெருந்தவறு, என்ற
எண்ணம் படைத்தவர் மண்ணிற் புதைந்திட
எண்ணற் கரிய கலைபடைப்போம்!

சாதிச் சமய சங்கறுத்து, பெண்கள்
தாழ்வுயெனும் தீய போக்கொழித்து; இம்
மேதினி யில்புது மாற்றம் படைத்து பெண்
விடுதலைக் கீதம் இசைத்திடுவோம்!

பெண்ணுக்கு இங்கோர் தனிநீதி - என
பேசிடும் நூல்கள் எவையெனினும் - அவை
மண்ணில் புதைத்து மகிழ்ந்திடுவோம் - நவ
மாதர் அறங்கள் படைத்திடுவோம்!

போலித் தலைமை பொசுக்கிடுவோம் - இவர்
பொய்மைத் திரையைக் கிழித்தெறிவோம்!
பாலித்திடுவோம் புதுயுகத்தை, மலைப்
பாவையர் வாழ்வில் உயர்ந்திடுவோம்!

**பொருளுணர் திறன் செயற்பாடு**

1. *கவிதையை அடிப்படையாகக் கொண்டு பின்வருவனவற்றை விளக்குக.*
   *அ. மலையகத் தொழிலாளிப் பெண்களின் கடின உழைப்பு*
   *ஆ. விடுதலை வேட்கை*
   *இ. பெண் உரிமைச் சிந்தனைகள்*

2. *கவிதையைச் சிறப்பிக்கும் பின்வரும் உத்திகளை உதாரணங்களுடன் எடுத்துக்காட்டுக.*
   *அ. உவமை உருவகங்கள்*
   *ஆ. ஓசை நயம்*

**குழுமச் செயற்பாடு**

***மலையக வாழ்வியலைச் சித்திரிக்கும் நாவல், சிறுகதை, கவிதை, புகைப்படங்கள், ஓவியங்கள் முதலியவற்றைத் திரட்டிக் கண்காட்சி ஒன்றினை நடாத்துவோம்.***

**திறன் வளர் செயற்பாடு**

***‘‘பொங்குவோம் சோதரிகளே’’ என்ற தலைப்பில் வகுப்பறையில் கவியரங்கம் ஒன்றினை நிகழ்த்துவோம்.***

# பொருளடக்கம்

# 1 கானல் வரி

**இளங்கோவடிகள்**

இளங்கோ அடிகள் சங்கமருவிய காலத்தில் தமிழகத்தில் பிறந்தவர். அரச குலத்தைச் சேர்ந்த இவர், சமண சமயத்தைத் தழுவி துறவறத்தைப் பின்பற்றியதாக அறியப்படுகின்றது. தனது காலத்தைச் சேர்ந்த புலவர்கள் அறத்தை நேரிடையாக இறைத்துக் கொண்டிருந்தபோது இவர் சிலப்பதிகாரம் என்னும் பெருங்காப்பியத்தைத் தமிழிலே சிருஷ்டித்துத் தந்தவர் ஆவார்.



கோவலன் - கண்ணகி ஆகியோரின் கதையைக் கூறும் இக்காப்பியத்தின் புகார்க் காண்டத்தில் கானல் வரி என்ற இப்பகுதி இடம்பெறுகின்றது. கண்ணகியை விட்டு மாதவியுடன் வாழ்ந்துவரும் கோவலன் மாதவியுடன் இந்திர விழாக் காணச் சென்ற இடத்தில் மாதவியின் வேண்டுகோளின்பேரில் காவிரியை விளித்துப் பாடுகின்றான். இப்பாடலைக் கேட்ட மாதவியும் எதிர்ப்பாட்டுப் பாடுகிறாள். கானல் வரியில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பாடல்களே இவையாகும்.

## காவிரியை நோக்கிக் கோவலன் பாடியவை

*1.* திங்கள் மாலை வெண்குடையான்
சென்னி செங்கோ லதுஓச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி;
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாது ஒழிதல் கயற்கண்ணாய்
மங்கை மாதர் பெருங்கற்பென்று
அறிந்தேன் வாழி காவேரி.

*''மாலை அணிந்த முழுமதிபோல் வெண் குடையையுடையவன் சோழன். அவன் தன் செங்கோலைச் செலுத்திக் கங்கையைக் கூடினாலும் நீ அவனை வெறுப்பதில்லை! அதனால் நீ வாழ்வாயாக, காவேரி! கங்கையை அவன் புணர்ந்தாலும் அவனை நீ வெறுக்காமலிருப்பதற்குக் காரணம் கயல் கண்ணாய்! மாதரின் நிலை பெற்ற பெருங் கற்பின் தன்மையே என்பதனை நான் அறிந்து கொண்டேன், வாழி காவேரி!''*

*2.* மன்னு மாலை வெண்குடையான்
வளையாச் செங்கோ லதுஓச்சிக்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரிக்;
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல் கயற்கண்ணாய்
மன்னு மாதர் பெருங்கற்பென்று
அறிந்தேன் வாழி காவேரி.

*''நிலைத்த புகழ்மாலை சூடிய, வெண் கொற்றக் குடையையுடையவன் சோழ வேந்தன். அவன் என்றும் வளையாத தன் செங்கோலைச் செலுத்திக் குமரியைப் புணர்ந்தானாயினும் நீ அவனை வெறுக்காமலிருக்கிறாய்! அதனால் நீ வாழ்வாயாக காவேரி ! கன்னியாகிய குமரியை அவன் புணர்ந்தாலும் நீ அவனை வெறுக்காமலிருப்பதற்குக் காரணம் கயல் கண்ணாய்! மாதரின் நிலை பெற்ற பெருங் கற்பின் தன்மையே என்பதனை நான் அறிந்து கொண்டேன், வாழி காவேரி!'*

3. **உழவர் ஓதை மதகோதை**
**உடைநீ ரோதை தண்பதங்கொள்**
**விழவ ரோதை சிறந்தார்ப்ப**
**நடந்தாய் வாழி காவேரி;**
**விழவ ரோதை சிறந்தார்ப்ப**
**நடந்த எல்லாம் வாய்காவா**
**மழவ ரோதை வளவன் தன்**
**வளனே வாழி காவேரி.**

*'' புதுப்புனல் பெருகி வந்தது கண்டு, உழவர் மகிழ்ச்சியால் ஆர்ப் பரிக்கும் ஓசையும், நீர் மதகிலே செல்லுவதால் உண்டாகும் ஓசையும், கரைகளையும் வரப்புகளையும் உடைத்துப் பாய்கின்ற நீரின் ஓசையும், புதுப்புனல் விழாக் கொண்டாடும் மக்களின் பலவகை ஓசையும் இருபுறமும் சிறந்து ஒலிக்க, நீ நடந்து செல்பவள்! ஆதலில் நீ வாழ்வாயாக! காவேரி! நீ அவ்வாறு நடந்த செயலெல்லாம் அரணிடத்தைக் காவல் செய்யவும் வேண்டாமைக்குக் காரணமான வீரரின் போர் ஒழுக்கத்தையுடைய சோழ வேந்தனின் ஆட்சிச் சிறப்பேயாகும் என்பதனை நான் அறிந்தேன், நீயும் அறிவாயாக! வாழி காவேரி!''*

### காவிரியை நோக்கி, மாதவி பாடியவை

4. **மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ வாடை அது போர்த்துக்**
**கருங்க யல்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி**
**கருங்க யற்கண் விழித்து ஒல்கி நடந்த வெல்லாம் நின் கணவன்**
**திருந்து செங்கோல் வளையாமை அறிந்தேன் வாழி காவேரி.**

*''இருபக்கமும் வண்டுகள் மிக்கொலிக்க, அழகிய பூவாடை போர்த்து, கரிய கயல்போலும் கண் விழித்து அசைந்து நடந்தனை! காவேரி நீ வாழ்வாயாக ! கருங்கயல் போலும் கண்களை விழித்து அங்ஙனம் நளினமாக அசைந்து நடக்கும் செயலுக்கெல்லாம் காரணம், நின் கணவனான சோழ வேந்தனின் திருந்து செங்கோல் வளையாமையே என்பதனை அறிந்தேன்! காவேரி நீ வாழ்வாயாக!'' (ஆடவர் செம்மை நெறிநின்றால்தான் பெண்ணின் கற்புச் சிறக்கும் என்பதனை விளக்கக் காவிரியை ஒரு பெண்ணாக உருவகித்துப் பாடினாள்.)*

5. **பூவார்சோலை மயில் ஆலப் புரிந்து குயில்கள் இசைபாடக்**
**காமர் மாலை அருகசைய நடந்தாய் வாழி காவேரி**
**காமர் மாலை அருகசைய நடந்த எல்லாம் நின்கணவன்**
**நாம வேலின் திறங்கண்டே அறிந்தேன் வாழி காவேரி.**

''பூக்கள் நிறைந்த சோலையில் மயில்கள் மகிழ்ந்து ஆட, குயில்கள் விரும்பி இசைபாட, விருப்பம் பொருந்திய மலைகள் அருகே அசைய நடந்தாய்! காவேரி நீ வாழ்வாயாக! அவ்வாறு நடந்ததற்கெல்லாம் காரணம், நின் கணவனான சோழ வேந்தனது பகைவர்க்கு அச்சம் தரும் வேலின் ஆற்றலை நீ கண்டதாலேதான் என்பதை நான் அறிந்தேன்! காவேரி நீ வாழ்வாயாக!''

6. **வாழி யவன்தன் வளநாடு மகவாய் வளர்க்கும் தாயாகி**
**ஊழி உய்க்கும் பேருதவி ஒழியாய் வாழி காவேரி**
**ஊழி உய்க்கும் பேருதவி ஒழியா தொழுகல் உயிரோம்பும்**
**ஆழி யாள்வான் பகல்வெய்யோன் அருளே வாழி காவேரி.**

''உன் கணவனான சோழனின் வளநாடு மகவாக, நீ அதனை வளர்க்கும் தாயாகி ஊழிக்காலம் வரை நடத்தி வருகின்ற பேருதவியை ஒரு போதும் நிறுத்தியதில்லை! காவேரி நீ வாழ்வாயாக ! நீ அங்ஙனம் காத்து வருவதற்குக் காரணம் உயிர்களைப் பாதுகாக்கும் ஆணைச்சக்கரத்தைச் செலுத்தும் சோழ மாமன்னனின் நடுவு நிலைமை பிறழாத தன்மையே அன்றோ? காவேரி நீ வாழ்வாயாக!''

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. இப்பகுதியில் சோழ மன்னனின் பெருமைகள் வெளிப்படுமாற்றினை எடுத்துக்காட்டுக.
2. காவேரி நதியின் வளத்தை விபரிக்குமாற்றிலுள்ள சிறப்பை விளக்குக.
3. சோழ மன்னனின் நிலைபேறுடைய ஆட்சிக்குக் காரணமென்று இளங் கோவடிகள் எதனைக் குறிப்பிடுகிறார்.
4. இப்பகுதியில் இடம்பெறும் அணிகளை இனங்கண்டு அவற்றின் சிறப்புக்களை விளக்குக.
5. பின்வரும் அடிகளின் இழையோடும் இலக்கியச் சிறப்பினை விளக்குக.
   **(அ) மன்னு மாலை வெண்குடையான் வளையாச் செங்கோல்...**
   **(ஆ) மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூவாடை அது போர்த்து...**
   **(இ) வாழியவன் தன் வளநாடு மகவாய் வளர்க்கும் தாயாகி ஊழி உய்க்கும் பேருதவி ஒழியாய்.**

**குழுமச் செயற்பாடு**

சிலப்பதிகாரத்தில் ஒரு காட்சியைத் தெரிவு செய்து அதனைப் பாத்திரமேற்று நிகழ்த்திக் காட்டுவோம்.

**திறன் வளர் செயற்பாடு**

இந்திரவிழாவில் இடம்பெறும் மாதவியின் நடன நிகழ்வு பற்றிய நேர்முக வருணனையொன்றினை நிகழ்த்துவோம்.

# 2 தெளிவு

**மு. பஷீர்**

இவர் கம்பஹா மாவட்டத்தில் மினுவாங்கொட பிரதேசத்தில் கல்லொழுவ கிராமத்தில் பிறந்தவர். சிறுகதை, கவிதை, ஆய்வு என கடந்த நான்கு தசாப்தங்களாக இலக்கிய உலகில் காலூன்றி நிற்பவர். இவரது படைப்புக்கள் சமூக யதார்த்தத்தைப் பேசுபவை, கலைத்துவம் மிக்கவை. இவர் கையாளும் மொழி விஷயச் செறிவும் எளிமையும் உணர்வோட்டமும் கொண்டமைகின்றது. 1986ல் மீறல்கள் கதையுடன் இலக்கிய உலகில் பிரவேசித்த இவர் மீறல்கள், தலைமுறை இடைவெளி உட்பட நான்கு சிறுகதைத் தொகுதிகளைத் தந்துள்ளார். இலக்கியத்துக்காக கலாபூஷணம் விருது வழங்கிக் கௌரவிக்கப்பட்டுள்ளார்.



தபால் என்ற தொடர்பாடல் ஊடகம் தற்காலத்தில் பெறுமதியின்றி காணப்பட்டாலும் ஒரு காலத்தில் அதுவே இன்ப துன்பங்களைச் சுமந்து வருவதாக அமைந்தது. அந்த நாட்களில் அதிகாலை வேளைகளில் தபாற்காரர்களின் வருகை ஆவலோடு எதிர்பார்க்கப்படும். வெளிநாட்டுப்பயணம், பரீட்சைப் பெறுபேறுகள், உறவுக்காரர்களின் தகவல்கள் இப்படிப் பலவற்றைச் சுமந்துவரும் தெய்வ தூதராகவே தபாற்காரர் வரவேற்கப்பட்டார். இச்சிறுகதை தபாற்காரர் ஒருவரின் நிலையைச் சுவை பட விபரிக்கின்றது.

உச்சி வெய்யில் உடலை வெப்பமேற்றி முதுகை நனைக்கிறது. மேடு, பள்ளம் என்று சைக்கிள் மிதித்ததில் கால்விரல்களில் ஊமைவலி. கையில் கடிதக்கட்டுடன் வியர்வை நெடியோடு, ஊரை வலம் வருகிறேன் நான். காற்றை யாரோ கடத்திக் கொண்டு போன பிரமையில், மரங்கள் சோகம் சுமக்கின்றன. எதிர்பார்ப்பில் சிறகு முளைத்த மனித ஈக்கள், என்னை நோக்கி விரைகின்றன. கனவிலும் நினைவிலும் கடிதக்காரனை ஆராதிப்பதில் ஆசுவதம் காணும் புது யுகமிது.

''எங்களுக்குக் கடிதம் இருக்கியா'' பல தடவைகள், கேட்டு செவி மரத்துப்போன கேள்விதான் இது! என்றாலும் தினமும் வந்து தொலைகிறேன் கடிதங்களோடு. பதிலைக் கம்யூட்டர் அறியத்துடிக்கும், அவசரக் குடுக்கைகள், வெளிநாடு போன பர்த்தாவை நினைத்து உருகி, கனவுகள் சுமந்த கண்களால், வினா எழுப்பும் ஒற்றைக் குயில்கள். ஆத்மார்த்த சினேகிதனை வரவேற்கும் உற்சாகத்தோடு, நெருக்கமாய் ஒட்டிக் கொள்வோர். உறவுமுறை விளித்து, காரியத்தைக் கச்சிதமாய் அறிய விழைவோர்.

இப்படி பல ரகத்தினரை, தினமும் பார்க்கின்றேன். அத்தனை முகங்களிலும் பளிச்சிடும் பாவங்கள் எனக்குப் பரிச்சயமானவை. இந்த அந்நியமற்ற யதார்த்தத்தில் ஒரு மழலையைப் போல், மனதைப் பறிகொடுக்கிறேன். நிழல் படுத்துறங்கும் குறுகலான செம்மண் பாதை. வெள்ளைப் புறாக்கள் துள்ளிக் குதிக்கும் கலவன் பாடசாலை. விழுது பரப்பி அடர்ந்து செறிந்த ஆலமரம், துல்லியம் துலங்கும் இறை இல்லமாம் பள்ளிவாசல். குச்சில் வீடுகள், மாடி வீடுகள், தேநீர்க்கடைகள், குப்பைக் கடதாசிகளை மென்று சுவாரசியமின்றிச் செல்லும் கால் நடைகள் இன்னும் செயற்கை முகம் தரிக்காத கிராமத்து புன்சிரிப்புக்கள்.

அத்தனையும் அழகாய், ஆத்மார்த்தமாய், தரிசனம் காட்டி, அடி நெஞ்சில் பதிவாகின்றன. 'பாரூக் நானா! எனக்கு கடிதமீக்கியா?' பெண்சாதியை சவூதிக்கு அனுப்பிவிட்டு, பரம பக்தனாய் மாறிப் பள்ளியும் கையுமாய், தொப்பியும் தலையுமாய், வேஷம் தரித்த நிஷ்தார், பதறிக்கொண்டு பாதையின் குறுக்கால் பாய்ந்தான்.

'ஒன்ன... பஜாரில பாத்தன் காணல்ல! ஒனக்கு வெளிநாட்டுக் கடிதமொண்டு இருக்கி...!'

வார்த்தைகளை அழுத்திச் சொல்லிவிட்டு, அவன் மனைவி சுலைஹாவை ஆர்வத்தோடு தேடிக்கொண்டிருந்தேன். கடிதக்கட்டுக்குள்தான், அதற்குள், அடுக் களையை உருட்டும் - பூனையாய்ப் படபடத்தான் அவன்.

‘ரெஜிஸ்டர் காயிதமா? நல்லாப் பாருங்க!’ வெசாக் காலத்துத் தோரண பல்புகளாய் ஆந்தை விழி ஒளி உமிழ்ந்தன.!

‘ரெஜிஸ்டர்தான், இதில கையொப்பம் போடு!’

கடைக்கண்ணால் அவனை நோட்டமிட்டவாறு ஒரு கவலைப் பெருமூச்சு விட்டேன். அது அவனுக்கு வெளிநாட்டுப் பணம் வந்துள்ளதே, என்ற வயிற்றெரிச்சலினால் அல்ல! ஒரு நாடக இயக்குநராக என்னால் வரமுடியாமல் போனதே என்ற ஆதங்கத்தினாலேயே அப்படி ஒரு திறமை, எனக்கு வாய்த்திருந்தால், நடக்கிற கதையே வேறு. கேள்வி, பார்வை, இல்லாமல் இவனை இராவணன் ஆக்கி வேடிக்கை பார்த்திருப்பன்.

அந்த இறுகிய முகத்தில், அப்படியொரு அசாத்திய முரட்டுத்தனம்! மின்னல் வேகத்தில், கையெழுத்தைப் போட்டுவிட்டு, கடிதத்தை மடித்து சட்டைப்பையில், திணித்துக் கொண்டான். கோழிக்குஞ்சை அலகால் கவ்வி, அசகாயமாய்ப் பறக்க முயலும் காகமாய் அவன் நழுவுவதற்கு முன், என் பஞ்சப் பாட்டின் முதலடியைக் கீழ் ஸ்தாயியில் சுரம் கூட்டினேன்.

நிஷ்தாரு! ஒரே தல சுத்தா…யிருக்கப்பா! வெலனலயிருந்து, ஒண்டும் தின்னவுமில்ல… என் சோக ஆலாபனையில் ஒன்றும் அவன் சொக்கிப் போகவில்லை. சனியன் தொலையுது! ஆளை விட்டால் போதும்! என்ற எச்சரிக்கை உணர்வோடு ஒரு பத்து ரூபாய் நோட்டை, விட்டெறிந்துவிட்டு தப்பினேன், பிழைத்தேன் என்று தாவிப் பறந்தான்.

இதற்கு மேல் இந்த எருமைக் காம்பிலிருந்து மேலதிகமாக, பால் சுரக்கப் போவதில்லை என்ற உண்மை நான் அறிந்ததுதான். என்றாலும் இதிலே என்னத்தை ஆகப்போகுது! கடைக்குப் போய் ஒரு சின்னக்கடி ஒரு குடி, நோட்டு கைமாறிவிடும். பெரிய தருமம் பண்ணியதாக நினைப்பு, கருமி பஹீலன். அடிமனம் அழுது தொலைத்தது. பாதையை வெறிக்கிறேன். வண்ணக் கடதாசிகளைக் கிழித்து வீதியெங்கும் வீசினால் போல், மொண்டிசூரி பிள்ளைகளின் ஊர்வலம்.

கவனமாகப் போக வேண்டும் இல்லாட்டி…! ஏதாவது ஒன்று, தப்பித்தவறி குறுக்கால பாஞ்சா, முஹப்பத், எல்லாம் பாலாய் ஆகி, வீண் வம்பா போயிடும். எதற்கு மெல்ல மிதிக்கணும்! கோடை அவஸ்தையில், சவாரி சலிப்போடு தொடர்கிறது. மீண்டும் எதிர்ப்படுவோரின் அபசுரமாய், கடிதமீக்கீயா? என்ற கேள்வி. சிலருக்கு சைகை, சிலருக்கு வார்த்தை, பதிலாய் ஜனிக்கின்றன. தொண்டையில் சளியிறுகி, உமிழ் நீர் தடைப்படுகிறது. அப்பாடா! பிள்ளைகளின் தொல்லை முடிந்து பாதை

வெறுமை தட்டியிருந்தது. ஊன்றி மிதித்தால், ஹாஜியார் கடையை அடைந்துவிடலாம். தடைப்பட்ட உமிழ் நீர் ஹாஜியார் கடை டீயை, நினைத்ததும் நாவை ஈரமாக்கிக் கொண்டு சுரந்தது.

லுஹர் தொழுகை முடிந்த பகல் வேளை. தொப்பி அணிந்தவர்களின் ஆரவாரத்தில் கடை, களைகட்டியிருந்தது. என்னைக் கண்ட சிலர், யானையின் செவியில் அங்குசமுனையால் குத்தி அவஸ்தை கொடுப்பது போல், மீண்டும் மீண்டும் ஒரே பாணியிலான அதே கேள்வி 'கடிதமீக்கியா?' உச்சி வெய்யிலின் உறைப்பு உடலைத் தள்ளாட வைத்து சோர்வு கனக்க.

கிழங்குப் பெட்டிஸை, வாயில் தள்ளிக் கொண்டே வாங்கில் சரிகிறேன். 'பியோன் பாரூக் நானாக்கு, சாயம் கட்டியா ஒரு டீ போடு மவன்!' ஹாஜியாரின் தகரக் குரல் கடையெங்கும் எதிரொலிக்கிறது. அண்மையில் நடைபெற்ற மாகாண சபைத் தேர்தல் பற்றிய சூடான வாக்குப்போர் ஒன்று திடீரென வெடித்துக் கிளம்பியது. எதிலுமே பிடிப்பற்ற ஒரு மலட்டுச் சோகம், எனக்குள்.

என்னுடைய ஆமை வேக வண்டி நடைபாதையில் இறங்கி அல்லாடுகிறது.

'பாரூக்... நில்லு மகன்!'

மூச்சிறைக்க தள்ளாடிக் கொண்டே முன்னால் நின்றாள் மைமூன் கிழவி. வறுமைத் தூரிகை வரைந்த கோலங்கள், முதுமை முகத்தில் சோகங்களாய் முட்டித் தெறித்தன.

ஏன்ட மகள் சரீனா. சவூதி பெயித்து மூணு மாசமாவுது மகன்! சல்லியுமில்லை, காயிதமுமில்ல. பச்சப் புள்ள மூண்ட, ஏண்ட தலேல, பாரம் சாட்டிட்டு பெய்திட்டா! இவ்வளவு நாளும் சமது கடையில், அவள் அனுப்பினா தார என்டு, சாமான் கடனுக்கு வேங்கின. இப்ப அவன் தார இல்ல மகன். நேத்து ராவையில இருந்து, எல்லாம் பட்டினி. நான் என்னத்த செய்ய? இந்தக் கண்கூடத் தெரியாத கெழவியை அல்லா சோதிக்கியான். போன புள்ளக்கி, என்னத்த நடந்ததோ? அவளட்ட ஒரு தாக்கல் அழப்பிக்க பாரு மகன்!''

கிழவிக்குச் சுவாசம் தடைப்பட்டுத் துயரம் நெஞ்சில் முட்டியது. அவளது ஆற்றாமை என்னையும் அவஸ்தைக்குள்ளாக்கியது.

' சரீனா போன ஏஜன்சி எட்ரஸை, எனக்குத் தாங்க ஆச்சி, நான் விசாரிச்சுப் பாத்திட்டு செல்லியன்!'

இந்த ஆறுதல் மொழியினால் சிறிது ஆஸ்வாசமுற்ற அவள், நடுங்கும் கைகளினால் புடவை விளிம்பைத் தலையில் இட்டவாறு ‘அல்லாஹ் ஒனக்குத் தொண செய்வான் மகன்!’ என்றாள். கிழவியின் நிலை மனதைக் குடைந்தது. என்றாலும் ஊர்த் துன்பங்களை எல்லாம் கட்டி அழ நமக்கு ஏது நேரம்?

பசிக்களைப்பில் வீட்டை நோக்கி விரைகிறேன். அன்றைய பொழுது ஆரவாரமின்றிக் கரைகிறது. மறுநாள் காலையில் தபால் கந்தோர் எப்போதும் போல் சுறுசுறுப்பாக இயங்குகிறது. அன்று விநியோகம், செய்ய வேண்டிய தபால்கள், என வெவ்வேறாக ஒழுங்குபடுத்தி பிரதான லிகிதரின் கையெழுத்தும் வாங்கிவிட்டு, பட்டு வாடாவுக்குப் புறப்பட்டேன்.

வானம் கறுப்புப் பர்தாவில் கவலை வளர்த்தது! கிழக்கின் கிரணங்கள், வீரியமிழந்து சோகம் சொரிந்தன. குளிர் காற்றும், குமைந்த மேகத்திட்டுகளும் மழை வர்ஷிப்புக்குக் குறியீடு காட்டின. மழை பெய்தால் ஊருக்குள் அலைந்து திரிவதெப்படி? என்ற கவலை மனதைப் பெரிதும் வாட்டியது.

‘சரி முடிஞ்ச வரை பார்ப்பம்! கால் பாதங்கள் பெடல்களோடு துரித கெதியில் சரசம் புரிந்தன! பிரதான முச்சந்தியைத் தாண்டி கிராமத்துக்குள் ஊடுருவதற்குள்...? பொன் மீனைக் கவ்விய நாரையாய்ப் பொல்லாத மழை இப்பிரதேசத்தைக் காயப்படுத்துகிறது. மழையைக் கண்டபடி தூற்றிக்கொண்டே, ஒருவாறு வீட்டை அடைகின்றேன்.

‘பாத்தும்மா அந்த டவலைக் கொண்டாங்க! தலையை தொடைக்க! குரல் வீடு முழுவதும் எதிரொலித்தும் பதிலில்லாத பயங்கர வெறுமை. சில கணங்களுக்குப் பின் இளைய மகள் சுவாரஸ்யமின்றி டவலைக் கொண்டு வந்து தந்தாள். மெல்ல, குசினிப் பக்கம் வந்த எனக்கு ஆச்சரியம் காத்திருந்தது. பாத்தும்மா நிலைப்படியில் உட்கார்ந்து கொண்டு, மழையை வெறிக்கிறாளா? அல்லது மனதின் துயர மூட்டத்தைக் கருமை தட்டிய முகத்தால் சுரக்கிறாளா? நினைவுக்கீற்று பளிச்சிடுகின்றது, மின்னலாக.

காலையில் இருவருக்கும் நடந்தேறிய வாக்குவாதத்தின் பிரதிபலிப்புத்தான் இந்த இராஜரீக உறவின் முறிவு என்று நிர்ணயம் செய்து கொள்ள அவ்வளவு நேரம் எடுக்கவில்லை. நான் ஓசையின்றி மெதுவாக முன்வாசலில் அமர்ந்து கொள்கிறேன். இல்லத்தில் அடிக்கடி இப்படி முகமுறிவுகள் ஏற்படுவதுண்டு. எல்லாம் பொருளாதாரத் துண்டு விழலால் ஏற்படும் நிர்ப்பந்தங்கள்! கொஞ்சம் உரக்கப் பேசிவிட்டால், இல்லாளின் வீடோ எதிர்ப்பும், கறுப்புக் கொடி தூக்கலும் ஒரு நான்கு நாள்களுக்காவது வெற்றிகரமாக நிலைக்கும்.

வீட்டுக்கு வீடு வாசற்படிதான்! பெண்ணின் மன இயல்புகள் பாதிக்கு மேல் குழந்தைத்தனமானது! இப்படிச் சொன்ன அந்த உளவியல் மேதையின் கைகளைக் குலுக்கிப் பாராட்டுத் தெரிவிக்க வேண்டும் போலிருக்கிறது எனக்கு. பெண்ணுக்கும் சிறு குழந்தைகளுக்கும் பிடிவாதம் பிடிப்பதில் ஒரு இறுக்கமான உடன்பாடு உண்டுதான்.

ஆனால், காலையில் நடந்தேறிய போரில் பாத்தும்மா மீது பிழையேயில்லை என்பது எனது இப்போதைய முடிவு. பிரச்சினைகளை முரட்டுத்தனமாக, அணுகி எவன்தான் தீர்வை அடைந்திருக்கிறான்? கம்பளையில் நடக்கும் மாமா மகளின் கலியாண வீட்டுக்கு அவள் கட்டாயம் போகவேண்டும், என்று சொன்னதில் என்ன தவறிருக்கின்றது?

கலியாண வூட்டுக்குப் போறதென்றா ஆயிரம் ரூபாவுக்கு மேல வேணும். இப்ப வசதியில்லை! கடன் கேட்க யாருமில்ல. பொறகு பார்க்கலாம் என்று அவளது கோரிக்கையைக் காட்டமாக நிராகரித்ததின் விளைவே இந்த இடைவெளி! குற்ற உணர்வினாலும் இயலாமையினாலும் மனம் இப்போது துயர இழை பின்னுகிறது.

இன்னும் மூன்றே நாள்கள் கலியாண வீட்டுக்கு! யாராவது வந்து கை கொடுக்கமாட்டார்களா? சமாதானக் கொடியைத் தூக்கிப் பிடிப்பதற்கு.

சே! இதென்ன பேய்மழை! விடாது போலிருக்கே, இப்படியே பெய்தா இந்தக் கடிதங்களை உரியவரிடம் சேர்ப்பது எப்படி? வீடு எந்தச் சலனமுமின்றி வெறிச்சோடிப் போயிருக்கிறது. சூனிய வெறுமையும், உற்சாகமின்மையும் வாட்டித் துளைக்கின்றன.

ஆணின் உயிர்ப்புச் சக்தியே பெண்தானே? அவள் கலகலப்பின்றி முடங்கிப் போனால் எல்லாமே முடக்கம்தான். அறிஞர் அண்ணா சொன்ன வாசகம் ஒன்று எனது ஞாபகத்திற்கு வருகிகிறது.

அரிசி இல்லை! கறி இல்லை! அது இல்லை, இது இல்லை என்று பெண் சதாவும் அலட்டிக் கொள்வதால்த்தான் நமது முன்னோர்கள் அவளுக்கு இல்லாள் என்று பெயர் வைத்தார்கள். இந்த விடயத்தில் அண்ணாவிலிருந்தும், அந்த முன்னோரிலிருந்தும் கொஞ்சம் வித்தியாசப்படுகிறேன் நான்.

பொருளாதாரத் தாக்கம் - குடும்பச்சுமை - இவற்றால் மனைவி அடிக்கடி இல்லாமல் போகிறாள். தனது சுயத்தை - வாழ்க்கை அவலங்களில் இழக்கிறாள். இதனால்த்தான், இல்லாள் என்று பெயர் வந்தது. சரி கிடக்கட்டும் பேராசிரியர்கள் செய்ய வேண்டிய மொழி ஆராய்ச்சி விவகாரங்கள், இந்தப் பஞ்சத்தில் அடிபட்ட போஸ்ட்பியோனுக்கு எதற்கு?

மழை ஓயும் வரையில் கடிதங்களை வரிசைக் கிரமமாகத் தயார்ப்படுத்து கின்றேன். உள்ளூர் மடல்கள் இருபது வெளியூர் எயார் மெயில் பத்து, இதுக்குத்தானே இப்ப முக்கியத்துவம் என்பதால் முதலில் அதை அணுகுகிறேன்.

ஒவ்வொரு பெயரும் அந்த நாமத்திற்குரியவர்களை, மனக்கண்ணில் கொண்டு வந்து நிறுத்துகின்றது. அடுத்த கடிதம், சேகுலெவ்வை மைமூன் உம்மா! - பிரம் (from), சரீனா பேகம், தமாம் கே.எஸ்.ஏ. ஆச்சரியத்தால் விழிகள் வலிக்கின்றன! கூடவே மைமூன் கிழவியின் சுருக்கம் விழுந்த அந்தச் சோக முகம் வந்து தொலைகிறது.

சாதாரணக் கடிதம் அது. சரீனா ஏன் டிராப்ட் அனுப்பவில்லை? கிழவி இங்கே கிடந்து புலம்பிக் கொண்டிருக்கின்றாளே, அவளுக்கு அறிவு எங்கே போயிற்று! குடித்துக் குடித்து ஈரல் கரைந்து மவுத்தாகிப்போன அவளது வாப்பாவுக்கு வராத கரிசனை எனக்கேன் வந்தது? கிழவியின் துயரம் தோய்ந்த முகமும் குழந்தைகளின் பசிக் கொடுமையையும் நினைத்து அலட்டிக் கொண்டதால் வந்தது!

ஒரு இதமான யோசனை இடறிக் கொண்டு வந்தது. இந்தக் கடிதத்தைப் பிரித்துப் படித்தால் என்ன? அடுத்தவர் உரிமையில் அனுமதியின்றித் தலையிடுவது எவ்வளவு பெரிய அநாகரிகம். நாகரிகம் செறிந்த மனிதன் எங்காவது - இப்போது வாழுகின்றானா? அடுத்த வீட்டு அந்தரங்கங்களைக் கூட உளவு பார்த்து கைகால் சேர்த்து வெளியே போய் பிரச்சாரப்படுத்தும் புத்திசாலிகள் மலிந்த உலகமிது.

படிப்பதினால் குடி மூழ்கிப் போய்விடாது. கடித உறையை பேனா முனையின் உதவியோடு பிரிக்கிறேன்.

இதற்கு முன் செய்தறியாத ஒன்றைச் செய்வதினாலோ கடமையிலிருந்து சறுக்கி விழும் சலனத்தினாலோ, விரல்கள் நடுங்குகின்றன. அடுத்த கணம் ஆச்சரியத்தால் விழிகள், உயர்ந்தன. கின்னஸில், பதியுமளவிற்கு அப்படி ஒன்றும் பெரிய ஆச்சரியமில்லை. சின்ன மடலோடு ஒரு நூறு ரூபாய் ரியால் நோட்டு மிகக் குளிர்ச்சியாய்ச் சிரித்தது.

என்னுள் பாறை ஊற்றாய்ப் பரவசம் பொங்கிச் சுரந்தது!

அன்பு உம்மா! கடிதம் போடச் சுணங்கியதுக்கு மனவருத்தப்பட வேண்டாம். எனக்கு இங்கு சரியான வேல. கடிதம் எழுத நேரமில்ல. இரவைக்குப் படுக்கிறது ஒரு மணிக்கு, எல்லாம் எங்கட தலைவிதி உம்மா. இந்த நூறு ரியால மாத்தி சிலவுக்கு எடுங்க. இரண்டு மாசப்பணம் வார மாசம் கட்டாயம் அனுப்புறேன். ஏன்ட புள்ளைகளைப் பசியில போடாம நல்லாப் பாருங்க. நீங்களும் மருந்து எடுத்துக்

குடியுங்கோ, எப்பதான் எங்களுக்கு அல்லா, நல்ல காலத்தைத் தருவானோ? பதில் அவசரமாப் போடுங்க.

மகள்,
சரீனா பேகம்.

ஒரு திருப்தியான முடிவுக்கு வந்தவனாக எழுந்து நிற்கிறேன். இந்த ரியால் நோட்டுக்காக வழக்காடி நிரூபிப்பதற்கு எந்த ஆவணமும் கிடையாது. நோட்டையும் கடிதத்தையும் பெட்டியில் வைத்து இறுக மூடிவிடுகிறேன். கூடவே மனச்சாட்சியையும்தான். கலியாண வீட்டுக்குக் குடும்ப சகிதம் போகலாம் என்ற இறுதி நிர்ணயமும், என்னளவில் செய்தாகிவிட்டது. பிறகென்ன?

இப்போது தூறல்களின் பலம் தணிந்திருந்தது. சைக்கிளைத் தள்ளிக் கொண்டே பாதையில் நடக்கிறேன். வழியில், வழக்கமான கேள்விகள் என்னை வரவேற்கின்றன. இதென்ன? என்னை எதிர்பார்த்தபடி கிழவி பாதையருகில் வந்து நிற்கிறாளே?

'ஏண்ட பேரனுங்க, நெருப்பு மாதிரிக் காயுது! டொக்டர் கிட்ட போவ எண்டாலும் எனக்கிட்ட ஐஞ்சி சதமாலும் இல்ல. ய அல்லாஹ் நான் என்னத்தச் செய்ய மகன். கல்பு கேட்குது இல்ல. இண்டக்கி எண்டாலும் மகள்ட கடிதம் என்னத்தையும் ஈக்கியா?

அழுகையும், ஆத்திரமும் தொண்டையை அடைக்கிறது அவளுக்கு. பாம்பை மிதித்துவிட்ட பயம் கலக்கம் எனக்கு. 'கடிதம் இல்ல ஆச்சி நான் வாரேன் நேரம் பெயித்திட்டுது!'

ஒரு மாபெரும் சங்கடத்திலிருந்து மீண்ட உணர்வில் உற்சாகம் வரவழைத்து வேகமாக மிதிக்கிறேன். கிழவியும் பாத்தும்மாவும் மனக்கண்ணில் நிர்தாட்சண்யமாய் நிழலாடினர். இருவரில் யாருடைய முகத்தில் பூரிப்பின் முத்திரையைப் பதிப்பது என்பதில் உள்மனம் அவலப்பட்டுக் கொண்டது.

ஆக, உணர்வுகளின் ஆர்ப்பரிப்பில் ஆன்மா அழுந்தித் துடித்தது. குற்ற உணர்வும், குறுகுறுக்கும் நெஞ்சோடும், இனி என்னால் ஊர் உலாப் போக முடியாது. மேலிடத்துக்கு, மழையைக் காரணம் காட்டிச் சமாளிக்கலாம். குமைந்து கனக்கும் உள்ளத்தை ஆசுவாசப்படுத்தியவாறு பயணத்தைப் பாதியில் முறித்துக் கொண்டு இல்லம் விரைகிறேன்.

இரவு நீண்டு மௌனம் வளர்த்தது. மேசையில் பாணும் பருப்புக் கறியும் தீண்டுவாரற்றுக் கிடந்தது. இமைகள் இறுகிக் கனத்து மூட மறுத்தன. பசியிருந்தும் உணவு வெறுத்தது. உள்ளத்தில் உக்கிரமான புயல்! நெருஞ்சி முள்ளாய் நினைவுகள்!!

'' ஏண்ட பேரனுக்கு... நெருப்பு மாதிரி காயுது! டொக்டர் கிட்ட போவ எண்டாலும் எனக்கிட்ட ஐஞ்சி சதமில்ல. யா அல்லாஹ் நான் என்னத்த செய்ய!''

கீறல் விழுந்த இசைத்தட்டின் ஒலியாய் கிழவியின் புலம்பல் செவிப்புலனில் நிறைகிறது. விடியும்வரை, உடலும் உள்ளமும் சுமையேறிக் கனத்தன. விடியல் கருக்கலின் கண் அசைப்பில் - காகங்கள் கரைந்தன. பசிக்களைப்பும் சோர்வும் அவஸ்தை தந்தன. ஒரு தீர்க்கமான முடிவுடன் மைமூன் ஆச்சியின் அமானிதத்தை ஒப்படைக்கும் உந்துதலில் வெளியே செல்லத் தயாரானேன்.

முதுகுப்புறத்தில் நிழலாய் ஒரு அசைவு!

''நில்லுங்க! இந்த கோப்பிய, குடிச்சிட்டுப் போங்க, ராவும், பசியில இருந்திட்டு...! வார்த்தைகளின் கனிவு குழைந்தது. நான்கு நாள்களுக்கு முன் தொலைந்துபோன ஈரம் பாத்துமாவின் முகத்தில் முழு நிலவாய் ஒளிர்ந்தது. சிறகொடிந்த பறவை, பாறை இடுக்குகளில் உறைந்து உயிரைப் பத்திரப்படுத்துவதைப் போல், கிழவியின் கடிதத்தையும் தீர்க்கமான நெஞ்சையும் கெட்டியாக இறுக்கிக் கொண்டேன். கலியாண வூட்டுக்குப் போவக் கிடைக்கல! என்ன செய்ய, பொறகு ஒரு நாளைக்குப் போவோம்! பாத்தும்மா பரிவோடு வெள்ளக்கொடி காட்டினாள். சுமைகளின் அழுத்தம் குறைந்து மனவலி லேசாகிறது.

கிழவியின் தரிசனம் வேண்டி சைக்கிள் விரைகிறது.

### அரும்பதங்கள்

| | |
|---|---|
| **இருக்கியா** | - இருக்கின்றதா |
| **வெலனயிலயிருந்து** | - காலையிலிருந்து |
| **மூண்ட** | - மூன்றை |
| **வேங்கின** | - வாங்கிய |
| **கல்பு** | - மனம் |
| **பஹீலன்** | - உலோபி |
| **முஹப்பத்** | - உறவு |

**பொருளுணர் திறன் செயற்பாடு**

1. கிராமம் பற்றிய விபரிப்பின் சிறப்பினை விளக்குக.

2. குடும்ப வாழ்வின் இன்ப துன்பங்களைக் கதாசிரியர் எவ்வாறு பதிவு செய்துள்ளார் என்பதைத் தெளிவுபடுத்துக.

3. பாரூக் நானாவின் ஏழ்மை நிலை சித்திரிக்கப்படுமாற்றை எடுத்துக்காட்டுக.

4. பாரூக் என்ற பாத்திரவார்ப்பு உமக்கு ஏற்படுத்தும் உணர்வுகளை விளக்குக.

5. சிறுகதையின் நடைச்சிறப்பினை விளக்குக.

**குழுமச் செயற்பாடு**

இச்சிறுகதையை அடிப்படையாகக் கொண்டு பிறைப்பாட்டு ஒன்றினை ஆக்கி அரங்கேற்றுவோம்.

**திறன் வளர் செயற்பாடு**

புகைப்படத்தில் உள்ள படைப்பாளிகள் பற்றி அறிமுகக் குறிப்புகள் எழுதுவோம்.



கோகிலம் சுப்பையா



இ. முருகையன்



எம்.எச்.எம். ஷம்ஸ்

# 3 காலம் தோறும் அகம்



*சங்க காலம்* (குறுந்தொகை)

**கபிலர்**

இவர் சங்ககாலத்துத்தமிழ்ப் புலவர்களில் குறிப்பிடத்தக்கவர். அதிக எண்ணிக்கையில் பாடல்களை இயற்றியவர். இவர் இயற்றிய பாடல்களுள் மிகச் சிறந்து விளங்குவது பத்துப்பாட்டிலுள்ள குறிஞ்சிப்பாட்டாகும்.

**திணை** - குறிஞ்சி

**துறை** - இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைமகன் சொல்லியது.

சுனைப்பூக் குற்றுத் தொடலை தைஇப்
புனக்கிளி கடியும் பூங்கட் பேதை
தானறிந் தனளோ இலளோ பானாள்
பள்ளி யானையின் உயிர்த்தென்
உள்ளம் பின்னுந் தன்னுழை யதுவே.

**பொருள்**

*நீர்ச்சுனையின் அருகே உள்ள பூக்களை பறித்து மாலையைத் தொடுத்து தினைத்தோட்டத்திற்கு வரும் கிளிகளை விரட்டுகின்ற அழகிய கண்களை உடைய இப்பேதைப் பெண்தான் அறிந்தாளோ? இல்லையோ? நடுச்சாமத்தில் பின் துயிலும் யானையைப் போல பெருமூச்சு விட்டேன். என் உள்ளம் மீண்டும் அவளிடமே சென்றுவிட்டது.*

## *சங்கமருவிய காலம்* *(கார்நாற்பது)*

### மதுரைக் கண்ணங்கூத்தனார்

கூத்தனார் என்பது இவரது இயற் பெயர். இவரது தந்தையார் பெயர் கண்ணன். இவர் வாழ்ந்த ஊர் மதுரை.

**திணை** - முல்லை

**துறை** - வினை முற்றி (செயல் முற்றுப் பெற்ற )மீளும் தலைமகன் பாகனுக்குச் சொல்லியது.

சிரல்வாய் வனப்பின வாகி நிரலொப்ப
ஈர்ந்தண் டளவந் தகைந்தன - சீர்த்தக்க
செல்வ மழைமதர்க்கட் சின்மொழிப் பேதையூர்
நல்விருந் தாக நமக்கு.

**ஈர் தண்** - குளிர்ச்சி மிக்க, **தளவம்** - செம்முல்லைப் பூக்கள், **சிரல்** - சிச்சிலிக்குருவியின், **வாய்** - வாய்போலும், **வனப்பின ஆகி** - அழகுடையனவாகி, **நிரல் ஒப்ப** - வரிசை பொருந்த, **தகைந்தன** - அரும்பின; (ஆதலால் இப்பொழுது) **சீர்த்தக்க** - சிறந்த, **செல்வம்** - செல்வத்தையுடைய, **மழை மதர்க் கண்** - மழைபோல் குளிர்ந்த மதர்த்த

*கண்களையும்,* **சில் மொழி** *- சிலவாகிய மொழியினையு முடைய,* **பேதை** *- காதலியது,* **ஊர்** *-ஊரானது,* **நமக்கு நல்விருந்து ஆக** *- நமக்கு நல்ல விருந்தயரும் இடமாக அமையட்டும்.*

**பொருள்**

*குளிர்ந்த செம்முல்லைப் பூக்கள் சிச்சிலிக்குருவியின் வாய் போலும் அழகுடையனவாகி வரிசையாக அரும்பலாயின. ஆதலால் இப்பொழுது சிறந்த செல்வத்தையும், மழை போன்ற குளிர்ந்த கண்களையும், சிலவாகிய மொழியினையும் உடைய காதலி ஊரானது நமக்கு நல்விருந்தயரும் இடமாகட்டும்.*

## *பல்லவர் காலம் (நாச்சியார் திருமொழி)*

**ஆண்டாள்**

தமிழ் இலக்கியத்திற்கு பெண் படைப்பாளிகள் வழங்கிய வளமான பங்களிப்பின் வரிசையில் ஆண்டாளும் முதன்மையானவராவார். இவரது பாடல்கள் தமிழ்க் கவிதைப் புலத்தில் புதிய பரிமாணத்தை ஏற்படுத்தியது. இவரது பாடல்கள் பெண்மையின் மன உணர்வுகளைத் தத்ரூபமாகச் சித்திரிப்பனவாகும்.

***திணை/ஒழுக்கம்*** *- கைக்கிளை*

***துறை*** *- மதுசூதனன் என்கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன்.*

மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாம நிரைதாழ்ந்த பந்தற் கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக் கண்டேண் தோழிநான்

**பொருள்**

*தோழி, மத்தளம் முதலிய மங்கள வாத்தியங்கள் முழங்கவும் வரிகளையுடைய சங்குகள் ஒலிக்கவும் மைத்துனன் முறை உடையவனும் நற்குணங்கள் நிறைந்தவனும் மதுசூதனன் என்னும் பெயர் பூண்டவனுமான கண்ணன், முத்து மாலைகள் நிரை நிரையாகத் தொங்கவிடப்பட்ட பந்தலின் கீழே வந்து என் கைகளைப் பற்ற நான் கனாக் கண்டேன்.*

## சோழர் காலம் (நளவெண்பா)

### புகழேந்தி

சோழர் காலத்தில் வாழ்ந்த அரசவைப் புலவர்களில் இவரும் ஒருவர். அறக்கருத்துக்களை போதிக்க உகந்த வடிவமான வெண்பாவை அகத்திணைக் கருத்துக்களைச் சொல்வதற்கு வெண்பாவைப் பயன்படுத்த முடியுமென நளவெண்பா மூலம் உணர்த்தியவர் புகழேந்திப் புலவராவார்.

உள்ளம்போய் நாண்போய் உரைபோய் வரிநெடுங்கண்
வெள்ளம்போய் வேகின்ற மென்றளிர்போல் - பிள்ளைமீன்
புள்ளரிக்கும் நாடன் திருமடந்தை பூவாளி
உள்ளரிக்கச் சோர்ந்தாள் உயிர்.

***பிள்ளை மீன்*** - *மீன் குஞ்சு,* ***புள்*** - *கொக்கு முதலிய பறவை,* ***அரிக்கும்*** - *தனிதனியாகக்கவரும்,* ***நாடன்*** - *நாட்டையுடையவன்,* ***திருமடந்தை*** - *அழகிய திருமகளைப் போன்ற தமயந்தி,* ***பூ வாளி*** - *(மன்மதனது) மலர் அம்பு,* ***உள் அரிக்க*** - *உள்ளத்தை வருத்த,* ***நாண்*** - *வெட்கம்,* ***உரை*** - *சொல்,* ***வரி*** - *சிவந்த கோடுகள்,* ***நெடுங்கண்*** - *நீண்டகண்கள்,* ***வெள்ளம் போய்*** - *கண்ணீர் மிகப் பெருகி,* ***மென் தளிர்*** - *இளந்தளிர்.*

**பொருள்**

*மீன் குஞ்சுகளைக் கொக்கு முதலிய பறவைகள் கவர்கின்ற விதர்ப்பநாட்டு வீமனுடைய திருமகள் போன்ற தமயந்தி, மன்மதனுடைய மலர்க்கணைகள் தன் உள்ளத்தில் பாய்ந்து வருத்துவதால், தனது உள்ளம் போய், வெட்கமும் போய், சோர்ந்து, செம்மையான கோடுகளையுடைய நீண்ட கண்களிலிருந்து நீர் ஊற்றாக ஓட, நெருப்பிற்கிடந்து வேகின்ற மெல்லிய தளிர் போன்று ஆவி தளர்ந்து சோர்வுற்றாள்.*



*தமயந்தி காதல் மீக்கூர, உள்ளம் வெட்கம் முதலிய யாவற்றையும் இழந்து, உயிரும் தளரப் பெற்றாள்.*

## நாயக்கர் காலம் (தனிப்பாடல்கள்)

### காளமேகப் புலவர்

இவர் நாயக்கர் காலத்தில் வாழ்ந்த புலவர்களில் முக்கியமானவர். வித்துவச்செருக்கு இவரது கவிதைகளில் இழையோடி இருக்கும். சிலேடை அணியை மிக இயல்பாகப் பயன்படுத்தியவர். வசைக்கவிகளையும் பாடியுள்ளார்.

பெண் ஒருத்தி ஏகாம்பரநாதரின் மீது காதல் கொண்டாளாம். அவரைக் கனவிலும் கண்டாளாம். தன் தோழிமாரிடம் தன் கனவுக் காட்சியைக் கூறி அவனைக் கண்டீரோ பெண்களே என்றும் கேட்கிறாளாம். இப்படி ஒரு சிறிய கனவுக் காட்சி யைக் கற்பனையிலே பின்னிக் கொண்டு அவள் ஏக்கத்தைப் புலப்படுத்துவது போல ஏகாம்பர நாதரைப் போற்றுகிறார்.

**நேற்றிராவந் தொருவன் நித்திரையிற் கைப்பிடித்தான்**
**வேற்றூரான் என்று விடாயென்றேன் - ஆற்றியே**
**கஞ்சிகுடி யென்றான் களித்தின்று போவென்றேன்**
**வஞ்சியரே சென்றான் மறைந்து.**

***வஞ்சியரே*** - வஞ்சிக்கொடி போன்ற பெண்களே! ***நேற்றிரா வந்து ஒருவன் நித்திரையில் கைப்பிடித்தான்*** - நேற்றிரவு ஒருவன் வந்து என் உறக்கத்திலே என் கையைப் பற்றினான்; ***வேற்றூரான் என்று விடாய் என்றேன்*** - அவனை அயலூர்க் காரன் என்று முதலிலே நினைத்துக் 'கையை விடு' என்றேன்; ***ஆற்றியே கஞ்சி குடி என்றான்*** - என் சினத்தைத் தணிவித்தவனாகத் தான் காஞ்சியிலே குடியிருப்பவன் என்று அவன் உரிமையுடனே சொன்னான்; ***களித்து இன்று போ என்றேன்*** - அவன் என் காதலனே என்று அறிந்ததும் இன்று என்னுடன் களித்திருந்துவிட்டுப் போவாயாக என்று வேண்டினேன்; ***மறைந்து சென்றான்*** - அந்த வேளையிலே அவன் மறைந்து போய்விட்டான்; அவனை நீங்கள் யாராவது பார்த்தீர்களோ என்பது குறிப்பு.

'அவன் கஞ்சியை ஆற்றிக்குடி என்று என்னை ஏளனம் செய்தான். நான் களி இருக்கிறது தின்றுவிட்டுப்போ' என்று சொன்னேன் எனத் தன்னை மறைத்துச் சொன்னாள் என்க.

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. குறுந்தொகைப் பாடலில் தலைவனின் காதல் வெளிப்படுத்துமாற்றினை விளக்குக.
2. கார்நாற்பது பாடலில் காதலியின் அழகு எவ்வாறு எடுத்துக் காட்டப்படுகின்றது.
3. ஆண்டாளின் பாடலில் கூறப்பட்டுள்ள திருமணச் சடங்குகளை எழுதுக.
4. தமயந்தியின் காதலைப் புகழேந்தியார் எவ்வாறு வெளிப்படுத்துகிறார்.
5. காளமேகப் புலவரின் பாடலில் வெளிப்படும் கவித்துவத்தை எடுத்துக்காட்டுக.

## குழுமச் செயற்பாடு

பழைய திரைப்பாடல்களில் அகப்பொருள் சார்ந்த பாடல்களைத் தேடிப் பாடுவோம்.

## திறன் வளர் செயற்பாடு

தமிழுக்குத் தொண்டாற்றிய புலவர்களைப் பற்றி உரைச்சித்திரம் ஒன்றினை ஆக்குவோம்.

# 4 வஞ்சியர் காண்டம்

**பிரளயன்**

எள்ளலும், பகிடியும், தத்துவக் கூர்மையும், கொண்ட பிரளயன்; பத்திரிகையாளர், திரை இணை இயக்குநர், நாடக ஆசிரியர் என பன்முகத்தன்மையான ஆளுமை கொண்டவராவார். 30 ஆண்டுகளாக நாடகத்துறையில் இயங்கிவரும் இவர் முழுக்க முழுக்க சமகால மக்களுக்காக பல விடயங்களை தனது நாடகப்பிரதி மூலம் மறுவாசிப்பு செய்கிறார்.



இந்நாடகம் பேராசிரியர் ராஜு இயக்கத்தில், பிரளயனின் பிரதியாக்கத்தில் உருவான நாடகம். பெரும்பாலும் பெண்கள் மையத்தில் நடிக்கும் நாடகம் இது. கண்ணகி, காவற் பெண்டு, நாகமணி முதலான பெண் பாத்திரங்கள் பற்றிய சித்திரிப்புகள் நமக்கு மனநிறைவளிப்பனவாகவே அமைந்து விடுகின்றன. இப் பெண்களுக்கு சூட்டப்பட்டிருக்கும் அடைமொழிகளை அப்புறப்படுத்தி விட்டு நோக்கும்போது இவ் வஞ்சியர்கள் வஞ்சிக்கப்பட்ட கொடுமை நன்கு புலனாகும்.இப் பிரதி சிலப்பதிகாரத்தை மறுவாசிப்பு செய்வதினூடாக அன்றைய பெண் சமூகத்தின் யதார்த்தத்தை மெய்ப்பிக்கின்றது.

*(திரு. பிரளயன் அவர்களின் அனுமதியுடன் இந் நாடகப்பிரதியில் சில தொடர்களை பொருத்தம் வேண்டி நீக்கியுள்ளோம்.)*

## காட்சி 1

குடமலை, கண்ணகி கோட்டம்.

**பாத்திரங்கள்** - குழுவினர், அடிமைகள், வணிகர்கள், பூசகர் மற்றும் மக்கள்.

*(பத்தினி! பத்தினி! என யந்திரங்களைப் போல் ஒலித்துக்கொண்டு குழுவினர் நடிப்பிடத்தில் பிரவேசிக்கின்றனர்.)*

பாடல் - **பத்தினி பத்தினியெனும் சொல்**
**பதியைக் காக்கும் சொல், சொல்!**
**கோனைக் காக்கும் சொல் - அவர்**
**கோலைக் காக்கும் சொல்**
**பத்தினியெனச் சொல்**
**படையணியினில் நில்!!**

*(என்று பாடியவாறு குழுவினர் சந்நத நிலையில் நடிப்பிடத்தைக் கடந்து செல்கின்றனர். கண்ணகிக் கோட்டத்தில் விழா விமரிசையாக நடக்கிறது. விழாவிற்குக் கூடியுள்ள பல்வகை மனிதரும் விழாக் கேளிக்கையில் ஈடுபட்டுள்ளனர். விழாவையொட்டி விரிக்கப்பட்டிருந்த சந்தையில் அடிமை வணிகம் உட்பட எல்லாம் பரபரப்பாய் நடந்துகொண்டிருக்கிறது.) பிட்டு வணிகர், கள் விற்போர், கடைகளில் கூட்டம் அலைமோதுகிறது. மக்கள் ஆங்காங்கே கூட்டம் கூட்டமாய்க் கண்ணகி புகழ் பாடுகின்றனர். நடுகல்லில் தீபமிடத் தீப்பந்தம் எடுத்துச் செல்லப்படுகிறது. தீப்பந்தத்தைப் பார்த்ததும் பலருக்கு மருள் வருகிறது. சன்னதமடைகின்றனர். பாடல் உச்சகதியில் ஒலிக்கிறது. கூட்டம் நடிப்பிடத்தை விட்டு வெளியேறுகிறது. பாடல் மெல்லக் கரைகிறது. குழுவினர் உள்ளே வருகின்றனர்.*

**குழு 1** : குணகடல் செல்வியும் குடமலை ஏகினாள்.

**குழு 2** : குடவாயில் கோட்டத்துத் தெய்வமாய் ஆயினாள்.

**குழு 3** : முடியுடைச் சேரனும் குடிகளைக் கூட்டினான்.

**குழு 4** : நானிலம் அறியவே நடுகல்லும் நாட்டினான்.

**குழு 5** : ஒருமுலை பிய்த்தெறிந்து ஊனமாய் நின்று திருநகர் தீயிட்ட தேவியைப் போற்றுவோம்.

**குழு 6** : அரசதிகாரத்தின் அநீதி சிதறச் சிலம்பறைந்து முழங்கிய கோதையைப் போற்றுவோம்.

**குழு 7 :** *சிலம்பின் வென்ற சேயிழை போற்றுவோம்.*
**அனைவரும் :** *சிலம்பின் வென்ற சேயிழை போற்றுவோம்.*

*(குழுவினர் நடிப்பிடத்தை விட்டு வெளியேறுகின்றனர்.)*

**மேடையில் இருள் பரவுகிறது.**

*(கையில் விளக்குகளேந்தியபடி பெண்கள் குழுவாகத் தாழ்தளத்தினை நோக்கி வருகின்றனர்.)*

**பெண் 1 :** *யாரைப் போற்றுகிறீர்?*

**பெண் 2 :** *யாரைத் தெய்வமென்கிறீர்?*

**பெண் 3 :** *கண்ணகி தெய்வமா?*

**பெண் 4 :** *தெய்வமென்றால் கொடுக்கும்.*

**பெண் 5 :** *கொடுத்தவளா கண்ணகி?*

**பெண் 6 :** *அனைத்தையும் இழந்தவள் தானே கண்ணகி?*

**பெண் 7 :** *யாருக்கு வேண்டுமிவள் தெய்வச் சித்திரம்?*

**பெண் 8 :** *அடிமைத்தனத்திற்கு கொடிதூக்கும் சித்திரம்.*

*(மேடையில் ஒளி மாற்றம் பெறுகிறது)*
*(கண்ணகி கோட்டத்திற்கு செல்லும் மக்கள் திரள், பாடியாடியபடி நடிப்பிடத்துள் நுழைந்து கடந்து செல்கிறது.)*

பாடல் - **தானாரோ தன்னாரோ - தன**
**தானாரே தன்னாரோ**
**சொல்லோமே சொல்லோமே**
**எவரின் பெயரும் சொல்லோமே!!**
**தேவியவள் பெயரல்லாது**
**எவரின் பெயரும் சொல்லோமே!!**
**நில்லோமே நில்லோமே**
**நடுவழியில் நில்லோமே**
**நெடுமலையின் முடிதொடாது**
**நடுவழியில் நில்லோமே!!**

**காட்சி மாறுகிறது.**

## காட்சி 2

### குடமலைச் சாரல்

**பாத்திரங்கள்** - *கண்ணகியின் செவிலித்தாய் காவற்பெண்டு, கண்ணகியின் தோழி தேவந்தி, மாதரியின் மகள் ஐயை, கண்ணகியின் அடித்தோழி நாகமணி மற்றும் கண்ணகிக் கோட்டத்திற்குச் செல்லும் மக்கள் திரள்.*

*(கண்ணகியின் செவிலித்தாய் காவற்பெண்டு, கண்ணகியின் தோழி தேவந்தி, மாதரியின் மகள் ஐயை, கண்ணகியின் அடித்தோழி நாகமணி ஆகிய நால்வரும் கண்ணகி கோட்டத்திலிருந்து திரும்பி வந்துகொண்டிருக்கின்றனர். மலைச்சரிவில் ஐயை துள்ளிக்குதித்து இறங்கி வருகிறாள்.)*

**காவற்பெண்டு** : *அடியே ஐயை! சற்று மெதுவாகப் போ! உன்னைப் போல் என்னால் ஓடி வரமுடியாது.*

**ஐயை** : *மன்னிக்க வேண்டும் அம்மையே! நீங்களிருவரும் உடன் வருகிறீர்கள் என்பதே எனக்கு மறந்துபோகிறது.*

**தேவந்தி** : *ஐயை! சற்று நில்லடி! ஏதோ அருவி வழிந்தோடுகிற சப்தம் காற்றில் மிதந்து வருகிறது பார்! உனக்குக் கேட்கிறதா?*

**ஐயை** : *ஆமாம் அக்கா! எனக்கும் அப்படித்தான் கேட்கிறது. அதோ அந்தத் திசையில் அந்த அருவி இருக்கலாம். அங்கே போவோமா?*

**தேவந்தி** : *பாதை கரடு முரடாக இருக்கிறதே! அம்மை எப்படி நம்முடன் வரமுடியும்?*

**காவற்பெண்டு** : *பெண்களே! எனக்கொன்றும் அப்படி வயதாகிவிடவில்லை. வாருங்கள் போகலாம்.*

*(நால்வரும் பாதையை விட்டு விலகி, அருவி விழும் திசை நோக்கிக் கரடுமுரடான பாதையில் நடக்கின்றனர். அருவி விழும் ஓசையை மீறி, மக்கள் ஆரவாரத்தோடு பாடிக்கொண்டு வரும் ஒலி கேட்கிறது.)*

**பாடல்** - **தானாரோ தன்னாரோ - தன**
**தானாரோ தன்னாரோ**
**சொல்லோமே சொல்லோமே**
**எவரின் பெயரும் சொல்லோமே!!**
**தேவியவள் பெயரல்லாது**
**எவரின் பெயரும் சொல்லோமே!**
**நில்லோமே நில்லோமே**

நடுவழியில் நில்லோமே
நெடுமலையின் முடிதொடாது
நடுவழியில் நில்லோமே!!

**ஐயை** : அக்கா, மக்கள் பரவசத்தோடு பாடிக்கொண்டு கண்ணகிக் கோட்டத்திற்குப் போகிறார்கள் பாருங்கள்!

(மக்கள் கூட்டம் பாடியவாறு கண்ணகி கோட்டத்திற்குச் செல்வதை பெண்களனைவரும் கண்கொட்டாது பார்க்கின்றனர். அவர்களையே பார்த்துக் கொண்டிருந்த காவற்பெண்டு, தலையைப் பிடித்தபடி கீழே சரிகிறாள். ஐயையும், தேவந்தியும் அவளைத் தாங்கிப் பிடிக்கின்றனர்.)

இருவரும் : அம்மையே என்ன ஆயிற்று?

**காவற்பெண்டு** : ஒன்றுமில்லை! வேகமாக மலைச்சரிவில் நடந்து வந்தோமல்லவா? என் தலை கிறுகிறுக்கிறது.

**தேவந்தி** : சற்று இளைப்பாறிவிட்டு பிறகு செல்லலாமா?

**காவற்பெண்டு** : வேண்டாம்! என்னை அந்த அருவிக்கு அழைத்துச் செல்லுங்கள்! சிறிது நீரருந்தினால் எல்லாம் சரியாகிவிடும்.

காவற்பெண்டைத் தாங்கிப் பிடித்து அழைத்தபடி, அருவியருகில் செல்கின்றனர். காவற்பெண்டு வழிந்தோடும் நீரை அள்ளிப் பருகுகிறாள். முகம் கழுவுகிறாள். நால்வரும் நீர் அருந்துகின்றனர்.

**ஐயை** : அம்மையே, நான் ஒன்று கேட்கிறேன். தவறாக நினைக்கக் கூடாது.

**காவற்பெண்டு** : கேளேன்.

**ஐயை** : கண்ணகி கோட்டத்தில் எல்லோரும் பரவச நிலையடைந்து, கண்ணகியைத் தொழுதார்கள். ஆனால் நீங்கள், அப்படிச் செய்யவில்லை. உங்கள் இருவர் முகங்களும் வெளிறிப் போயிருந்தன. ஏன் அப்படி?

(மூவரும் மௌனமாய் இருக்கின்றனர்.)

**ஐயை** : நான் தவறாகக் கேட்டுவிட்டேனா?

**காவற்பெண்டு** : இல்லையடி பெண்ணே! என் மடியில் தவழ்ந்த நாளிலிருந்து அவளை நான் அறிவேன். இச்சிறிய வயதில் எத்தனை கொடுமைகளை

அனுபவித்துவிட்டாள். தெய்வமெனத் தொழுதால், அவள் அனுபவித்த கொடுமைகளை மூடி மறைத்தவளாகிறேன்.

**தேவந்தி** : ஆம் அன்னையே! அவளைத் தெய்வமெனத் தொழுதால் கூப்பிய கரங்கள் திரையாகி விடுகின்றன. நான் கண்ட கண்ணகி மறைந்து விடுகிறாள்.

**ஐயை** : கூப்பிய கரங்கள் திரையாகி விடுகிறதா? என்ன சொல்கிறீர்?

**தேவந்தி** : கண்ணகியின் தெய்வக்கோலம் கோவலனுக்கே உயர்வளிக்கிறது. அதில் நிஜக்கண்ணகி மறைந்து போகிறாள்.

**ஐயை** : கொங்கையாற் கூடற்பதி சிதைத்து
கோவேந்தைச் செஞ்சிலம்பால் வென்றாளைப்
பாடுதும் வம்மெல்லாம் என்று ஆடல் மகளிர் பாடவும் ஆடவும்
கொங்கச் செல்வி, குடமலையாட்டி
தென்றமிழ்ப்பாவை, செய்தவக்கொழுந்து
ஒரு மாமணியாய் உலகில் தோன்றிய திருமாமணி என
சே ர மன்னன் எக்காளம் முழங்கவும்
தலைமைப் பூசகன் சிலம்பை உலுக்கி வாழி வாழியென
வாழ்த்தொலி செய்யவும் எனக்கு உடல் சிலிர்த்தது. மயிர்க்கால்கள் நிமிர்ந்தன. பலருக்கும் மருள் வந்தது. ஆனால் நீங்களிருவரும் மரம்போல் நின்றிருந்தீர். உங்கள் கண்களிலிருந்து நீர் உருண்டோடியதை நான் பார்த்தேன்.

**காவற்பெண்டு** : கண்ணகி என் வயிற்றில் உதிக்காவிட்டாலும், அவள் என் மகள். என் மடியில் தவழ்ந்தவள். அவளை எப்படியடி நான் தெய்வமாய் வணங்கமுடியும்? தெய்வக் கோலம் என் கண்ண கியை, என் கண்களிலிருந்து பறித்துக் கொள்கிறது. அந்தக் கோலத் தின் பின்னாலே, மமதை வழிந்தோட, கோவலர்கள் சிரித்துக் கொண்டிருப்பதை நான் பார்க்கின்றேன். முடியுடை வேந்தர்கள் அவர்களுக்கு வெண்சாமரம் வீசுவதைப் பாரக்கிறேன். சிலம்பின் வென்ற சேயிழை என்றார்களே. சிலம்பு தெரியுமா? அந்தச் சேயிழையைத்தான் தெரியுமா? எனக்குத் தெரியுமடி.... எனக்குத் தெரியும். அவர்களுக்கு சிலம்பு.... அந்தப் பாழாய்ப்போன சிலம்பை என் கரங்களால் தானே அவளுக்கு அணிவித்தேன். கண்ணகிக்குப் பன்னிரண்டு வயதிருக்கும். திருமணத்திற்கும் நாள் குறித்தாகிவிட்டது.
*(மக்கள் திரள், கண்ணகி புகழ் பாடியபடி நடப்பிடத்தைக் கடக்கிறது.)*

பாடல் - மண்ணையாளும் கண்ணையாள் - அவள்
விண்ணிலன்று ஏகினாள்
ஊர்தி வானில் பறந்திட
முகிலும் கண்டு களித்திட
அமரர் கூடி வழிபட
ஆளுமெங்கள் கண்ணையாள்
விண்ணும் மண்ணும் பொலிவுற
வாழுமெங்கள் கண்ணையாள்.

**காட்சி மாறுகிறது**

## காட்சி 3

**புகார், மாநாய்க்கன் இல்லம்**

கண்ணகி, காவற்பெண்டு, கண்ணகியின் தாய் நக்கண்ணை, மாநாய்கன் மற்றும் பணிப்பெண்கள். காவற்பெண்டு மற்றும் பணிப்பெண்கள் புடைசூழக் கண்ணகியை அலங்கரிக்கின்றனர். ஒருத்தி, கூந்தலைச் சீவி, மலரைச் சூடுகிறாள். மற்றவள் அவள் புருவத்தை எழுதுகிறாள். ஒருத்தி, வாசனைப் பொடிகளை அவள் கழுத்தில் பூசுகிறாள்.

(கண்ணகியின் தந்தையும் தாயும் வருகின்றனர். கண்ணகி எழுந்து நிற்கிறாள். அவளது பெற்றோர்களை வணங்குகிறாள்.)

**நக்கண்ணை** : மகளே! என் கண்ணே பட்டுவிடும் போலிருக்கிறது. அடியே பெண்ணே! இவளுக்கு நெற்றித் திலகத்தை இன்னும் பெரிதாக வைத்திருக்கலாமே?

**காவற்பெண்டு** : இல்லையம்மணி.... கண்ணகிக்குப் பெரிதாகத் திலகமிடுவது பிடிப்பதில்லை. சிறிதாகத்தான் இடுவாள்.

**நக்கண்ணை** : அவளுக்கு எது பிடிக்கும் எது பிடிக்காதென்று உனக்குத்தான் தெரியும். நான் எதைக் கண்டேன்?

**மாநாய்கன்** : மகளே உனக்குப் பிடிக்குமோ பிடிக்காதோ எனக்குத் தெரியாது. எனக்குப் பிடித்ததை வாங்கி வந்துள்ளேன். ஏற்றுக்கொள்வாயா?

**கண்ணகி** : நிச்சயம் தந்தையே!

**மாநாய்கன்** : அய்யோடா. கீழே சிதறிய முத்துக்களைப் பொறுக்குங்கள் என்மகள் வாய்திறந்து பேசிவிட்டாள். (எல்லோரும் சிரிக்கின்றனர்.) மாநாய்க்கன் தன் கையில் உள்ள, பெட்டியைத் திறக்கின்றான். அதில் பொற்சிலம்புகள் இரண்டு மின்னுகின்றன. அவற்றை எடுத்துக் காவற்பெண்டிடம் தருகிறான்.

**மாநாய்கன்** : அம்மணி, இச்சிலம்புகளைக் கண்ணகிக்கு அணிவியுங்கள். பொன் வினைஞர்கள் பலர், பல திங்கள் கூடிச் செய்த பொற்சிலம்புகள் இவை. கவனத்தோடு பெறப்பட்ட மாணிக்கப் பரல்களால் ஆனவை. மூவேந்தர் தமது அரசியர்களிடம் கூட இத்தகைய சிலம்புகள் இருக்க முடியாது. மாநாய்க்கன் தன் மகளுக்கு அளிக்கும் அன்புப் பரிசுகள் இவை.

*(பெண்கள் குலவையிடுகின்றனர். காவற்பெண்டு கண்ணகியின் கால்களில் சிலம்புகளை அணிவிக்கிறாள்.)*

பாடல் **கந்தமலர் சூடிமகிழ் கண்ணையவள் பேதை**
**இந்துமுக சுந்தரியாள் எங்கள் மகள் கோதை வாழி!!**
**செஞ்சிலம்பு செஞ்சிலம்பு செஞ்சிலம்பு வாழி!!**
**செஞ்சிலம்பு தாங்குமவள் சீர் பாதம் வாழி!!**

*(பாடியபடி கண்ணகியைப் பணிப்பெண்கள் உள்ளே அழைத்துச் செல்கின்றனர். காவற்பெண்டு தாழ்மேடைக்கு வருகிறாள்.)*

*ஒளி மாறுகிறது.*

**காவற்பெண்டு :** நாளும் வந்தது. கண்ணகி மணவாழ்வு புகுந்தாள். கண்ணகியை மணம் முடித்த மாசாத்துவானின் மகன் கோவலன், ஓரிரு ஆண்டுகளில் அவளை விட்டு ஓசையின்றிப் பிரிந்து போனான்.

தனித்து விடப்பட்ட கண்ணகியின் துயர் முகத்தைக் காணத் துணிவு கொண்டோர் எவரும் அங்கில்லை.

எப்படிச் சொல்ல அணிவித்த நானே, சிலம்பை அவள் காலிலிருந்து கழற்றினேனே. அக்கணத்தை நினைத்து நான் வருந்தாத நாளில்லை. சிலம்பணிந்த அவள் கால்களை மீண்டும் காணவேயில்லை.

*(சமணத்துறவிகள் பஞ்ச பரமேட்டியரைத் துதிக்கும் ஒலி கேட்கிறது.)*

*(இருவர் ஒரு நீண்ட திரையைப் பிடித்தவாறு நடிப்பிடத்துள் நுழைகின்றனர். காவற்பெண்டு வெளியேறுகிறாள்.)*

**காட்சி மாறுகிறது.**

## காட்சி 4

**புகார், கண்ணகியின் இல்லம்**

*கண்ணகி, காவற்பெண்டு, சமணத்துறவிகள் மற்றும் குழுவினர்.*

*திசையாடை மற்றும் வெள்ளுடை தரித்த சமணத்துறவிகள் வருகின்றனர். பிடிக்கப்பட்ட திரைக்குப் பின் இடை மறைத்தவாறு மேல்மேடையில் நிற்கின்றனர். திசையாடை தரித்து நிற்பவர் போன்று தோற்றமயக்கம் உருவாக்கப்படுகிறது.*

**சமணத் துறவிகள்:** *அ சி ஆ உ சா*
*அ சி ஆ உ சா*
*அருகன் சித்தன் ஆசார்யன்*
*உபாத்யாயன் சாது*
*பஞ்ச மூர்த்திகள் பாதம் பணி.*
*அ சி ஆ உ சா*
*பிச்சை.... பிச்சை*
*இல்லுள்ளீரே.... பிச்சை*
*பிச்சை... பிச்சை.. பிச்சைதாயே பிச்சை.*

*அறவாழி அந்தணன் அருள் உம்மைக் காக்கட்டும்! பிச்சை பிச்சை. பிச்சைதாயே! பிச்சை!! (தாழ்மேடையில் அமர்ந்து, தன் காற்சிலம்பைக் கழற்றிக் கொண்டிருந்த கண்ணகி பிச்சைக் குரல் கேட்டு எழுந்து உள்ளே ஓடுகிறாள். பிச்சைக்குரல் கேட்டு அங்குவந்த காவற்பெண்டு, கண்ணகி பதட்டத்துடன் ஓடுவதைப் பார்க்கிறாள். பின் துறவிகளிடம் செல்கிறாள்.)*

**காவற்பெண்டு :** *அறவோரை வணங்குகிறோம். இல்லத்தலைவன் இல்லில் இல்லை. உங்களுக்கு விருந்தோம்பும் பாக்கியத்தை இழந்து நிற்கும் எங்களுக்கு தயைகூர்ந்து அருள்புரிய வேண்டும்.*

**துறவிகள் :** *அறிந்தோம்! அருகன் வழி தங்கள் அறமாகட்டும். வருகிறோம்.*

*(துறவிகள் நடிப்பிடத்தை விட்டு வெளியேறுகின்றனர். அவர்கள் சென்றதும் காவற்பெண்டு, உள்ளே ஓடி ஒளிந்த கண்ணகியைத் தேடிச்செல்கிறாள்.)*

**காவற்பெண்டு :** *அறவோர்க்கு அளித்தலை, அந்தணரைப் போற்றுதலை துறவா ஒழுக்கமாய் ஏற்றவள்தான் நீ. அறவோரைக் கண்டால் இனி நீ ஓடி ஒளியத் தேவையில்லை. கோவலன் நாளை நிச்சயம் வரத்தான் போகிறான். கவலையின்றி நீ கடமையாற்றத்தான் போகிறாய்.*

மறவாதே மகளே.! இந்நிலை மாறும்.

**கண்ணகி** : அன்னையே அவர் எப்போது வருவார் எனச் சொன்னீர்கள்.

**காவற்பெண்டு** : நிச்சயம் நாளையே வருவான்.

**கண்ணகி** : நான் குழந்தையாக இருந்தபோது, கடல் கடந்து வணிகத்துக்குச் சென்ற, என் தந்தையின் வருகைக்காகக் காத்திருப்பேன். நீங்கள் அப்போதும் இதே சொற்களைத் தான் சொல்வீர்கள். தந்தை புகார் திரும்பி விட்டார் என்று ஏவலர்கள் சேதி அறிவிப்பார்கள். ஆனால் புகார் திரும்பிய என் தந்தை இல்லம் திரும்பப் பல நாட்களாகும். குளம்பொலிகள் கேட்கிறபோதெல்லாம் வந்துவிட்டார் தந்தை யென வாயிலுக்கு ஓடுவேன். ஏமாற்றம் சொட்டச் சொட்ட திரும்பிவரும் என்னிடம் அப்போதும் இதே சொற்களைத்தான் சொல்வீர்கள் அன்னையே. நான் ஒன்றும் குழந்தையில்லை. ஏமாற்றுப் பேச்சுக்களை இனி ஒருபோதும் என்னிடம் பேசாதீர்கள்.

**காவற்பெண்டு** : உன்னை ஏமாற்றி எனக்கு என்ன ஆகப்போகிறது. மகளே, வணிக மகள் நீ. வணிகம் செய்ய வீட்டைப் பிரிவது வணிகரின் இயல்பு. இதைப் புரிந்துகொள் மகளே.

**கண்ணகி** : என் கணவர் வணிகம் செய்ய பெரும்நிலம் கடக்கவும் இல்லை, கலம் ஏறி கடலோடவும் இல்லை. இதே புகார் நகரில் கணிகை வீதியில் தான் இருந்துகொண்டிருக்கிறார். நான் புரிந்துக் கொண்டிருக்கிறேன் அன்னையே.

**காவற்பெண்டு** : பிறகென்ன புகாரிலிருக்கும் உன் கணவன் நாளை வராமலா போய் விடுவான்.

**கண்ணகி** : ஆயிரத்தெட்டு கழஞ்சு பொன் கொடுத்து ஆடல் மடந்தையை அடைந்தாரென்ற சேதி உங்களுக்கு அன்றே தெரியும். ஆனால் என்னிடத்தில் இதே பொய்யுரையைத்தான் சொன்னீர்கள். இந்திரப் பெருநாளில், முழு நிலவின் பால் குடித்த கடற்கரையின் பூ மணலில் காமனும் ரதியும் போல் ஆடிக் களித்தனரென்று பார்த்தவரெல்லாம் சொன்னார்கள். ஆனால் நீங்கள் என்னிடத்தில் என்ன சொன்னீர்? வேண்டாம் இனி மேலும் பொய்யுரைக்காதீர்.

**காவற்பெண்டு** : மகளே, என்னை மன்னித்துவிடு. எனக்குக் குற்ற உணர்வுதான் மிஞ்சுகிறது. உன்னிடத்தில் எதைச்சொல்ல வேண்டும். எதைச் சொல்லக்கூடாது என்று தேர்வு செய்கிற உரிமை எங்களுக்கில்லை. நாங்கள் உனது தந்தையின் உரிமை மக்கள். இப்போது கோவலனின் உரிமை மக்கள்.

**கண்ணகி** : உரிமை மக்கள். உரிமைகளை முற்றிலும் இழந்த உங்களுக்கு பெயர், 'உரிமை மக்கள்' அடிமைகள் என்று சொல்லுங்கள்.

**காவற்பெண்டு** : ஆம் அடிமைகள்தாம். முன்பு உன் தந்தைக்கு அடிமை. இப்போது உன் கணவன் கோவலனுக்கு அடிமை. இனி உன் வயிற்றில் உதிக்கப்போகும் உன் பிள்ளைகளுக்கு அடிமை. இதுதான் நிதர்ச னம் மகளே. எங்களை மன்னித்துவிடு.

*(அப்போதுதான் கண்ணகியின் கால்களைக் கவனிக்கிறாள்.)*

மகே , ஊன்ன இது, எங்கே உனது இடது கால்சிலம்பு. ஒரு காலில் மட்டும் சிலம்பணிவது உசிதமல்ல மகளே.

**கண்ணகி** : காலை உறுத்துகிறதென கழற்றிவிட்டேன். வலது கால் சிலம்பைக் கழற்றும் போதுதான் அறவோரின் பிச்சைக்குரல் கேட்டு உள்ளே ஓடிவந்து விட்டேன்.

**காவற்பெண்டு** : சிலம்பணியாக் கால்களை உம் பெற்றோர் கண்டால் அவர் மனம் என்ன பாடுபடும் அய்யோ. இது தகாது. யாரடி அங்கே பணிப்பெண்களே, பிங்களை, நாகமணி, கண்ணகியின் சிலம்பை எடுத்து வாருங்கள்.

**கண்ணகி** : வேண்டாம் எடுத்து வந்தாலும் நான் அணியப் போவதில்லை.

**காவற்பெண்டு** : பிடிவாதம் கூடாது. சொல்வதைக் கேள்.

**கண்ணகி** : அன்னையே, என்னை வற்புறுத்தாதீர்.

*(கைகளைக் குவித்துக் காவற்பெண்டை கெஞ்சுகிறாள். பதற்றமுற்ற காவற்பெண்டு, கூப்பிய அவள் கைகளைப் பிரித்துவிடுகிறாள்.)*

**காவற்பெண்டு** : என்ன செய்கையம்மா இது?

**கண்ணகி** : அன்னையே உம்மிடம் ஒன்று கேட்கத் தோன்றுகிறது. கேட்கட் டுமா?

**காவற்பெண்டு** : என்ன கேட்கப்போகிறாய்.

**கண்ணகி** : பகலுக்கு எதிர்ப்பதம் எது?

**காவற்பெண்டு** : இரவு

**கண்ணகி** : *நிலவுக்கு*

**காவற்பெண்டு** : *கதிர்*

**கண்ணகி** : *நீருக்கு*

**காவற்பெண்டு** : *நெருப்பு*

**கண்ணகி** : *குளிருக்கு*

**காவற்பெண்டு** : *என்னடி இது குழந்தை மாதிரி*

**கண்ணகி** : *ம். சொல்லுங்கள்.*

**காவற்பெண்டு** : *வெம்மை*

**கண்ணகி** : *இன்பத்திற்கு*

**காவற்பெண்டு** : *(தடுமாறுகிறாள்) ...த்து துன்பம்*

**கண்ணகி** : *காதலுக்கு*

**காவற்பெண்டு** : *காதலுக்கா. என்ன கேட்கிறாய் நீ*

**கண்ணகி** : *காதலுக்கு எதிர்ப்பதம் என்ன?*

**காவற்பெண்டு** : *காதலுக்கு*

**கண்ணகி** : *தெரியவில்லையா. நான் சொல்கிறேன். காதலுக்கு எதிர்ப்பதம் 'பிரிவு'*

**காவற்பெண்டு** : *இரவு - பகல், காலை - மாலை, வெப்பம் - குளிர், இவையெல்லாம் இயற்கையின் சுழற்சி. அதுபோல காதலும் பிரிவும் இயற்கையின் சுழற்சி என்கிறாயா. மகளே. நீ என்ன தத்துவம் பேசுகிறாயா.*

**கண்ணகி** : *தத்துவமும் பேசவில்லை. வித்தகமும் பேசவில்லை. காதலையும் பிரிவையும் அறிவீரா நீங்கள்?*

**காவற்பெண்டு** : *மகளே நீ என்ன கேட்க விரும்புகிறாய். எனக்கு ஒன்றும் புரியவில்லை.*

**கண்ணகி** : எப்படிப்புரியும்? உரிமை மக்கள் நீங்கள், உரிமைகளை இழந்த உங்களுக்கு உணர்வுகளும் உளுத்துப்போய் விட்டன. உங்களுக்கு எப்படிப் புரியும். காதலும் - பிரிவும்?

**காவற்பெண்டு** : ஏன் இப்படிப் பேசுகிறாய். யாரிடம் என்ன பேசுகிறாய் மகளே. எனக்கா காதலைத் தெரியாது. பாறைகளுக்குள் ஒளிந்திருக்கும் சுனை நீரின் ஊற்றைப்போல, அக்காதல் நினைவுகள் இன்றும் என் ஆழ்மனத்துள் சுரந்து கொண்டுதான் இருக்கின்றன.

உனக்குத் தெரியுமா மகளே, என் மூதாதையர் நாக நாட்டைச் சேர்ந்தவர்கள். போரில் வெல்லப்பட்ட அவர்கள், உழுநிலத்தின் பொது நீக்கி, வேள்வி நடத்தும் மறையோர்களுக்குத் தானமாய் அளிக்கப்பட்ட வேள்விக்குடியெனும் பாண்டிய நாட்டு கிராமத்திற்கு அடிமைகளாக விற்கப்பட்டனர். எம் பாட்டன் காலத்தில் ஒரு மன்னன், வேள்விக்குடி மறையோர்களுக்குத் தானமாக அளிக்கப்பட்ட நிலஉரிமையை ரத்துச் செய்து மீண்டும் உழுநிலத்தைப் பொதுவாக்கிக் கொத்தடிமைகளாய் இருந்த அவர்களை விடுவித்தான்.

விடுவிக்கப்பட்ட ஒரு சில குடும்பத்தினர் மதுரைக்குப் புலம் பெயர்ந்தார்கள். வயலுக்கு நீர் அளந்து விடுவதில் வல்லவனும் நீர்க்காரனுமான என் பாட்டன், பெருநிலம் கடக்கும் வணிக ஊர்திகளின் கோல்காரனானான். என் மூதாய் சமையற்காரியானாள்.

மழைக்காலம் முழுவதும் மதுரையிலிருப்போம். மற்றப் பருவத்தில் வணிகப் பொதிகளோடு பெருநிலப் பயணந்தான்.

அப்படி ஓர் பயணவழியில் தான் நான் பிறந்தேனாம்.

என் தாய்வழிப்பாட்டியின் கைப்பக்குவம் என் சமையலில் இருப்பதாக எல்லோரும் சொன்னார்கள். நான் சமைக்கும், உலர் மீன் பாகருக்கும் ஊன்துவை அடிசிலுக்கும் மயங்கிய ஒரு கோல்காரன் என் பின்னே சுற்றிச் சுற்றி வந்தான். அவனுக்கு என்னை அளித்தேன். நாமிருவரும் ஈருடல் ஓருயிராய் வாழ்ந்தோம். நிலவற்ற ஓர் இரவில் திடீரெனப் பெருங்கூச்சல். கள்வர்கள் கூட்டமொன்று எங்களைத் தாக்கத் தொடங்கியது. என் காதல் கொழுநன் வாள் வீசுவதில் வல்லான், சுதாகரித்துக் கொண்ட அவன் கள்வர்களை எதிர்த்துத் தாக்கினான்.

கள்வர்கள் எண்ணிக்கையில் அதிகமானவராக இருந்தனர். மெல்ல

மெல்ல எங்கள் தற்காப்பு குலைந்தது. பலர் கொல்லப்பட்டனர். வணிகப்பொதிகள் சூறையாடப்பட்டன. பெண்கள் சிறை பிடிக்கப்பட்டனர். வேல்கம்பு பாய்ந்த என் காதல் கொழுநன், நெஞ்சில் குருதி கொப்பளிக்க இதோ என் மடியில்தான் தன் இன்னுயிரை நீத்தான். என் மடியில் ஓடிய அவன் குருதியின் வெப்பத்தை நான் இன்றும் உணர்கிறேன்.

சிறைப்பிடிக்கப்பட்ட நாங்கள் புகார் நகரில் அடிமைகளாய் விற்கப்பட்டோம். என்னை விலைக்கு வாங்கிய உமது பாட்டன், உன் தந்தை மாநாய்கனின் திருமணப் பரிசாக அளித்தான். அன்றிலிருந்து நான் உங்களது உரிமை மக்கள்.

**கண்ணகி** : அன்னையே, உங்கள் மகள் நாகமணி...?

**காவற்பெண்டு** : அவள் யாருக்குப் பிறந்தவள் என்று கேட்கிறாயா?

**கண்ணகி** : அய்யய்யோ... அப்படியெல்லாமில்லை.

**காவற்பெண்டு** : பதியிலாப் பெண்களிடம் கேட்கக் கூடாத கேள்வியிது. மகளே. உன் தாய், உன்னைக் கருவுற்றாள். அதை அறிந்ததும் நானும் கருவுற்றேன். ஏன் தெரியுமா. நான் உனக்குத் தாய்ப்பால் கொடுக்க வேண்டுமென்பதற்காக. இனி நீ கருவுற்றால் உன் அடித்தோழி, என் மகள் நாகமணியும் கருவுற வேண்டியிருக்கும். ஆம், உன் பிள்ளைக்குப் பால்கொடுக்க வேண்டுமல்லவா. நாங்கள் எங்களுக்காக வாழ முடியாதவர்கள். உங்களுக்காக வாழ்கிற அடிமைகள். அதற்காகக் காதலையும் பிரிவையும் அறியாதவர்கள் என்று நினைத்து விடாதே. ஒன்று தெரியுமா, மகளே! உன் தந்தைக்கும் அவரது விருந்தினருக்கும் கூட விருந்தாய் இருந்திருக்கின்றேன். எனது காதல் கொழுநன் மரித்து விட்டான். எனது பிரிவு மீளாப்பிரிவு. உன் பிரிவு அப்படியல்ல மகளே. உன் கணவன் இப்புகார் நகரில்தான் இருக்கிறான். மீண்டும் வருவான்.

**கண்ணகி** : மன்னித்துக்கொள்ளுங்கள்! அன்னையே குற்ற உணர்வு என்னைச் சுட்டெரிக்கிறது. உங்களிடம் அப்படிப் பேசியிருக்கக் கூடாது.

**காவற்பெண்டு** : உன் கணவன் ஆடல் மடந்தையை நாடிச் சென்றதை உன்னிடம் மறைத்துவிட்ட என் குற்றத்திற்கு அது எம்மாத்திரம் மகளே. எனக்கும் தான் அக்குற்ற உணர்வு சுட்டெரிக்கிறது.

**கண்ணகி** : ஒரு பெண், மற்றொரு பெண்ணை எளிதாய் குற்ற உணர்வு கொள்ள வைக்க முடிகிறது. ஏன் அப்படி ஆண்களைக் குற்ற உணர்வு கொள்ளச்செய்ய முடிவதில்லை.

**காவற்பெண்டு** : இதற்கு என்ன பதிலை நீ என்னிடம் எதிர்பார்க்கிறாய். நான் ஒரு அடிமையம்மா.

**கண்ணகி** : அன்னையே, நீங்கள் மட்டுமா, நானும்தான் அடிமை.

**காவற்பெண்டு** : என்ன சொல்கிறாய் மகளே.

**கண்ணகி** : நீங்களோ தன்னை ஓர் அடிமை என்று உணர்ந்த அடிமை. நானோ தன்னை அடிமையென்று இதுவரை உணராத ஓர் அடிமை. நான் மட்டும், எனக்காக வாழ முடியும் என்றா நினைக்கிறீர்கள்?

**காவற்பெண்டு** : மகளே, இப்படிப் பேசக்கூடாது புகார் நகரத்துப் பெருங்குல வணிகரின் வழித்தோன்றல் நீ.

**கண்ணகி** : அன்னையே தயவுசெய்து இக்காற்சிலம்புகளைக் கழற்றி விடுங்கள். அவை கால் விலங்குகள் போல் என்னை உறுத்துகின்றன. கழற்றுங்கள். அன்னையே இச்சிலம்பை, கழற்ற உதவுங்கள்.

*(காவற்பெண்டு காற்சிலம்பைக் கழற்றுகிறாள்)*

**கண்ணகி** : அன்னையே அடிமைத்தனத்திற்கு எதிர்ப்பதம் என்ன.

**காவற்பெண்டு** : எனக்குத் தெரியாதம்மா.

மேடையில் இருள்.

**காட்சி மாறுகிறது.**

## காட்சி 5

### மதுரை, ஆயர் சேரி

கோவலன், கண்ணகி, ஆயர் சேரியின் தலைமகள் மாதரி, ஐயை மற்றும் ஆய்ச்சியர் பெண்கள்

குடிலில் கோவலன் சற்றுயர்ந்த திட்டில் அமர்ந்து கொண்டிருக்கிறான். கண்ணகி மெதுவாக உள்ளே வருகிறாள். புன்முறுவலோடு கோவலனைப் பார்க்கிறாள்.

**கண்ணகி** : என்னங்க, உங்களைத்தான். என்னங்க. என்ன அப்படி ஆழ்ந்த யோசனையிலிருக்கீங்க?

**கோவலன்** : என்ன கேட்டாய்.

**கண்ணகி** : என்ன யோசனை என்று கேட்டேன்.

**கோவலன்** : ஹூம் தாய் தந்தையரோடு, செவிலித்தாயோடு, தோழிகளோடு, பணிப்பெண்களோடு உயர்வாய் வாழ்ந்து கொண்டிருந்த உன்னை, இப்படிச் செம்மண் பூசிய ஒரு சிறு குடிலில் தவிக்க விட்டு விட்டேனே. நான் எவ்வளவு பெரிய தவறு செய்கிறேன்.

**கண்ணகி** : கவலையை விடுங்கள்! நீங்கள் என்னோடு இருக்கிறீர்கள். அதுபோதும் எனக்கு. சுற்றம் சூழ்ந்திருந்தாலும் குற்றேவல் புரிய, நூறுபேர் காத்திருந்தாலும் நீங்கள் அங்கில்லாத போது, நான் தனிமையில் விடப்பட்டவளாகத்தான் உணர்ந்தேன். புதுவாழ்வு தொடங்குவோம். கடந்ததை மறந்துவிடுங்கள். நாம் இணைந்திருக்கிறோம். இனிவரும் நாட்களை நம் வசப்படுத்து வோம்.

( மாதரியும் ஐயையும் வருகின்றனர்)

**மாதரி** : அம்மணி! குளியலாகிவிட்டதா? தேவையானவையெல்லாம் சில நொடிகளில் வந்துவிடும். செம்மண் பூசிய இச்சிறு குடில், தங்களுக்குப் போதுமானதில்லை என்பதை நான் உணருவேன்.

**கண்ணகி** : அப்படியெல்லாம் இல்லை! தாயே. இக்குடில் எனக்குப் பெரும் மகிழ்ச்சி அளிக்கின்றது. என் துணைவரோடு தனித்திருக்கும் மிகப் பெரும் வாய்ப்பை இக்குடில் எனக்குத் தந்திருக்கிறது. எனது மாளிகையில் கிடைக்காத ஒப்பற்ற மகிழ்ச்சியினை இக்குடில்

எனக்குக் கொடுக்கிறது. இதனை நீங்கள் உணர வேண்டும் தாயே.

**ஐயை** : *அம்மா. அவர்களை நம் வீட்டிற்கு விருந்துண்ணக் கூப்பிடம்மா.*

**மாதரி** : *அடியே ஐயை! இவர்கள் சாவக நோன்பு பூண்டவர்கள். பிறர் சமைத்ததை உண்ணமாட்டார்கள். நான் ஆதிரையிடமும் செல் லியிடமும் சொல்லியிருக்கிறேன். பகல் உணவுக்கு அரிசியும் காய்கறிகளும் கொண்டு வந்து தரச் சொல்லியிருக்கின்றேன். அதைக் கவனி! போ போய் இவர்களுக்குச் சமைக்க உதவு.*

*(மாதரி ஐயையைக் காட்டி, கண்ணகியிடம் அறிமுகம் செய்கிறாள்.)*

**மாதரி** : *அம்மா. இவள் என் மகள் ஐயை. இவளைத் தங்களிடத்தில் விட்டுச் செல்கின்றேன். நீங்கள் இட்ட ஏவலைச் செய்து முடிப்பாள்.*

**கோவலன் கண்ணகி இருவரும்**: *மிக்க நன்றி தாயே!*

*(ஐயையும் பிற ஆய்ச்சியரும், காய்கறிகள், அரிசி, மற்றும் சமையல் பொருட்களைக் கொண்டு வந்து தருகின்றனர். பின்னர், அடுப்பை மூட்டி சமைக்கத் தொடங்குகிறாள்.)*

*(சமைத்து முடித்து இலையை இடுகிறாள். கை கால் வாய் சுத்தம் செய்து, கோவலன், இலைமுன் அமர்கின்றான். கண்ணகி உணவைப் பரிமாறுகிறாள்.)*

**கோவலன்** : *கண்ணகி! என்னோடு புறப்படு என்று சொன்ன மறுகணமே மறுமொழி பேசாமல் என்னோடு கிளம்பி வந்துவிட்டாயே. அதை நினைத்து நினைத்து என் மனம் கனக்கிறது. எப்படி? எப்படி இது உன்னால் முடிந்தது?*

*(கண்ணகி மௌனம் காக்கிறாள்)*

**கோவலன்** : *சொல் கண்ணகி! இக்கேள்வி உனக்குப் பிடிக்கவில்லையா?*

**கண்ணகி** : *போற்றா ஒழுக்கம் புரிந்தவர் தாங்கள். இதைப்புரிந்த என்மனம் உங்களைத் தனித்துவிடச் சம்மதிக்குமா? ஏன்? நான் உங்களோடு வந்தது தவறா?*

**கோவலன்** : *இல்லை. இல்லை. நான் அப்படிச் சொல்லவில்லை.*

**கண்ணகி** : *சாப்பிடுங்கள். உணவின் சூடு தணிகிறது.*

*(சாப்பிட்டுக் கை கழுவுகிறான் கண்ணகி தாம்பூலம் தருகிறாள்.)*

**கோவலன்** : *உன் காலில் உள்ள சிலம்பு எத்தனை வராகன்?*

**கண்ணகி** : *எனக்குத் தெரியாது.*

**கோவலன்** : *அரச மகளிர் மட்டுமே அணியகூடிய வேலைப்பாடமைந்த மதிப்பு மிகு சிலம்பு அது. அதில் ஒன்றை எனக்குத் தருவாயா?*

**கண்ணகி** : *ஒன்றென்ன? இரண்டையுமே எடுத்துச் செல்லுங்கள். உங்களுக்கு இல்லாததா?*

**கோவலன்** : *வேண்டாம். ஒன்று மட்டும் போதும். நான் பொருள் ஈட்டியதும் இதைப் போன்ற சிலம்பை, உனக்குச் செய்து தருவேன். அப்போது, எதைப்பார்த்து நகல் செய்வது? ஒன்று உன்னிடத்தில் இருக்கட்டும்.*

*(கண்ணகி சிலம்பைக் கழற்றித் தருகிறாள். ஐயை அதை பார்த்துக் கொண்டிருக்கிறாள்.)*

**கோவலன்** : *பெண்ணே. இங்கே வா? உன் பெயரென்ன சொன்னாய்?*

**ஐயை** : *ஐயை*

**கோவலன்** : *கண்ணகியை நீ கவனமாகப் பார்த்துக்கொள்ள வேண்டும்.*

**ஐயை** : *நிச்சயம் ஐயா, நான் ஒன்று சொல்லட்டுமா?*

**கோவலன்** : *சொல்லேன்.*

**ஐயை** : *உங்கள் இருவரையும் பார்க்கும் போது, ஆயர்பாடியில் பாடித்திரிந்த கண்ணனையும் நப்பின்னையையும் பார்ப்பது போலிருக்கிறது.*

**கண்ணகி** : *அடிப்பெண்ணே! என் கணவனைக் கண்ணன் என்று சொல்லாதே! என் மனம் வலிக்கிறது*

*( மேடையில் இருள் பரவுகிறது. ஐயையின் மீது மட்டும் ஒளி கூட்டப்படுகிறது.)*

*(ஐயை, பார்வையாளரைப் பார்த்துச் சொல்கிறாள்)*

**ஐயை** : *கோவலன் சிலம்பை எடுத்துக்கொண்டு மதுரை நகருக்குப் போகின்றான்.*

(அவனை வழியனுப்பிய கண்ணகி, அவன் கண்ணிலிருந்து மறையும் வரை அவனையே பாரத்துக் கொண்டு அக்குடிலின் வாயிலில் நின்றாள்.)

கோவலன் செல்வதையே பார்த்துக்கொண்டு ஆயர் சேரியின் அச்சிறு குடிலின் வாயிலில் அவள் நின்று கொண்டிருந்த கோலம், எழில் மிக்க ஓவியத்தைப் போன்றிருந்தது. பிறகு குடிலுக்குள் சென்றவள், தன் மடி நிறைய மலர்களை அள்ளிக்குவித்துக்கொண்டு அவற்றை மாலை தொடுக்கத் தொடங்கினாள். அவள் அருகில் அமர்ந்து அவளையே பார்த்துக்கொண்டிருந்தேன். அவளது மேனியிலிருந்து கமழ்ந்த நறுமணப்பொடிகளின் வாசம் மலர்களின் மணத்தோடு கலந்து ஓர் இனம் புரியா உலகுக்கு என்னை இட்டுச்சென்றது. மேடை மீது ஒளி பரவுகிறது. கண்ணகி அதே இடத்தில் அமர்ந்து மாலை தொடுத்துக்கொண்டிருக்கிறாள். ஐயை அவளையே பார்த்தவாறு அருகில் அமர்ந்திருகிறாள்.

**கண்ணகி** : என்னடி பெண்ணே? என்னை விழுங்கிவிடுவது போல் பார்க்கிறாயே. என்ன விஷயம்...?

**ஐயை** : அய்யோ அக்கா! நீங்கள்தான் எவ்வளவு அழகு! உங்களைக் கண்கொட்டாது பார்த்துக்கொண்டிருக்கலாம் போலிருக்கிறது.

கண்ணகி மௌனம் சாதித்தாள். பெருமிதம், வெட்கம் எல்லாம் கலந்த முறுவல் அவள் முகத்தில்.

**ஐயை** : அக்கா உங்களை ஒன்று கேட்கட்டுமா?

**கண்ணகி** : கேளேன்..!

**ஐயை** : மாதவி உங்களை விட அழகானவரா?

**கண்ணகி** : (மௌனமாகி விடுகிறாள்)

**ஐயை** : நான் ஏதாவது தவறாகக்கேட்டு விட்டேனா?

**கண்ணகி** : அப்படியெல்லாமில்லை. நான் அவளை நேரில் கண்டவளில்லை. மற்றவர் சொல்லி அறிந்திருக்கிறேன். புகார் நகரின் மிகச்சிறந்த நடனமணி அவளென்றும், பேரழகியென்றும்.

**ஐயை** : உங்களை விடவா அழகி..!?

**கண்ணகி** : எனக்கு விடை தெரியாத கேள்வியிது பெண்ணே.! நான் என்ன பதில் சொல்ல முடியும்.

**ஐயை** : இருக்கட்டும் மாதவியிடம் எதைக்கண்டு உங்கள் கோவலர் மயங்கினார்?

**கண்ணகி** : இன்னொரு பெண்ணிடம் மயங்க ஆண்களுக்குக் காரணம் ஏதும் தேவையா என்ன?

**ஐயை** : உங்களிடமிருந்து கோவலனைப் பறித்துக் கொண்டாளே. அதற்காக அவள் மீது சினம் கொண்டதுண்டா?

**கண்ணகி** : அவர் தான் எனக்குத் திரும்பக் கிடைத்து விட்டாரே. இப்போது எதற்கடி பழைய கதையெல்லாம்?

**ஐயை** : மாதவியிடம் கோவலன் கொண்ட மையல், உங்களைத் தாழ்வுணர்ச்சி கொள்ளச் செய்யவில்லையா..? உங்கள் உள்ளத்தில் பொறாமைக் கனலைத் தூண்டிவிட வில்லையா?

*(கண்ணகி, மாலை தொடுப்பதை நிறுத்திவிடுகிறாள்.)*

**கண்ணகி** : சிறிய பெண் போலவா பேசுகிறாய் நீ, உனக்கு எதற்கடி இந்தக் கேள்வியெல்லாம்?

**ஐயை** : சொல்லுங்களக்கா!!

**கண்ணகி** : ஒரு பெண்ணுக்கு மிகப்பெரிய தாழ்வு எது தெரியுமா..? ஓர் ஆணுக்காக இன்னொரு பெண்ணோடு போட்டியிடுவதுதான். அத்தாழ்வு நிலைக்கு நான் என்றும் சென்றதில்லை. மாதவியிடம் நான் பொறாமை கொண்டதில்லை. ஆனால் அவளிடம் உள்ள திறன்கள் பலவும் என்னிடம் இல்லையென்பதை அறிய நேர்கிற போது அவள் மீது கொண்ட மதிப்பு மேலும் உயர்ந்தது. உனக்கு தெரியுமா? புகாரிலிருந்து மதுரைக்கு வந்துக்கொண்டிருந்த போது இடைவழியில் ஓர் நாள், கோசிகன் எனும் பார்ப்பான் மாதவியிடமிருந்து மடலொன்று கொண்டு வந்தான். புனுகு நெய்யின் வாசம் வீசும் அம்மடலைப் பிரித்ததுமே கோவலன் மாதவியின் நினைவுகளில் மூழ்கிப்போனான். மடலை வாசிக் காது மயங்கி நின்றான். அடிகள் கவுந்தி, தன் குரலைச் செருமி நாங்களிரு பெண்கள் அங்கிருக்கிறோம் என்பதைக் கோவலனுக் குத் தெரிவித்தார். பிறகுதான் அம்மடலை அவன் வாசித்தான்.

பெண்ணே! மாதவியெனும் மங்கை நல்லாளை நான் அன்றுதான் முழுமையாக அறிந்தேன். எனக்கு இந்த மலர்களைக் கொண்டு மாலை தான் தொடுக்கத் தெரியும். ஆனால் சொற்களைக் கொண்டு சரம் தொடுக்கத் தெரிந்த வித்தகி அவள். அருகன் பள்ளியில் எண்ணையும் எழுத்தையும் கற்றவள்தான் நான். ஆயினும் மாதவி போல் கவிபுனையக் கற்றவளில்லை, ஆழ்ந்த தர்க்க நூல், தேர்ந்த சாத்திரம் பயின்றவளில்லை. அம்மடலில், கள்வர் போல நள்ளிரவில், புகார் விட்டு நீங்கினீரே, இதில் என் குற்றம் என்ன என்று கோவலனிடம் கேட்டிருந்தாள் அவள். தண்டனை பெறுகின்ற குற்றவாளிக்கு தான் செய்த குற்றம் என்னவென்று தெரிந்துவிடும். தெரியவில்லையெனில், தண்டிக் கும் போது அது அவனுக்குத் தெரிவிக்கப்படும். ஆனால் செய்த குற்றமென்னவென்று அறியாமல் தண்டனையை அனுபவிகின் றேனே. இதில் என் குற்றமென்ன? என்று கேட்டிருந்தாளவள். இப்படி ஒரு கேள்வியைக் கோவலனிடம் கேட்க வேண்டுமென நான் ஒருநாளும் நினைத்ததில்லை. அப்படிக் கேட்க கோடி நியாயங்கள் எனக்குள் இருந்தபோதிலும் கேள்விகளே திரண்ட தில்லை என் மனதில்..! இவ்வுண்மை எனக்குப் புலப்பட்டதும், என் மீதே வெறுப்புற்றேன் நான். நான் என்னில் பெரியோரைக் கண்டு வியந்தவளுமில்லை; சிறியோரைக் கண்டு இகழ்ந்தவளும் இல்லை. இருந்தாலும் சொல்கிறேன் பெண்ணே! அவள் கணிகையர் குலத்தில் பிறந்தாலும், மாதவம் செய்த கவுந்தியடி களைப் போல் மெத்தப்படித்தவள்.

**ஐயை** : உங்கள் மீதுள்ள மதிப்பைப் பன்மடங்கு உயரச்செய்கிறது அக்கா, உங்கள் பதில்..! முகத்துதி என நினைத்து இதனைப் புறந்தள்ள வேண்டாம்! எனக்குள்ள பெருவிழைவு என்ன தெரியுமா? நான் உங்களைப் போலிருக்கவே ஆசைப்படுகிறேன்.

**கண்ணகி** : அடி பாவிப்பெண்ணே! போயும் போயும் என்னைப்போல ஒரு அபலையாயிருக்கவா, ஆசைப்படுகிறாய், எந்தப்பெண்ணும் இருந்து விடக்கூடாதடி என்னைப் போல்..! மாதவி போல், அடிகள் கவுந்தியைப் போல் மெத்தப்படித்தவளாக ஆக முயற்சி செய்..! அதுதான் உன் போன்ற பெண்களுக்கு நல்லது. சரி நீ என்னிடம் என்னென்னவோ கேள்விகளைக் கேட்டு என் மனதில் பலவிதச் சலன அலைகளை எழுப்பிவிட்டாய். போதும் என்னைத் தனித்திருக்கவிடு.

*(கண்ணகியைப் பார்த்தவாறே ஐயை அங்கிருந்து செல்கிறாள்.)*

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| கழஞ்சு | - | தங்கத்தை அளக்கும் அளவு (1.77g) |
| கணிகையர் குலம் | - | பரத்தையர் குலம் |
| அபலை | - | பேதைப் பெண் |
| வஞ்சியர் | - | பெண்கள் |
| முகத்துதி | - | புகழ் |
| வராகன் | - | பொன் |
| அடிசில் | - | உணவு |
| கொழுநன் | - | கணவன் |
| முறுவல் | - | புன்னகை |

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. இந்த நாடகப்பிரதி மூலம் நாடக ஆசிரியர் கூற விழைந்த கருத்துக்கள் யாவை?
2. காவற் பெண்டு கண்ணகியை வணங்காமைக்கான காரணம் என்ன?
3. மாதவி பற்றிய கண்ணகியின் மனப்பதிவுகளினூடாக உமக்கு ஏற்படும் உணர்வுகளை விளக்குக.
4. **நீங்களோ தன்னை ஓர் அடிமை என்று உணர்ந்த அடிமை. நானோ என்னை அடிமையென்று உணராத ஓர் அடிமை** என்ற கண்ணகியின் கூற்றுப் பற்றிய உமது கருத்துக்களை எழுதுக.
5. பின்வரும் கூற்றுக்கள் இடம்பெறும் சந்தர்ப்பங்களை விளக்குக.
   அ) அய்யோடா. கீழே சிதறிய முத்துக்களை பொறுக்குங்கள்.
   ஆ) அறிந்தோம் அருகன் வழி தங்கள் அறமாகட்டும்.
   இ) பெண்ணே இங்கே வா உன் பெயர் என்ன சொன்னாய்?

## குழுமச் செயற்பாடு

இந்த நாடகத்தைப் பாடசாலை இலக்கிய மன்றத்தில் நிகழ்த்திக் காட்டுவோம்.

**திறன் வளர் செயற்பாடு**

**பெண்கள் மீதான ஒடுக்கு முறைகள் இன்னமும் மாற்றமடையவில்லை** *என்ற தலைப்பில் நான்கு நிமிடத்திற்கு குறையாத சொற்பொழிவு ஆற்றுவோம்.*

# 5 யேசு கிறிஸ்து

**பாரதியார் (கி.பி 1882 - 1921)**

இந்தியாவின் எட்டயபுரத்தில் பிறந்த இவர், இருபதாம் நூற்றாண்டின் நவீன கவிதை உருவாக்கத்தில் முன்னோடியாகத் திகழ்கின்றார். ஆயினும் மரபின் செல்வாக்கினை இவரது விநாயகர் நான்மணிமாலை முதலான இலக்கியங்களில் காண முடிகின்றது. கதை, கட்டுரை, மொழிபெயர்ப்பு, வசன கவிதை, கவிதை என்று விரியும் இவரது படைப்பாளுமைகள் கனதியானவை. சமஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய மொழிகளிலும் புலமை மிக்கவராக விளங்கினார்.



பாரதியின் தோத்திரப் பாடல்கள் அவரது விசாலமான மனதை, மானுடத்தைச் சித்திரிக்கின்றன. இப்பாடல் யேசு கிறிஸ்து பற்றி விபரிக்கின்றது.

'ஈசன் வந்து சிலுவையில் மாண்டான்

எழுந்து யிர்த்தனன் நாள் ஒரு மூன்றில்'.

நேசமாமரியா மக்த லேநா

நேரிலே இந்தச் செய்தியைக் கண்டாள்

தேசத் தீர் இதன் உட்பொருள் கேளீர்;

தேவர் வந்து நமக்குட் புகுந்தே

நாச மின்றி நமை நித்தங் காப்பார்;

நம் அகந்தையை நாம் கொன்று விட்டால்

அன்புகாண் மரியா மக்த லேநா

ஆவி காணுதிர் யேசு கிறிஸ்து;

முன்பு தீமை வடிவினைக் கொன்றால்

மூன்று நாளினில் நல்லுயிர் தோன்றும்;

பொன்பொ லிந்த முகத்தினிற் கண்டே

போற்றுவாள் அந்ந நல்லுயிர் தன்னை;

அன்பெனும் மரியா மக்த லேநா

ஆஹா ! சாலப் பெருங்கிளி யிஃதே

உண்மை யென்ற சிலுவையிற் கட்டி

உணர்வை ஆணித் தவங்கொண்டடித்தால்

வண்மைப் பேருயிர் யேசு கிறிஸ்து

வான மேனியில் அங்கு விளங்கும்

பெண்மைகாண் மரியா மக்த லேநா

பேணும் நல்லறம் யேசு கிறிஸ்து

நுண்மை கொண்ட பொருளிது கண்டீர்

நொடியி லிஃது பயின்றிட லாகும்.

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. யேசு கிறிஸ்துவின் மூன்றாம் நாள் உயிர்ப்பைப்பற்றி பாரதி நோக்கும் முறை யாது?

2. மரியாமதலேனா, யேசு கிறிஸ்து ஆகியோர் பற்றிய பாரதியின் சித்திரிப்புகளை விளக்குக.

3. இக்கவிதையில் இடம்பெறும் அணியினைக் குறிப்பிட்டு அதன் சிறப்புக்களை விளக்குக.

4. இக்கவிதையில் இடம்பெறும் எதுகைமோனைகளைக் குறிப்பிட்டு அவை ஏற்படுத்தும் சந்தத்தை (ஓசை) தெளிவுறுத்துக.

5. பின்வரும் சொற்களின் பொருளை எழுதுக.
   அ. அகந்தை
   ஆ. வண்மை
   இ. மேனி
   ஈ. நுண்மை

## குழுமச் செயற்பாடு

பாரதியார் சமயங்களைப் பற்றிப் பாடிய பாடல்களைத் தொகுத்துச் சுவர்ப் பத்திரிகை தயாரிப்போம்.

## திறன் வளர் செயற்பாடு

''மகாகவி பாரதியார்'' பற்றிய உரைச் சித்திரம் ஒன்றை ஆக்குவோம்.

# 6 மின்மினிகளால் ஒரு தோரணம்

**முல்லை முஸ்ரிபா**

இவர் தொண்ணூறுகளிலிருந்து ஈழத்து இலக்கியப் புலத்தில் செயலாற்றுபவர். இருத்தலுக்கான அழைப்பு, அவாவுறும் நிலம், சொல்லில் உறைந்து போதல், என் மனசின் வரைபடம் ஆகியன இவரது வெளிவந்த படைப்புகளாகும்.



தமிழ் இலக்கியத்துக்கு அறிமுகமான ஹைக்கூ என்ற ஜப்பானிய கவிதையின் வரலாறு, அதன் வடிவம், உள்ளடக்கம், அதனைப் புரிந்துக்கொள்ளும் விதம் என்பவற்றை விளக்குவதை நோக்காகக் கொண்டதே இக்கட்டுரையாகும்.

**என் சட்டைப்பைக்குள்**
**மின்மினிப் பூச்சிகள்**
**ஹைக்கூ கவிதை.**

கவிதை என்பது வாழ்வியலின் கோலம். அது அனுபவச் செறிவும் உணர்வுச் சாரமும் கலந்த வெளிப்பாடு.

கவிதை என்பது வெறும் சொற்களினால் மட்டும் அமைந்து விடுவதில்லை. சொற்களின் இடைவெளிகளாலும் ஆனது. சொற்களையும் கடந்து வேறுவேறு அர்த்தங்களினாலுமானது. கவிஞனின் அனுபவமானது வாசகனின் தேடல், அனுபவம், கருத்து நிலை, ஆற்றல் சிந்தனைப் போக்கு உள்ளிட்ட ஆளுமைகளூடாகப் புதிய கோலங்களை வரைந்து கொண்டிருக்கும். இத்தகைய அழகுமிக்க சித்திரங்களில் ஹைக்கூ கவிதையும் உள்ளடங்கும்.

ஹைக்கூ ஜப்பானிய மொழியின் லாவகம். உலகளவில் புகழ் பெற்றுத் திகழும் அழகுக் கவிதை வடிவம். வாசிப்போரை மயங்கச்செய்யும் வசிய சக்திதான் ஹைக்கூ.

ஹைக்கூ என்பது 'சிந்தனை எனும் ஜலப்பரப்பில் எறியப்படும் சிறியகல்' போன்றது என்கின்றார் சுஜாதா. கல் நீரில் அலைச்சுழியை ஏற்படுத்தி அதிர வைப்பது போல ஹைக்கூவும் வாசிப்பாளனிடத்தில் அதிர்வுகளை மூட்டிவிட வல்லது. ஹைக்கூ என்பது 'தூய்மையான கவிதையின் அடர்த்தியான சாறு பிழிவு' என்பார் கென்னத் யசூதா. எளிமையான சின்னச் சொற்களுக்குள் மிகவும் பெரியதான அர்த்தப்பாடுகளைக் கிளர்த்தி விடுகிற ஆற்றல் ஹைக்கூவுக்கு உண்டு. இதனால் தான் 'சின்னதாய் இருக்கும் பெரிய அற்புதம்' என்கிறார் கவிக்கோ அப்துல் ரகுமான்.

ஹைக்கூ 'பாதியாய்த் திறந்த கதவு; அதன் வழி எம்மை அழைக்கும் கைச்சைகை' (ஆர்.எம்.பிளித்) கதவை முழுமையாகத் திறந்து உள்நுழைய வேண்டியதும் பொருட் செறிவு காண வேண்டியதும் வாசகனின் வேலையாகும். 'கவிஞன் இறங்கிக் கொள்ள வாசகன் அதன் மீது பயணம் தொடர்வான்' ('ரேமாண்ட் ரோசலிப்') என்ற ஹைக்கூ பற்றிய கூற்று வாசகனும் கவிதையின் கூட்டுப்படைப்பாளி என்பதனைச் சுட்டி நிற்கின்றது. எனவே ஹைக்கூவை 'கவிதை உலகின் புதிய மழலை' என்று (மேலாண்மை பொன்னுசாமி) குறிப்பிடுவது பொருத்தமானதாகும்.

ஜப்பானிய கவிதை மரபு தன்கா, சோக்கா, ரெங்கா, டாங்கா, சென்றியு, ஹைபுன், ஹொாக்கு எனப் பலவகைப் பா வடிவங்களைத் தன்னுள் பொதித்து வைத்துள்ளது. அதன் இன்னொரு வடிவமே ஹைக்கூ ஆகும்.

ஹைக்கூ என்பதன் அர்த்தம் என்ன? என்ற கேள்விக்கு சேம்பர்ஸ் அகராதி ''5,7,5 அசைகள் (Syllables) கொண்ட ஜப்பானிய கவிதை'' என்று பதிலுரைக்கின்றது. எனினும் இந்த விளக்கத்தையும் தாண்டி ஹைக்கூ ஒரு அனுபவப் பகிர்வு, வியப்பில் ஆழ்த்தும் வீச்சு; இரசனையூட்டும் அழகு, சிந்தனையையெழுப்பும் அலை, உணர்ச்சியை ஏற்றும் தூண்டியாக அமையும் ஆற்றல் மிக்க வடிவம். ஒரு மின்னல் அல்லது மின்மினி எனலாம்.

அனுபவத்தையும், உணர்வையும் பிறருக்குத் தர முயல்வது தான் ஹைக்கூ. உண்மையில் கலை, இலக்கியம் அனைத்தினதும் நோக்கும் இதுதான். கவிஞனோ, கலைஞனோ, ஓவியனோ தனக்குக் கிடைக்கும் அனுபவத்தை அப்படியே உணர்வு இழை அறுந்திடாதவாறு தன் சிருஷ்டியைப் பின்னி வாசகருக்குப் பரிசளிக்கின்றான். வாசகர்கள் தமது அனுபவ வெளியுடன் இணைத்து ரசித்து இன்புறுகிறார்கள் அல்லது துயருறுகிறார்கள். ஒரு கணப் பொழுதின் மகிழ்வை அல்லது துயரைப் பகிர்கிறது ஹைக்கூ.

கணப்பொழுதின் அனுபவமாக இருப்பினும் அது கிளர்த்தும் சிந்தனைகளும், சம்பாசணைகளும், எதிர்வினைகளும், கேள்விகளும் அதிகம் வாசக மனசுக்குள் அலை எழுப்பும். அதனால் தான் ஹைக்கூ காந்தம் போல் இழுக்கும் மொழிநடையையும், பிரபஞ்சத்தின் அந்தரங்கங்களைக் காட்சிப்படுத்தும் தத்துவப் பார்வையையும் கொண்டுள்ளது எனலாம்.

ஹைக்கூ பதின்நான்காம் நூற்றாண்டில் தோற்றம் கண்டது. மோரிடாகே (1473 - 1549) சோகன் (1465 - 1553) என்பவர்கள்தான் ஹைக்கூவின் முன்னோடிகளாவார். எனினும் பாஷோ (1644- 1694) தான் மிகப் பெரும் ஹைக்கூ கவிஞராகப் பேசப்பட்டவர். ஹைக்கூவுக்கு முழுவடிவம் கொடுத்து அதில் செழுமையைப் பாய்ச்சியவர் பாஷோ. கற்பனை வாதத்தில் மிதந்த ஹைக்கூவை அன்றாட வாழ்வின் யதார்த்த நிலமைக்கு இட்டுச் சென்றவரும் பாஷோதான்.

இவருக்குப் பிறகு பூசன் (1716 - 1783) ஹைக்கூவுக்குப் புலனுணர்வு வண்ணத்தை ஊட்டியவராவார். இஸ்ஸா (1763 - 1827) ஹைக்கூவை சாமான்யர்களின் கைகளுக்குப் பரிசளித்தார். ஷிகி (1867 - 1902) ஹைக்கூவில் இயற்கையான உண்மை பூர்வமான சித்திரங்களே வரையப்படல் வேண்டும் என வலியுறுத்தினார். அவர்கள் அனைவரும் தான் ஹைக்கூவின் பரிணாம வளர்ச்சியின் பங்குதாரர்களாகப் போற்றப்படுகின்றனர்.

தமிழிலும் ஹைக்கூ பற்றிய கதையாடலும் சிந்தனைகளும் நீண்ட காலத்துக்கு முன்பே வேர்விடத் தொடங்கிவிட்டது. சேலம் தமிழ்நாடன், புவியரசு, சி.மணி, அப்துல்ரகுமான், தமிழன்பன், அறிவுமதி, தி.லீலாவதி, சுஜாதா உள்ளிட்ட பலரும்

ஹைக்கூவைப் பேசு பொருளாக்கியுள்ளனர். இதன் தொடர்ச்சி ஈழத்துப் படைப்பாளிகள் சிலரிடம் வெளிப்பட்டது. ஐரோப்பிய, கிரேக்க, பிரெஞ்சு, தென் அமெரிக்க, ஆபிரிக்க, இந்திய மொழிகளிலெல்லாம் இன்று ஹைக்கூ எழுச்சி பெற்றுள்ளது.

ஹைக்கூ ஒரு சத்தியத்தேடல், சுற்றுப்புறத்தின் மீதெழும் அர்த்தப்பார்வை, எல்லையற்று விரியும் கருத்துச்சேர்வை. அது வெறும் கவிதையல்ல. ஒரு வாழ்வியல் முறையாகும். ஜென் (Zen) தத்துவக் கோட்பாட்டின் இலக்கிய வெளிப்பாடுதான் ஹைக்கூ. உலகியலுடன் ஒன்றுவதும், தனித்து நிற்பதுமான இருநிலைப்போக்கின் ஒரு நிலைத் தத்துவம் தான் ஜென். இருப்பதில் இல்லாததும், இல்லாததில் இருப்பதும் எல்லாவற்றிலும் இருப்பையும், இல்லாமையையும் காண்பதுதான் ஜென் என்கிறார்கள். உதாரணமாக ஒரு குடம் நிரம்பி இருந்தால் அதனை நிறை குடம் எனப் பாராட்டும் சிந்தனைப் போக்கு நம்மிடம் உண்டு. ஆனால் அக்குடம் எவ்வளவுக்கு எவ்வளவு காலியாக உள்ளதோ அவ்வளவுக்கு அவ்வளவு அது பயனுள்ளது என்பதே ஜென் தத்துவம். இந்த தத்துவப் பார்வையினடியாகத் தோன்றியதே ஹைக்கூ ஆகும்.

இது மூன்று வரிகளில் பதினேழு (5+7+5) அட்சரங்களைக் கொண்டது.

**ப-ழை-ய-கு-ளம்**
**த-வ-ளை-கு-திக்-கை-யில்**
**த-ண்ணீ-ரில்-சப்-தம்**

**-பாஷோ**

ஹைக்கூவில் முக்கியமானது வெட்டுவார்த்தை. அதாவது 17 அசைகளிலும் முதல் 12 அசைகளும் முதல் இரண்டு வரிகளில் அமையும். எனவே இரண்டாவது வரியில் ஒரு வெட்டு, ஒரு தயக்கம், ஒரு வித முடிவு இருக்க வேண்டும். அதன் பின் இன்னொரு வெட்டு மூன்றாவது வரியில் இருக்க வேண்டும். இதில்தான் கருத்துத் திருப்பம், ஆச்சரியம், அதிர்வு, ஒரு இழு விசை நிகழும்.

எனவே ஹைக்கூவில் இரண்டு பகுதிகள் அல்லது படிமங்கள் உள்ளன. மேலோட்டமாக இவை இரண்டுக்கும் தொடர்பு இல்லைப்போலத் தோன்றினாலும் ஆழமாகப் பார்த்தால் இரண்டுக்குமிடையில் ஒரு அந்தரங்க உறவு இருக்கும். அதுதான் ஹைக்கூவின் காந்த ஈர்ப்பு. அந்த ஈர்ப்பு பிரமிப்பையும் பரவசத்தையும் ஊட்டும்.

ஒரு ஹைக்கூவைப் படிக்கும் போது மூன்று வரிகளையும் ஒரேயடியாக தண்ணீரை மடக்குமடக்கென்று குடித்து முடிப்பதைப்போல வாசித்து விழுங்கிவிடக் கூடாது. முதல் இரண்டு வரியையும் (முதல்படிமம்) மெதுவாக வாசித்து நிறுத்த வேண்டும். மீண்டும் முதல் இரண்டு வரியையும் வாசித்து நிறுத்திய பின், மூன்றாவது வரியைப் படிக்க வேண்டும் (இரண்டாம் படிமம்) அப்போது தான் ஹைக்கூவின் உயிர்ப்பை உணரமுடியும் என்கிறார்கள் ஹைக்கூ அறிஞர்கள்.

**உதிர்ந்த வீழ்ந்த மலர்**
**கிளைக்குத் திரும்புகிறது**
**ஓ! வண்ணத்துப்பூச்சி**
**- மோரிடாகே**

*செர்ரி மரத்திலிருந்து பூக்கள் மெதுமெதுவாக உதிர்ந்து கொண்டிருக்கின்றன. திடீரென்று ஒரு பூ தரையிலிருந்து கிளையை நோக்கிப் பறக்கிறது. என்ன இது? பூ பறக்கிறதா? வியப்பு விரிகிறது. ஆச்சரியம் மேலிடுகிறது.*

*செர்ரிப் பூக்கள் வசந்தத்தின் சின்னம், இயற்கையின் அழகுக்கு குறியீடு, இந்தச் சின்ன அழகுகள் உதிர்ந்து வாடி விடுகின்றன. எனினும் இயற்கை இன்னொரு அழகான வண்ணத்துப்பூச்சியை அந்த இடத்தில் கொண்டு வந்து வைத்து இழப்பை ஈடு செய்து விடுகிறது.*

*வண்ணத்துப் பூச்சி ஏன் பூவாகத் தெரிந்தது. தோற்றத்தில் அல்லது பார்வைக்கு இரண்டும் ஒன்றாகத் தெரிந்ததால் தானே. இதற்குள் பார்வை மயக்கம், மாயம், போலி, சட்டென்ற மறுநிம்மதி எல்லாம் இருக்கின்றன. 'அழகானவை அழிந்து விடும் ஆனால் அழகு அழியாது' என்ற தத்துவம் இதில் பொதிந்துள்ளது அல்லவா?*

**(அ) உதிர்ந்து வீழ்ந்த மலர்**
**கிளைக்குத் திரும்புகிறது**

**(ஆ) உதிர்ந்து வீழ்ந்த மலர்**
**கிளைக்குத் திரும்புகிறது**
**ஓ வண்ணத்துப்பூச்சி**

*கடைசி வரி மின் தாக்கமாய் அமைந்து விடுகிறது.*

*ஆழ்ந்து சிந்தித்தால் உதிர்ந்த மலர் கிளைக்குத் திரும்புகிறது என்பது கூட நிஜமானதுதான். பூ - உதிர்ந்து - சருகாகி - உக்கி - மண்ணோடு கலந்து - உரமாகி - வேருக்கு உணவாகி மீண்டும் பூவாக அவதாரம் எடுக்கிறது அல்லவா?*

*எல்லாவற்றையும் வெளிப்படையாகச் சொல்வது கவிதையின் வேலையில்லை. அதில் பொதிந்துள்ள எல்லாவற்றையும் தேடிக்கொள்வது வாசகனின் வேலை. ஹைக்கூவில் வாசகனும் கூட்டுப் படைப்பாளிதான்.*

*இந்த இடத்தில் இன்னொரு விடயத்தையும் கவனிக்க வேண்டும். இப்போதெல்லாம் மூன்று வரிகளில் எழுதிவிட்டு 'ஹைக்கூ' என்று கூறுகின்றார்கள். இவை வேண்டுமென்றால் மணிக்கவிதைகளாகவோ, குட்டிக் கவிதைகளாகவோ இருந்துவிட்டுப் போகலாம். இவை ஹைக்கூக்கள் அல்ல. இனி சில ஹைக்கூக்களை*

அவதானிப்போம்.

**தீ வெயிலில் சிட்டு**
**சீதளக் காற்றுடன் கணநிழல்**
**ஓ அதுவொரு கழுகு**

எம்.எச்.எம். ஷம்ஸ்

இந்த ஹைக்கூவைப் படிக்கும் போது மனதில் தோற்றமிடும் காட்சி எத்தகையது? அது தோற்றுவிக்கும் உணர்வுகள் யாவை? அது ஏற்படுத்தும் அனுபவங்கள் யாது? சிந்தித்துப் பாருங்கள்.

மேலோட்டமாகப் பார்க்கும் போது இம் மூன்று வரிகளும் ஒரு காட்சியை எடுத்துக்காட்டுகின்றன. அவ்வளவுதான் என்று தோன்றலாம். ஆனால் சற்றே ஆழமாக வரிகளுக்குள் உள்நுழைந்து பார்க்கும் போது அதன் பரிமாணங்கள் விரிவதனை உணரலாம்.

''தீ வெயிலில் சிட்டு'' நெருப்பாகக் கொதிக்கும் கோடை வெயிலை ஞாபகத்தில் தருகிறது. அவ்வெயிலில் துடித்திருக்கும் சிறிய குருவி மீது பரிவு சுரக்கிறது. அத்துடன் கேள்விகளும் எழுகின்றன. அது ஏன் வெயிலில் தவிக்கிறது? அதன் தனிமைக்கு காரணம் என்ன? யார்தான் அதனை வெயிலில் தனித்தலைய விட்டது? அது பசி தீர்க்கவும் உயிர்காக்கவும் என்னதான் செய்யும்?எனத் தொடர் கேள்விகள் எழுகின்றன. அதனை வெயிலிலிருந்து காக்க வேண்டுமென்ற நேயம் பிறக்கிறது. இரக்க உணர்வு கசிகிறது. நாமும் வெயிலிலோ, நெருப்பிலோ அல்லல்பட்ட அனுபவம் ஞாபகத்தில் மீள மீள விரிகிறது.

எனினும் இரண்டாவது வரியை ('சீதளக் காற்றுடன் கணநிழல்') என வாசிக்கும் போது வெயிலுக்கு எதிரான நிழலைக் காண முடிகிறது. ஒரு மகிழ்ச்சி, சிறு சந்தோசம், ஆறுதல், அன்பு, குளிர்ச்சியான காற்றுத்தழுவும் இதம் ஏற்படுகிறது. அதனூடே கேள்விகளும் எழுகின்றன? நிழல் தருவது எது? ஏன்? எப்படி? அதே கணம் அந்த நிழல் கணநிழல் தான் என உணரும்போது, ஏற்பட்ட அத்தனை மகிழ்ச்சிகளும் ஒடுங்கி விடுகின்றன. டப்பென்று வெடித்த பலூனாக மனம் சுருங்கிப்போகின்றது. அந்த நிழல் மீதே கோபம் ஏற்படுகிறது. ஒருவித பயம் தொற்றுகிறது. அந்த நிழல் கொஞ்ச நேரத்தில் அழிந்து விடுவதற்கான காரணம் எதுவாக இருக்கும்.

மூன்றாவது வரியில் விடை கிடைக்கிறது.

**'ஓ அதுவொரு கழுகு'**

நிழலைத்தந்தது கழுகு. இனி கழுகு பற்றிய எண்ணங்கள் விரியத் தொடங்குகின்றன. உண்மையில் அது குருவிமீது கருணை கொண்டு நிழலைத் தரவில்லை. கணப்பொழுதில் குருவியைப் பிடித்து வருத்துவதே அதன் நோக்கம் என்பது தெரிய வருகிறது. கழுகு மீது வெஞ்சினமும், குருவி மீது பரிவும் ஏற்படுகிறது. ஒரு வகையில் அச்சம் பிடித்துக் கொள்கிறது. இத்தனை உணர்வுகளையும் தோற்று விக்கிறது இந்தக் ஹைக்கூ கவிதை.

அதுமட்டுமின்றி இந்த ஹைகூ படிமமும், அர்த்த புஷ்டியும் மிக்கது . சிட்டுக் குருவி, கணநிழல், கழுகு என்பவற்றைக் குறியீடாக அடையாளம் காணமுடிகிறது. கழுகு அதிகாரத்தினதும், அடக்கு முறையினதும், குறியீடாகும். மூன்றாம் உலக நாடுகள் தான் இங்கே குருவியாகத் தோற்றம் காட்டுகின்றன.

அப்படியென்றால் கணநிழல் என்பது தந்திரரோபாயத்தினதும் ஏமாற்றுத் தனத் தினதும் குறியீடாகும். அதாவது மேலைத்தேச ஆதிக்க சக்திகள் ஏழை நாடுகளுக்கு உதவி ,அன்பளிப்பு, கடன், என்ற பெயர்களில் வழங்கும் பிச்சைகளை இது சுட்டுகிறது. அதன் பின்னாலிருக்கும் ஆபத்தை அச்சுறுத்துகிறது. இந்த அரசியல் அர்த்தப்பாட்டை ஹைக்கூ வெளிப்படுத்துவது வியப்புக்குரியது.

இத்தகைய அர்த்தப்பாட்டையும் நயப்பையும் ஊட்டுகிறது மற்றொரு ஹைக்கூ

**கயிறுகளை மேயவிட்டு**
**கொளுத்தன மாடுகள்**
**பூசணி** – அபு அம்மார்

மாடுகள் தானே மேய்ந்து கொழுக்க வேண்டும். இங்கு கயிறுகளால் மேய்ந்து மாடுகள் கொழுத்தன என்பது ஒரு முரண் அனுபவத்தைத் தருகிறது. கயிறுகள் ஒடுக்கப் பட்டோர் அல்லது தொழிலாளர்கள் அல்லது கீழ்த்தட்டு மக்கள் ஆவர். இவர்கள் சுரண்டலுக்கு உட்படுத்தப்படுபவர்கள். மாடுகள் என்ற குறியீடு ஒடுக்குவோர், அதிகாரவர்க்கத்தினர், முதலாளிகள், உயர் வர்க்கத்தினர் ஆகியோரைக் குறித்து நிற்கின்றன. இந்த வர்க்கபேத அரசியலை இக் ஹைக்கூ உட்பொதிந்து வைத்துள்ளது.

மூன்றாவது வரியில் நிஜம் வெளிப்படுகிறது. பூசணிக்காய் அப்படிக் கொழுத்துக் கொண்டு வரவர, கொடி தானே பரவிப்படர்கின்றது. அதாவது பூசணிச் செழுமைக்கு கொடியின் உழைப்புத்தான் மூலம்.தொழிலாளியின் வியர்வையில்தான் முதலாளி செழிப்புறுகிறான் என்றெல்லாம் சிந்தனைச் சிறகை விரிக்கச் செய்கிறது ஹைக்கூ என்ற அற்புதம்.

இப்படிதான் ஹைக்கூக் கவிதைகள் மனித வாழ்வின் பல்வேறு கோணங்

*களையும் இயற்கையோடு கலந்து கோலமிட்டுக் காட்டுகின்றன.*

*இருவேறு காட்சிகளின் இணைவுகளில் வெளிப்படும் அனுபவத்தின் தரிசனம் தான் ஹைக்கூ. கலைத்துவம் மிக்க, கவித்துவமான, உள்ளடக்கச் செறிவு கொண்ட காட்சிகளின் இணைவு ஹைக்கூவை உயர்த்திவிடவல்லது.*

*ஹைக்கூவின் பாடுபொருள் அல்லது உள்ளடக்க வீச்சு என்பது பல்வேறு நிகழ்ச்சிகள் -காட்சிகளூடாகக் கட்டமைக்கப்படுவதாகும்.*

*கருணை உள்ளமும், ஜீவ நேயமும் மகத்தான பண்பாகும். கீழேயுள்ள ஹைக்கூ களைப் படியுங்கள்*

யாராவது எனக்கு நீர் கொடுங்களேன்
என் கிணற்றைப் பிடித்துக் கொண்டது
பூத்த இளங்கொடி - சியோனி

அழுக்குக் குளியல் நீரே
எங்கே உன்னை ஊற்றுவது
புல்லில் பூச்சிகளின் பாடல் - ஒனிட் சுரா

குளம்
முகம்பார்க்கும் நிலா
குளிக்காமல் திரும்பினேன் - மித்ரா

விரியாதே மொட்டே!
உன்னில் அமர்ந்திருக்கும்
பனித்துளிகள் பாவம் - பாலரஞ்சனி சர்மா

*வாழ்வின் வறுமையும் அதனாலான துயரமும் ஏற்படுத்தும் தாக்கம் அதிகமானது. வறுமை தருகிற இயலாமையை அழகுணர்ச்சி கொண்டு நிரப்பிவிடும் போது ஹைக்கூ ரசிப்புக்குரியதாகின்றது..*

இந்த அழகிய கிண்ணத்தில்
பூக்களை அடுக்கி வைப்போம்
அரிசிதான் இல்லையே - பாஷோ

ஏழைக் கிராமத்து மக்கள்
மீனும் இல்லை பூவும் இல்லை
நிலவைப் பகிர்ந்துக் கொள்ளலாம் - ஸாய்காகு

என்வீடு எரிந்து போனதால்
நன்றாகப் பார்க்க முடிகிறது
உதிக்கும் நிலாவை - மசாஹிடே

போதுமான ஆட்கள் ஏறியும்
புறப்படவில்லை புகையிரதம்
லயன்கள் -சு. முரளிதரன்

நாற்று நடும் பெண்கள்
எங்கும் சேறு
அவர்கள் பாட்டைத்தவிர -ரைஸான்

*ஹைக்கூ இப்படித் தான் படைப்பாளிகளதும் படிப்பாளிகளதும் அனுபவங்களைக் கலந்து புதிய புதிய உணர்வலைகளை எழுப்பிக் கொண்டேயிருக்கிறது.*

பிடித்தபோது
விரல் நுனிகளில் ஒளியேற்றியது
மின்மினிகள் -தைகி

*ஆமாம் நாமும் ஹைக்கூ எனும் மின்மினிகளால் தோரணங்கட்டி கவிதையைக் கொண்டாடுவோம்.*

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. *ஹைக்கூவின் அமைப்பை எடுத்துக்காட்டுக.*

2. *இக்கட்டுரையில் குறிப்பிடப்படும் ஹைக்கூக் கவிஞர்களைப் பட்டியல் படுத்துக.*

3. **சின்னதாய் இருக்கும் பெரிய அற்புதம்** *என்ற கூற்று ஹைக்கூ கவிதைக்கு எவ்வாறு பொருந்துகிறது ?*

4. *இருப்பதில் இல்லாததும் இல்லாததில் இருப்பதும் என்ற கூற்றினூடாக நீர் விளங்கிக் கொள்வது யாது ?*

5. **போதுமான ஆட்கள் ஏறியும்**
**புறப்படவில்லை புகையிரதம்**
**லயன்கள்**
*இந்தக் ஹைக்கூவில் பொதிந்துள்ள செய்தியையும் உணர்ச்சியையும் தெளிவுபடுத்துக.*

## குழுமச் செயற்பாடு

ஹைக்கூக் கவிதைகள் சிலவற்றைத் தொகுத்து வகுப்பறையில் வாசித்துக் காட்டுவோம்.

## திறன் வளர் செயற்பாடு

நாங்கள் கண்ட காட்சியொன்றை அல்லது அனுபவத்தை மையமாகக் கொண்டு ஹைக்கூக் கவிதைகள் சிலவற்றை எழுதுவோம்.

# 7 தீவு மனிதன்

**பார்த்திபன்**

யாழ்ப்பாணத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட இவர் தற்போது ஜேர்மனியில் வசித்து வருகின்றார். புலம் பெயர் இலக்கியப்புலத்தில் முக்கிய ஆளுமைகளில் ஒருவராக விளங்கும் இவர், *தூண்டில்* என்ற முதலாவது புலம்பெயர் தமிழ்ச் சஞ்சிகையினை வெளியிட்டவராவார். நாவல், சிறுகதை, சஞ்சிகை ஆசிரியர் என்று விரியும் இவரது ஆளுமையின் அறுவடைகளாகப் பல சிறுகதைகளும், வித்தியாசப்படும் வித்தியாசங்கள், பாதி உறவுகள், ஆண்கள் விற்பனைக்கு, கனவை மிதித்தவன் முதலான நாவல்களும் வெளிவந்துள்ளன.



வேகமாகச் சுழலும் இன்றைய உலகம் தனிமனிதனது விருப்பத்தையும், தேவையையும் உணர்ந்து கொள்ளத் தவறிவிடுகின்றது. அரசியல், பொருளாதாரம், சமூகக் கூறுகள் அவனைத் தனித்து அலைய வைக்கின்றது. இச்சிறுகதை அவ்வாறு பாதிப்படைந்த மனிதனைப் பற்றிப் பேசுகிறது. இச்சிறுகதையின் கதை கூறும் பாணியும், கையாண்டுள்ள உத்திகளும் வாசகர்களுக்குப் புதிய வாசிப்பு அனுபவத்தையும் தேடலையும் ஏற்படுத்துகின்றன.

கீழ்வரும் தகவல்கள் சில வேளை உங்களுக்கு உதவக்கூடும்.

.... அன்ரனிக்கும், வத்சலாவுக்கும் எதிர்வீட்டு சிறீயையும், மஞ்சுளாவையும் கண்டால் பயம்.

..... சாந்தி விரும்பியதால் தயாபரன் திலக்சனையும் கூட்டிக்கொண்டு கனடா போய்விட்டான்.

.... சபாரத்தினமும், கனகேசுவரியும் ஒருவருடன் ஒருவர் பேசிக் கொள்ளாததிலிருந்து பரதனும் பத்மினியும் வெளியில் போவதில்லை.

நான் மீண்டும் எனது தீவுக்கே திருப்பியனுப்பப்பட்டுவிட்டேன்.

எனது தீவு நான்கு பக்கமும் சுவர்களால் சூழப்பட்டது. இந்தத் தீவில் என்னுடன் சேர்ந்து உடனிருந்தவை ஒரு புத்தக அலுமாரி, ஒரு கசற்றெக்கோடர், ஒரு செற்றி, ஒரு யன்னல் மட்டும்தான்.

யன்னலூடாக வெளியே எட்டிப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

வீடுகள், மரங்களுக்கு அப்பால் மேலே மிக உயரத்தில் வானம். அதன் நீல நிறம் எனக்குப் பிடிக்கும். அதனால்தான் எனது தீவின் சுவர்களை நீலமாக்கி வைத்திருக்கிறேன். தரைக்கும் நீலம் விரித்திருக்கிறேன். தவிர நாலு சேட்டு நீலக்கலரில் வைத்திருக்கிறேன்.

எனக்கு வானம் பிடிக்கும், அதன் நீலம் பிடிக்கும். பஞ்சு பஞ்சாகப் போகும் மேகங்கள் பிடிக்கும். எனக்கும் அவற்றுக்கும் நீண்ட தூரம். எந்த நெருக்கமோ, உறவோ இல்லை. எனினும் அவற்றை எனக்குப் பிடிக்கும் அல்லது அதனால்தான் பிடிக்குதோ என்னவோ.

கசற் றெக்கோடரிலிருந்து மஹாகவியின் ''சிறுநண்டு, மணல் மீது படம் ஒன்று கீறும்'' பாடல் மெல்லிதாக ஒலித்துக்கொண்டிருந்தது.

வானம் நீலமாகவே இருந்தது.
பார்த்துக்கொண்டேயிருந்தேன்.
அழுகை வந்தது.

எனது தீவில் மட்டும்தான் நான் அழுவேன். இந்தத் தீவில் இருக்கின்றபோது அடிக்கடி அழுகை வருகிறது. வெளியே போகின்ற போதெல்லாம் அணிந்து செல்கிற சிரிப்பைக் கழட்டி எறிந்துவிட்டுச் சுதந்திரமாக அழுவேன். யன்னலுக்கு இது வடிவாகத் தெரியும்.

இப்போதும் அழுதேன்.

முப்பத்தைந்து வருடங்கள் தாண்டியிருக்கிறேன்.

இதுவரையில் எனது தீவுதான் இடம் மாறியிருக்கிறது. தீவில் எதுவும் மாறவில்லை. என்னாலும் இங்கிருந்து நிரந்தரமாக வெளியே போக முடியவில்லை. எவ்வளவுதான் முயற்சித்தாலும் எனது தீவிற்கே மறுபடி மறுபடி என்னைத் திருப்பியனுப்பிவிடுகிறார்கள்.

நானும் என்னைப் பலவகைகளில் பலமாக்கி, எச்சரிக்கையாக்கி வைத்திருக்கிறேன். இருந்தும் என்ன... நான் தோற்றுப்போவதுதான் யதார்த்தம். இல்லையில்லை யதார்த்தம் தான் என்னைத் தோற்கடிக்கிறது.

அழுவதால் ஒன்றும் நடக்காது என்பது எனக்குத் தெரியாததல்ல. அதைவிட அழுவதும் எனக்குப் பிடிப்பதில்லை. அழுகை என்ன எனது விருப்பத்தை விசாரித்துக்கொண்டா வருகிறது. தானாக வருகிறது. இப்போது வருவதைப்போல. தொண்டை பாரமாகியிருந்தது.

அழுதேன்.
யன்னலால் வானத்தைப் பார்த்தபடி அழுதேன்.

எங்கள் வீட்டு சேவலுக்கும் பேட்டுக்கும் எப்போது சண்டை ஆரம்பித்தது என்று எனக்கு ஞாபகமில்லை. நான் அவதானித்த நாளிலிருந்து அவை ஒன்றையொன்று உர்ரென்று முகத்தைத் திருப்பி வைத்துக்கொண்டிருந்தன. குஞ்சுகள் தங்கள் பாட்டில். இத்தனைக்கும் அவை ஒரே கரப்புக்குள்தான் இருந்தன.

இந்த ஏனோதானோவைப் பார்க்கும்போதெல்லாம் எனக்குள் எழும் கேள்வி அந்தச் சின்னக் குஞ்சுகளை இந்த நிலமை பாதிக்காதா என்பதுதான்.

பாதித்தது.

எனக்கென்று ஒரு தீவை நான் முதன் முதலில் அமைத்துக்கொண்ட காலம் எனக்கு இன்னும் ஞாபகமிருக்கிறது.

அப்போது நான் சின்னப்பிள்ளை.

வெளியே போய் என்னைப்போலிருக்கும் மற்றவர்களுடன் சேர்ந்து கள்ளன் பொலிஸ் விளையாடினேன். போளை அடித்தேன். கோயில் கட்டி தேர் இழுத்தேன். இலந்தைப்பழம் பொறுக்கினேன். பிள்ளையார் பந்து எறிந்தேன்.

அவர்களின் பெற்றோர் அவர்களுடன் சேர்த்து எனக்கும் அன்பு காட்டி உபசரிப்புச் செய்தனர். அவர்கள் வாசலில் நான் தினமும் வரம் கேட்டேன்.

எனக்கும் சில விசயங்கள் பிடிபடும்வரை எல்லாம் உண்மையென்றுதான் நம்பினேன்.

எனது ஏக்கத்தை வைத்துப் பெரிசுகள் வேடிக்கை பார்ப்பதை உணர எனக்கு நீண்டகாலம் பிடிக்கவில்லை.

எங்கள் தோட்டப் பயிரை மட்டும் வெள்ளாடு மேய்ந்ததாக கதையளந்தார்கள். எங்கள் தோட்டத்திற்கு மட்டும் வேலியில்லையென்று சொல்லிச் சிரித்தார்கள்.

நான் கூசிக் குறுகிப்போனேன்.

இது அவர்களுக்கு மிகவும் பிடித்திருந்தது.

என்னைப் பிளந்து, கதை பிடுங்கி, தங்களுக்குத் தீனி தேடுவதற்காக என்னை அணைத்து தங்கள் கூட்டுக்குள் எடுத்து வைத்துக்கொண்டு அந்தச் சமூகப் பிராணிகள் ஓங்கி ஊளையிட்டன.

நான் சிதைந்துபோனேன்.

அழுகை வந்தது.

இந்தப் பிராணிகளுக்கு முன் அழக்கூடாது. இவற்றை ஏறெடுத்துப் பார்க்கக்கூடாது. இந்த உலகம் கெட்டது. இனி எனக்கென்று நானே ஒரு உலகம் செய்துகொள்ள வேண்டும். எனக்கே எனக்கென்று. அதற்குள் எவருக்கும் இடமில்லை.

பழைய சாமான்கள் போட்டு வைத்திருந்த சின்ன அறைக்குள் எனது கட்டிலைப் போட்டுக்கொண்டேன். கதவைச் சாத்தினேன். இரண்டு யன்னல்களில் ஒன்றைப் பூட்டி ஒன்றைத் திறந்து வைத்தேன்.
எனது தீவு தயார்.

வீடு பழைய காலச் சுண்ணாம்புக் கட்டிடம். அகலமான சுவர்கள். யன்னலில் ஏறி இருக்கலாம். ஏறியிருந்தேன். வேலிக்கப்பாலே என்னைப் போலிருந்தவர்கள் கிட்டியடித்துக் கொண்டிருந்தார்கள்.

போகவா? சிரிப்பார்கள். போகக்கூடாது. போக மாட்டேன். இவர்களை ஏன் நான் பாரக்கவேண்டும்.

மேலே பார்.

அழகான வானம்.

நீல நிறம்.

அதன் கீழாக வெண் பஞ்சு மேகங்கள் மிதந்து கொண்டிருந்தன. அந்த மேகங்கள் சில நேரங்களில் சில உருவங்களாக மாறும்.

இப்போது அவர்கள் போளையடிப்பார்களா? வாத்தியார் வீட்டு மாங்காய் மரத்திற்கு கல்லெறியப் போயிருப்பார்களா?

இந்த யோசனையேன் எனக்கு?

மேகங்கள் எவ்வளவு அழகு. இத்தனை வேகமாய் அவை எங்கே போகின்றன?

இப்போது அவர்கள் மாங்காயைக் கல்லில் குத்தி, உப்புத்தூள் போட்டுக் கொண்டிருப்பார்கள்.

ஏன் எனக்குஅழுகை வருகிறது?

கண்ணீர் கண்களை மறைக்க முயன்றாலும் நான் யன்னல்க் கம்பிகளைப் பிடித்தபடி மேலே ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டிருந்தேன்.

எனக்கு ஆகாயம் பிடித்தது. அதன் நீலம் மிகவும் பிடித்தது. ரசித்துப்பார்த்தேன்.

பார்த்துக்கொண்டேயிருந்தேன். பள்ளிக்கூடம் போய் வந்து மிச்ச நேரங்களில் எனது தீவுக்குள் வந்து பார்த்துக் கொண்டிருப்பேன்.

வெளியே எங்கும் போவதில்லை.

யாரையும் சந்திப்பதில்லை.

எனக்குத்தான் எனது தீவு இருக்கிறதே.

''...மனிதன் ஒரு சமூக விலங்கு. இந்தச் சமூக விலங்குகள் ஒரு கூட்டமாக வாழும். இந்த விலங்குகளுக்கு ஒன்றையொன்று தேவை. அவ்வப்போது இவை தமக்குள் கடித்துக் குதறினாலும் தமக்குள் அனுசரித்துப்போக வேண்டியது இயற்கை விதியாகும்...'' என்று ஆசிரியர் பாடசாலையில் படிப்பித்தார்.

எனக்கு முழுதாகப் புரியவில்லை. என்னை ஏன் இந்தச் சமூக விலங்குகள் தம்முடன் சேர்த்துக் கொள்வதில்லை? என்னைத் தேவையில்லையா?

நான் எனது தீவிலிருந்த நேரங்களிலெல்லாம் யோசித்துப் பார்த்தேன். எப்படியும் ஏனைய பிராணிகளுடன் கூட்டுச்சேர்ந்தால்தான் வாழமுடியும் என ஆசிரியர் நம்புகிறாரா?

எதற்கும் எனது காயங்கள் ஆறட்டும். இன்னொரு முறை முயற்சித்துப் பார்க்கலாம். அதுவரை இந்தத் தீவே எனக்குப் பாதுகாப்பு. எவ்வளவு சுதந்திரமான தீவு இது. சொல்லாலும், சிரிப்பாலும் காயப்படுத்துகிற எதிரிகள் இங்கு வர அனுமதியில்லை.



எனக்கா ஒன்றும் இல்லை.

எவ்வளவு பரந்த ஆகாயம். அதன் கீழ் தவழ்ந்து கொண்டிருக்கும் வெள்ளை மேகங்கள். எவ்வளவு அழகு.

கடல்கள் பல கடந்த நான் நாடு கடத்தப்படுவேன் என கொஞ்சமும் நினைத்துப் பார்த்திருக்கவில்லை.

புதிய இடம்.

புதிய மனிதர்கள்.

புதிய சமூகம், புதிய விலங்குகள்.

இங்கே நான் மற்றவர்களுடன் கூட்டாக வாழ முயற்சித்துப் பார்க்கலாம். சிலவேளைகளில் சரிவரக் கூடும். அப்படி நடந்தால் எவ்வளவு நல்லது. எனக்கென்று ஒரு தீவை நான் உருவாக்கத் தேவையில்லை. தனித்திருந்து வானம் பார்க்கத் தேவையில்லை.

என்னைப் புனரமைக்கும் முயற்சியில் முழுமையாக இறங்கினேன். என்னுடன் நானே சண்டைப்பிடித்துக் கொள்வதென்பது அவ்வளவு சுலபமானதில்லை. காயங்கள் விரைவில் காய்ந்துவிடுவதில்லை. அவற்றை மூடுவதற்காகச் சிரிப்புச் செய்து அணிந்து கொண்டேன்.

புது ஆரம்பம்.

அவனை நான் சந்தித்தது தற்செயல்தான். அப்போது அவன் கவிதைகளை மனதில் வைத்திருந்தான். எனக்குச் சொல்லிக்காட்டினான். எனக்கு உடனேயே கவிதைகளுடன் அவனையும் பிடித்துப் போயிற்று. அவ்வளவு சீக்கிரத்தில் அவனுக்கும் எனக்கும் நெருக்கம் வந்தது அதிசயம்தான். எனது ஏக்கமும் காயங்களும் அவனது பண்பும் இதற்குக் காரணமாயிருக்கலாம்.

நாங்கள் ஒன்றுசேர்ந்து நாங்கள் விரும்பும் உலகையும் மனிதர்களையும் எழுத்தால் செய்தோம். எமது உலகில் எமக்குப் பிடித்தமானவைகளுக்கு மட்டும் இடமளித்தோம்.

இந்த உலகம் சரிவருமா என்று எங்களை நாங்களே கேட்டு, கடைசியில் நாங்களாவது அங்கு போய்ச் சீவிப்போம் என்று உறுதியெடுத்தோம்.

நான் மிக மகிழ்ச்சியாக இருந்தேன். எனக்கென்று தனித் தீவு இனித் தேவையில்லை. வெளியே மனிதர்கள் இருக்கின்றார்கள். அவர்களுடன் நான் சேர்ந்துகொள்வேன். அவர்கள் என்னைச் சேர்த்துக்கொள்வார்கள்.

எனது காயங்கள் மாறாவிட்டாலும் மறந்துபோயின.

நாங்கள் ஒன்றாகக் கனவு கண்டோம். ஒன்றாக எழுதினோம். பிறகு அவன் தனக்கென ஒரு துணை தேடிக்கொண்டான். எனது உலகம் இன்னும் விரிந்தது. ஆதரவின் இன்னொரு பரிமாணம் கிடைத்தது. நான் மறுபடி ஒருமுறை குழந்தையாகினேன். என்ன ஆனந்தம்.

அவர்களுக்கு குழந்தை பிறந்தது.

இப்போது எனக்கு மூன்றாவது பரிமாணமும் கிடைத்தது.

எனக்குக் குழந்தைகள் பிடிக்கும். மிகவும் மிகவும் பிடிக்கும். குழந்தைகள் உலகத்தில் வாழ எனக்கு இன்னும் பிடிக்கும்.

குழந்தையை எனது முதுகில் ஏற்றி யானையாகினேன். அதுக்கு சிரிப்புக் காட்டக் குரங்கானேன். அடி வாங்கினேன். மூத்திரத்தால் நனைந்தேன். அது ஓடி வந்து என்னில் தாவி ஏறும்போது எனக்கு எல்லாம் மறந்துபோனது.

என்ன இனிமையான உலகம். அதிசயங்கள் என்னவெல்லாம் கொட்டிக் கிடக்கின்றன. இந்த மனிதர்களுடன் நான் கொண்டிருக்கும் உறவுக்கு எனக்குப் பெயர் தெரியவில்லை. அது ஏதோ ஒன்று.

எல்லாம் நிரந்தரமா என்ன?

நாங்கள் வேறு உலகம் போகின்றோம் என்று ஒருநாள் அவன் புதுக்கவிதை எழுதினான். நான் அதிர்ந்துபோனேன்.

அப்ப நாங்கள் குடியிருப்பதற்காகச் செய்த உலகம்? என்று கேட்டேன்.

இப்போது நாங்கள் இருப்பது உண்மை உலகம். இனி நாங்கள் போகப் போவதும் உண்மை உலகம்தான். உண்மையைப் புரிந்துகொள். யதார்த்தமாய் வாழப் பழகிக்கொள் என்றான்.

எனக்குப் புரியவில்லை.

உலகங்களைப் பற்றி ஒவ்வொருவரும் கொண்டிருக்கும் வரைவிலக்கணங்களை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

ஆனாலும் ஒன்று மட்டும் புரிந்தது. என்னைத் திரும்பவும் எனது தீவுக்கே திருப்பியனுப்பப்போகிறார்கள். என்னால் தாங்க முடியவில்லை. ஐயோ... வேண்டாம் தயவு செய்து வேண்டாம். யாரின் காலை நான் பிடித்துக் கெஞ்சலாம்.

எனக்கு உங்களைத் தவிர வேறு யாரையும் தெரியாது என்று இருந்தேன்.

உலகம் பெரியது. தவறு யாருடையது என்று கேட்டான்.

இவர்களுக்குத் தெரியுமா எனது தீவைப்பற்றி... அதன் தனிமைபற்றி... அதன் கொடுமை பற்றி. நான் எவ்வளவு கடுமையாகப் போராடி மிகவும் கஷ்டப்பட்டு எனது தீவிலிருந்து தப்பி வந்திருக்கிறேன். இப்போது மீண்டும் அங்கே கொண்டுபோய் விடப்போகிறார்கள். எனது உணர்வுகளுக்கு மொழியில்லை எனபதால்தான் அது யாருக்கும் கேட்கவில்லையா?

உண்மையில் கேட்கவில்லையா?

நாங்கள் போய் வருகின்றோம் என்று எல்லோருமாகப் போய்விட்டார்கள்.

குழந்தையும் போய்விட்டது. எனக்கு எல்லாமாக இருந்தது. அதுவும் போய்விட்டது. இப்போது யானையும் குரங்கும்தான் மிஞ்சிப்போயிருக்கின்றன.

நான் அவர்களை விளங்கிக்கொள்ள முயற்சித்தேன்.

அவர்கள் வாழ்தலை அவர்கள்தான் தீர்மானிக்கலாம்.

அவர்கள் குழந்தையை அவர்கள்தான் வைத்திருக்கலாம்.

அவர்கள் வானத்தில் பறந்த கையோடு நான் துண்டு துண்டாகச் சிதறிய நிலையில் எனது தீவுக்குத் திரும்ப வந்தேன்.

நான்கு பக்கமும் சுவர்களால் சூழப்பட்டது எனது தீவு. ஒரு செற்றி, ஒரு கசற் றெக்கோடர், ஒரு புத்தக அலுமாரி, ஒரு யன்னல் இவை மட்டும்தான் இப்போது என்னோடு.

செற்றியில் அமீரின் இமாஜினேசனை ஒலிக்க விட்டு, ஒரே ஒரு வழியாக வெளியே வெறித்துப்பார்தேன்.

எனக்கு மிகவும் பழகிப்போயிருந்த, இடையில் பலகாலம் பார்க்காமலிருந்த அதே ஆகாயம். அதே நீல நிறம்.

அழுகை வர வாய்விட்டு அழுதேன். தொடர்ந்து அழுதேன்.

ஏன் எனக்கு இப்படி?

நான் மட்டுமேன் தீவில்?
வாழ்தல் நீண்டது. நான் மறுபடி என்னைத் தயாரித்துக்கொள்ள வேண்டும்.

எனக்கான சொந்தத்தை நான் மறுபடி வரையறுத்துக்கொள்ள வேண்டும்.

வெளியே, மேலே... அதே ஆகாயம். அதன் நீல நிறம்...

அந்தக் குழந்தை இப்போது யார் முதுகில் ஏறும்? என்னைத் தேட மாட்டாதா?

அழுகை அழுகையாக வந்தது.

ஏன் திரும்பத் திரும்ப அதையே நினைக்க வேண்டும்.

இதோ பார். மேலே பார். எவ்வளவு பரந்த ஆகாயம். அதன் கீழாக மிதந்து கொண்டிருக்கும் மேகங்களின் அழகைப் பார்.

அவர்கள் இப்போது போன உலகத்தில் யாருடன் சேர்ந்து கூழ் குடிப்பார்கள்? யார் காயங்களுக்கு ஒத்தடம் கொடுப்பார்கள்?

அழுகை அழுகையாக வந்தது.

செற்றியில் விழுந்து அதை நனைத்தேன்.

எனது தனிமையை விரட்ட ஒரு புது வழி கண்டு பிடித்தேன். வேலை வேலை. வேலை.

தகரங்களையும் இரும்புத் தூண்களையும் பத்து மணித்தியாலத்திற்கு மேலாகச் சுமக்கையில் வேறு பாரங்கள் எப்படி நினைவு வரும்? வேலையை எனக்கான போதைமருந்தாக்கிக்கொண்டேன். வேலைத்தளம் வேறு உலகம். அங்கு மனிதர்களை

விடப் பொருட்கள்தான் அதிகம் இருந்தன. உணர்வுப் போராட்டங்கள் எதற்கும் இடமில்லை. சுகமான பாரங்கள்.

தனிமையில் இருக்கின்ற நேரங்களைக் குறைத்து என்னை எதிலாவது ஈடுப்படுத்துகையில் ஒருவித வெற்றி இருக்கத்தான் செய்கிறது.

அதைவிட இருக்கவே இருக்கிறது எனது தீவு.

இனிமேல் கவனமாயிருக்க வேண்டும். எனது தீவைவிட்டு வெளியே போகவேண்டி வரும்போது வெளி உலகோடு அவதானமாயிருக்க வேண்டும். மறுபடி என்னோடு உறவு சேர்த்து தங்களுக்குத் தேவையானபோது அறுத்துக் கொண்டுபோவதற்கு அல்லது யதார்த்தம் அப்படி என்று சொல்வதற்கு விடக் கூடாது. யாரோடும் சேர வேண்டாம். ஏமாற்றுவதற்குப் பலர் தயாராக இருக்கின்றார்கள். என்னைத் தங்கள் உலகத்தில் சேர்த்துக்கொண்டுவிட்டதாகக் கூறிக்கொண்டு சமயம் வரும் போது என்னை மறுபடி எனது தீவுக்கே திருப்பியனுப்பி விடுவார்கள். அவர்களைப் பொறுத்தவரையில் அது யதார்த்தம். எனக்கு மறுபடி மறுபடி செத்துவிடுவது.

வெளியே போகையில் எனது சிரிப்பை எடுத்து அணிந்துகொண்டேன். எனது ஒரே ஒரு கவசம் அதுதான்.

என்னைத் தனக்குப் பிடித்திருப்பதாக சொன்னாள் அவள்.

இப்படி எனக்குச் சொல்லப்பட்டது இது முதல் தடவை. நான் திகைத்துத் தான் போனேன். நிலைகுலைந்து போனேன். பலவீனமான இடங்களில் தான் தாக்குகிறார்கள்.

எனக்கு நிறைய அனுபவங்கள். எனது பழைய காயங்கள், எனது தீவு இவை களை நினைத்து இம்முறை நான் மிகவும் எச்சரிக்கையாக இருந்தேன். மறுபடி மறுபடி பிய்ந்து போனால் எப்படித் தாங்குவேன்.

அவள் விருப்பத்தை உறுதிப்படுத்திக் கொள்வதற்கு கால அவகாசம் தேவை. எப்படியாவது இழுத்தடிக்கவேண்டும். சும்மா சொல்லக் கூடாது சில விசயங்களில் வெளியுலகம் என்னைக் கெட்டிக்காரனாக்கியிருக்கிறது.

காலத்தை இழு இழு என்று இழுத்தேன்.

இப்போது எனக்கு அவனையும் பிடித்திருக்கிறது என்றாள்.

எவ்வளவுதான் நான் எச்சரிக்கையாக இருந்தாலும் கவலை வருவதைத் தடுக்கமுடியவில்லை. சகித்துக்கொண்டேன். இதென்ன புதிசா எனக்கு.

எனக்கு குழப்பமாயிருக்கு முடிவெடுக்க என்றாள்.

ஆக, ஒரு சிக்னல் தரப்படுகின்றது தனக்குத் தேர்வு இருப்பதாக. இம்முறை நான் தப்பிவிட்டேன். என்னை யாரும் எனது தீவுக்குத் திருப்பியனுப்ப முடியாது. ஏனென்றால் அங்கேதானே நான் இன்னும் இருக்கிறேன்.

சில காலம் செல்ல, அவள் தனது துணையுடன் வந்து எனக்கு அறிவுரை சொன்னாள். இப்பிடியே எத்தனை காலத்திற்குத் தனியே இருப்பதாக உத்தேசம் என்று.

நான் பதில் சொல்லவில்லை. மற்றவர்களுக்குப் புரியாத பதிலை நான் சொல்லி என்ன லாபம்.

எனது தீவுக்கு வந்து, யன்னலூடாக ஆகாயத்தைப் பார்த்தப்படி ஒரு பாட்டம் அழுது தீர்த்தேன்.

மறுபடி அவளைக் காணவேயில்லை.

தற்செயலாகத்தான் எனக்கும் அவர்களுக்கும் தொடர்பு ஏற்பட்டது. நான் எவ்வளவோ கவனமாக இருந்தும் இது நடந்துவிட்டது. இதுதான் எனது பலவீனம் என்றேனே. மனிதன் ஒரு சமூக விலங்கு என்று ஆசிரியர் சொல்லியிருக்கிறார்.

அவர்களுடன் பழகியதற்கு எனக்கு வழக்கம் போல் பெயர் தெரியவில்லை. ஆனால் அப்படி ஒன்றிவிட்டேன்.

எனது பலவீனம் எனக்கு இப்போது தெரிந்தது. நான் சிறிசாக இருந்த காலங்களில் எனக்குக் கிடைக்காததைத் தேடி மனம் அலைந்து கொண்டிருக்கிறது. எங்காவது கிடைத்துவிட்டால் அவ்வளவுதான். எனது பாதுகாப்பு, எச்சரிக்கையெல்லாம் தூளாகிவிடுகின்றன.

எனக்கு மறுபடி எனது தீவு மறந்து போயிற்று. அந்த யன்னல், நீல வானம், மேகங்கள்... எதுவும் தேவைப்படவில்லை.

என்னைச் சுற்றிலும் மனிதர்கள் இருப்பதுபோல் உணர்கையில் நான்

உண்மையில் மகிழ்ந்துதான் போனேன்.

அவர்கள் வீட்டிலும் குழந்தை வந்தது.

எனது உலகம் இன்னும் இன்னும் விரிந்தது.

நீண்டகாலத்தின் பின் நான் மீண்டும் யானையாகினேன். குரங்கானேன் ஆனந்தம்.

எப்போதாகிலும் யாராவது என்னிடம், உனக்கென்று சொந்தங்கள் வேண்டாமா என்று கேட்கையில் சிரிப்பு வந்தது. முட்டாள்களா நான் என்ன நான்கு பக்கமும் சுவர்களால் சூழப்பட்ட தீவிலா இருக்கிறேன். நன்றாகப் பாருங்கள். என்னைச் சுற்றிலும் எனக்கு ஆதரவு காட்டும் மனிதர்கள். என்னை நன்றாக அடையாளம் கண்டுக்கொள்ளும் குழந்தைகள்.

எனக்கும் சந்தோசத்திற்கும் அப்படி ஒரு உறவு. மறுபடி அது நிகழ்ந்தது.

எங்களுக்கு ஒன்றுமில்லை. ஆனால் நீ வந்து போவதைத் தெருவில் கிடக்கிற கண்கள் கவனித்து வாய்கள் தவறாகப் பேசலாம். அதனால்... என்று அவன் சொன்னபோது நான் திரும்பத் துண்டு துண்டாய் உடைந்துபோனேன். மீண்டும் உறவு அறுக்கப்பட்டது.

மீண்டும் ஒரு நிராகரிப்பு. என்னை எனது தீவுக்குத் திருப்பியனுப்புவதற்கான ஆயத்தம் ஆரம்பமாகிவிட்டது.

என்னால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. எனது மொழி, உணர்விலிருந்து வெளியில் வருவதற்கிடையில் செத்துப்போனது. மிகவும் சிரமப்பட்டு எனது சிரிப்பை எடுத்து அணிந்துக்கொண்டேன். எனது காயங்களை மூடிக் கட்ட என்னிடமிருக்கும் ஒரே ஒரு பான்டேஜ் அதுதான்.

தெருவில் கிடக்கின்ற வாய்களும் கண்களும் இத்தனை நாள் எங்கே போயிருந்தன, இன்றுவரை உங்களுக்கு என்ன செய்தன என்று நான் அவர்களைக் கேட்க முடியாது.

அவர்கள் குடும்பம், அவர்கள் வாழ்தல் பற்றி அவர்கள் மட்டுமே தீர்மானிக்கலாம்.

இதே தெருவில் இதே வாய்களுடன்தான் நாங்கள் கதைக்கவேண்டும்

என்பதும், இதே கண்களைதான் நாங்கள் பார்க்கவேண்டும் என்பதும்தான் யதார்த்தம் என்று அவர்கள் மேலதிக விளக்கம் தந்தார்கள்.

இப்போதுதான் தெரியவந்த யதார்த்தத்தின் முன் நான் திடீரென ஒன்றுமில்லாதவனாகிப் போனேன். என்னைச் சுற்றி இருந்தவர்கள் காணாமல் போனார்கள். மழலைச் சத்தம் நான் தொடமுடியாத நீண்ட தூரத்திற்குப் போய்விட்டது.

நான் மறுபடி எனது தீவுக்குத் திருப்பியனுப்பப்பட்டேன்.

இது நான்கு பக்கமும் சுவர்களால் சூழப்பட்ட எனது தீவு. ஒரு செற்றி, ஒரு புத்தக அலுமாரி, ஒரு கசற் றெக்கோடர் என்பவற்றுடன் ஒரு யன்னலும் இருந்தது. அதனருகில் வந்து வெளியே வெறித்துப் பார்க்கிறேன்.

அதே வானம். நீலமாய் மேகங்களால் மூடியும், மூடாமலும் இருக்கிறது.

எவ்வளவுதான் அடக்கி வைத்தாலும், துக்கம் தொண்டையையும் பிய்த்துக் கொண்டு வெளியில் வந்துவிட்டது. கண்கள் கன்னங்களை ஈரமாக்கினாலும் வெப்பமாயிருந்தது.

இது எனது தீவு. இங்கு நான் அழலாம். தாராளமாக அழலாம். சத்தம் போட்டு அழலாம். எந்தப் பொய்யான அனுதாபங்களும், பரிதாபங்களும் இங்கு என் மீது படமுடியாது.

நீ எங்களிலை ஓராள் என்று சொன்னார்களே...

மற. மற.

இதோ பார். ஆகாயம். அதன் நீல நிறத்தைப் பார். எவ்வளவு அழகு.

உனக்கும் எங்களுக்கும் இடைவெளி வரக்கூடாது என்றார்கள்.

மறந்துவிடு. தயவுசெய்து மறந்துவிடு. சொற்களுக்கெல்லாம் உயிர் இருக்க வேண்டுமென்றில்லை. நினைவுகள் என்னைப் பிய்த்து துண்டு துண்டாக்குவதைவிட வேறொன்றும் நடக்காது.

எல்லாவற்றையும் மறக்கத்தான் வேண்டும்.

அதுதானே யதார்த்தம்?

ஏனோ தெரியவில்லை போட்டோ அல்பம் எடுத்துப் பார்க்கவேண்டும். போலிருந்தது. பார்த்தேன்.

என்னைத் திரும்ப எனது தீவுக்கு திருப்பியனுப்பி வைத்தவர்கள், எனக்கு யதார்த்தம் விளக்கியவர்கள்... எல்லோரும் இருந்தார்கள். போட்டோவிலிருந்து இறங்கி வந்து என்னோடு விளையாடினார்கள். என் தலைமயிரைப் பிடித்து இழுத்தார்கள். தோள் மீது ஏறினார்கள். தூக்கச்சொல்லி கைகளை நீட்டினார்கள். என்னைத் தேடினார்கள்.

ஏன் மனசு பாரமாகிறது. ஏன் கண்ணீர் தொடர்ந்து வருகின்றது. எனக்கு இந்தத் தீவுதான் சாத்தியம் என்று மறுபடி நிரூபிக்கப்பட்டுவிட்டதே. பிறகேன் நான் அழவேண்டும்.

என்னை நான் மறுபடி புனரமைத்துக்கொள்ள வேண்டும். திரும்பச் சிரிப்பை அணிந்துகொள்ள வேண்டும். இனிமேலாவது மிக எச்சரிக்கையாயிருக்க வேண்டும். யாருடனும் நெருங்கிப் போகக்கூடாது.

ஆனால்...

எனது பலவீனம் எனக்குத் தெரியும். நான் சின்னவனாக இருந்தபோது எதற்கெல்லாம் ஏங்கினேனோ அது இப்போது கிடைத்தாலும் நான் விழுந்துவிடுவேன். எனது உறுதி, எச்சரிக்கை, பாதுகாப்பு எல்லாம் இருந்த இடம் தெரியாமல்போய்விடும்.

என்ன செய்ய?

இன்னொரு யதார்த்ததைச் சந்திக்கும்வரை இந்தத் தீவுதான் எனக்குச் சொந்தம்.

அல்பத்தை மூடி வைத்துவிட்டு திரும்ப யன்னலடிக்கு வந்து வெளியே பார்க்கிறேன். அந்த வானத்துக்கும் எனக்கும் நீண்ட தூரம். என்னோடு எந்தச் சம்பந்தமும் அதற்கில்லை. அதனால்தானோ என்னவோ என்னால் அந்த வானத்தை ரசிக்க முடிகிறது. தொடர்ந்து பார்த்துக்கொண்டிருக்க முடிகிறது...

... கண்ணீர் வரும் வரைக்கும்.

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. *கதையின் தொடக்கப்பகுதி பற்றிய உமது அபிப்பிராயத்தைக் கூறுக.*
2. *கதைத் தலைப்பின் பொருத்தப்பாட்டை எடுத்துக்காட்டுக.*
3. *கதை சொல்லியின் தனிமை இக்கதையில் வெளிப்படுமாற்றை விளக்குக.*
4. *கதை சொல்லி மகிழ்ந்திருந்த சந்தர்ப்பங்களை எடுத்துக்காட்டுக.*
5. *கதையில் கையாளப்பட்டுள்ள மொழிநடை, கதை எடுத்துரைப்பு முறை பற்றி விபரிக்குக.*

## குழுமச் செயற்பாடு

*புகலிடச் சிறுகதைகள் சிலவற்றைத் திரட்டி கலந்துரையாடுவோம்.*

## திறன் வளர் செயற்பாடு

*படைப்பாளியைக் கதைசொல்லியாகக் கொண்டு சிறுகதையொன்றினை எழுதுவோம்.*

# 8 தற்காலக் கவிதைகள்

யாப்பு விதிகளுக்கு அமைய கவிதைகள் ஆக்கப்பட வேண்டும் என்ற கட்டுப்பாடுகளை மீறி - கட்டற்ற கவிதைகள் எழுந்தன. இக்கட்டற்ற கவிதைகளையே புதுக்கவிதைகள் என்பர். பாடுபொருள், வடிவம் ஆகியவற்றில் புதுமைகளை நிறைத்துக்கொண்டு சிறகுவிரித்த புதுக்கவிதைகள் தமிழையும் நவீனப்படுத்தின.



## அ. நாளை புரட்சி

**பிரமிள் (1939 - 1997)**

பிரமிள் என்றழைக்கப்பட்ட தருமு சிவராமு திருகோணமலையில் பிறந்தார். தம்வாழ்நாளின் பெரும்பகுதியைச் சென்னையிலேயே கழித்தார். நவீன தமிழிலக்கியத்தில் பாரதிக்கும், புதுமைப்பித்தனுக்கும் பிறகு தோன்றிய ஒரு மகத்தான ஆளுமை பிரமிள் ஆவார். புதுக்கவிதை, விமர்சனம், சிறுகதை, நாடகம் முதலான இவரது படைப்பாற்றல் ஓர் உயர்ந்த வீச்சை அடைந்துள்ளது. படிமக் கவிஞர் என்றும் ஆன்மீகக் கவிஞர் என்றும் சிறப்பிக்கப்பட்ட இவரது கவித்துவம் தமிழ்க் கவிதை வரலாற்றில் உயர்ந்து நிற்கிறது.

*வெற்றி எப்பொழுதும் எல்லோருக்குமானதாக அமைந்து விடுவதில்லை. வறுமை வியாபித்திருக்கும் இவ்வுலகில் அது ஒரு கூட்டத்தைச் சார்ந்தே இருக்கிறது. இப்பின்னணியிலிருந்து எழும் கவிஞரின் குரலே இக்கவிதை.*

வயிற்றில் குடியிருந்து
வாழ்ந்து பசிக்கிறது
நிகழ்காலம்.
பசியில் அடைத்த
காதிலும் விழுகிறது
'நாளை புரட்சி
சரித்திரம் நமது கட்சி'
என்றென்
பசியைக் கூட
ஜீரணிக்க முயற்சிக்கும்
ஏப்பக் குரல்கள்
ஆனால்,
நாளைகள் ஒவ்வொன்றும்
நாள்தோறும் நேற்றாக
தன்பாட்டில் போகிறது
தான் தோன்றிச் சரித்திரம்.



## பொருளுணர் திறன் செயற்பாடு

1. *புரட்சி பற்றிய கவிஞரின் நோக்கு யாது?*

2. **வயிற்றில் குடியிருந்து**
   **வாழ்ந்து பசிக்கிறது**
   **நிகழ்காலம்**
   *என்ற அடிகள் ஏற்படுத்தும் உணர்ச்சியினை விபரிக்குக.*

3. *இக்கவிதை வெளிப்படுத்தும் செய்தி பற்றிய உமது கருத்துக்களை எழுதுக.*

## ஆ. இருப்பு

### திருமாவளவன்

**யாழ்ப்பாணத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட திருமாவளவனின் இயற்பெயர் கனகசிங்கம் கருணாகரன் என்பதாகும். இவர் தற்போது புலம்பெயர்ந்து கனடாவில் வசித்து வருகின்றார். ஆரம்ப காலத்தில் கட்டடத் தொழில்நுட்ப மேற்பார் வையாளராகப் பணி புரிந்தார். யுத்தத்தை தின்போம், பனிவயல் உழவு, அஃதே இரவு, அஃதே பகல் முதலியன இவரது கவிதைத் தொகுப்புக்களாகும்.**

*''மீன் தொட்டி பலரது பார்வையில் வசீகரமாகவே தெரிகின்றது. பல்வேறு வண்ணங்களிலும், வடிவங்களிலும் வாழும் மீன்கள் சொகுசு வாழ்க்கை வாழ்வதாகத்தான் பலருக்கும் தெரிகிறது. கவிஞனுக்கு மட்டும்தான் அந்த மீன்தொட்டி சொகுசுச் சிறையாகத் தெரிகின்றது.''*

சிறு தொட்டி
சுவர் நான்கும் கண்ணாடி
நஞ்சு நீக்கி வடிகட்டி நிரப்பிய நீர்
நீரிடை மிதக்கும் செயற்கைத் தாவரங்கள்
மட்டுப்படுத்தப்பட்ட மின் வெளிச்சம்
மின் சூடாக்கியின் கணகணப்பு
பதனிட்டு தயார் செய்யப்பட்ட உணவு
நேரம் தவறாத உபசரிப்பு
சொகுசு சிறைக்குள்ளிருந்து
தன் வாழ்வின் துயரைப் பாடுகிறது
மீன் குஞ்சு.



## பொருளுணர் திறன் செயற்பாடு

1. கவிதையின் தலைப்பு அதன் கருத்தோடு எவ்வாறு பொருந்துகின்றது?

2. கவிதையை வாசிக்கும்போது உமக்கு ஏற்படும் உணர்வு அல்லது அனுபவம் யாதெனக் கூறுக.

3. 'சொகுசு சிறைக்குள்ளிருந்து
   தன் வாழ்வின் துயரைப் பாடுகிறது
   மீன் குஞ்சு'
   இவ்வரிகள் மூலம் கவிஞர் எதனைக் கூற முற்படுகிறார்?

# இ. தூர்

### நா. முத்துகுமார்

இவர் தென்னிந்தியாவின் காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவர். சிறுவயது முதல் வாசிப்பில் ஈடுபாடு காட்டியமை தொடர்பாகப் பரவசம் கொள்கிறார். சினிமாத் துறையில் கொண்ட ஈடுபாடு காரணமாக இயக்குனர் பாலுமகேந்திராவிடம் நான்கு ஆண்டுகள் வரை பணியாற்றினார். திரைப்படப்பாடலாசிரியராகத் தன் பயணத்தை ஆரம்பித்து இதுவரை 700 பாடல்கள் வரை எழுதியுள்ளார். **பட்டாம்பூச்சி விற்பவன், நியூட்டனின் மூன்றாம் விதி, கண்பேசும் வார்த்தைகள், பாலகாண்டம், என்னைச் சந்திக்க கனவில் வராதே** என்பன இவரது கவிதைத் தொகுப்புக்களாகும்.

கிணறுகளில் தவறி விழும் பொருட்கள் மற்றும் சேறு, பாசி முதலியவற்றை வெளியே எடுத்துத் கிணற்றைத் துப்புரவு செய்வதையே தூர் எடுத்தல் என்று கூறுவர். தூர் எடுக்கும் நிகழ்ச்சியை விபரிப்பதனூடாக அம்மாமாரின் அடி மனதின் வலியை அறிந்து கொள்ளாத அப்பாக்களைப் பற்றிச் சிந்திக்க வைக்கிறது பட்டாம்பூச்சி விற்பவன் தொகுப்பிலுள்ள இக்கவிதை.

வேப்பம் பூ மிதக்கும்
எங்கள் வீட்டுக் கிணற்றில்
தூர் வாரும் உற்சவம்
வருடத்திற்கொரு முறை
விசேஷமாய் நடக்கும்



ஆழ் நீருக்குள்
அப்பா முங்க முங்க
அதிசயங்கள் மேலே வரும்

கொட்டாங்குச்சி, கோலி,
கரண்டி,
கட்டையோடு உள்விழுந்த
துருப்பிடித்த ராட்டினம்
வேலைக்காரி திருடியதாய்
சந்தேகப்பட்ட வெள்ளி டம்ளர்,
சேற்றிற்குள் கிளறி
எடுப்போம் நிறையவே

சேறுடா...சேறுடாவென
அம்மா அதட்டுவாள்
என்றாலும்
சந்தோஷம் கலைக்க
யாருக்கு மனம் வரும்?

பகை வென்ற வீரனாய்
தலைநீர் சொட்டச் சொட்ட
அப்பா மேல் வருவார்

இன்று வரை அம்மா
கதவுகளின் பின்னிருந்துதான்
அப்பாவோடு பேசுகிறாள்.

கடைசிவரை அப்பாவும்
மறந்தே போனார்
மனசுக்குள் தூரெடுக்க.

**பொருளுணர் திறன் செயற்பாடு**

1. *தூர்வாரும் நிகழ்ச்சியை உற்சவம் என்று விபரிப்பதில் பொதிந்துள்ள கருத்துக்களைத் தெளிவுபடுத்துக.*

2. *வேலைக்காரி திருடியதாய் சந்தேகிக்கப்பட்ட வெள்ளி டம்ளர் என்பதினூடாக வேலைக்காரி பற்றிய விம்பம் தகர்க்கப்படுமாற்றினைத் தெளிவுறுத்துக.*

3. *இக்கவிதையின் இறுதி வரிகள் உமக்கு ஏற்படுத்தும் உணர்வுகளை விளக்குக.*

## ஈ. ஒரு கதை

**கிஷ்வர் நஹீத்**

இவர் மிக முக்கியமான பாகிஸ்தான் கவிஞர்களில் ஒருவர். அரசாங்கப் பதவி வகித்ததுடன் இவர் வானொலியில் அறிவிப்பாளராகப் பணியாற்றி வந்தார். பல சஞ்சிகைகளுக்கு ஆசிரியராக விளங்கிய இவர் கவிதைத் தொகுப்புகள் உட்படப் பல நூல்களை இயற்றியுள்ளார். பெண்களின் உரிமைகளுக்காகப் போராடியவர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

*பெண்கள் மீதான அடக்குமுறை காலந்தோறும் நடைபெற்றுக் கொண்டே வருகின்றது. இப்பொழுதும் அது எப்படியெல்லாம் நிகழ்கிறது என்பதைக் கவிஞர் தனக்கேயுரிய பாணியில் விபரிக்கின்றார்.*



ஒரு ஆடுகுதிரையின் மீது
ஒரு குழந்தை ஆடுகிறது
அது மரக்குதிரை
குழந்தையின் ஸ்பரிசம் அறியாதது
குழந்தை குதிரையை அடிக்கிறான்
தனது திறமையைக் கண்டு
தன்னையே மெச்சிக்கொள்கிறான்
அவன் வளர்ந்து பெரியவனாகிறான்
மரக்குதிரையில் மீண்டும் சவாரிசெய்கிறான்
ஒரு சடங்கின் மூலம்
தன் இளமையை அறிவிக்கிறான்
இரவு கழிந்ததும்
குதிரை உருமாறுகிறது
குதிரையை அடிப்பவன்
தன்னைதானே மெச்சிக்கொள்கிறவன்
மாறாமலே இருக்கிறான்
எஜமானனாக,
சவாரி செய்பவனாக,
கணவனாக.

### பொருளுணர் திறன் செயற்பாடு

1. குழந்தையின் செயல்கள் பற்றிய சித்திரிப்பு இக்கவிதையில் முக்கியத்துவம் பெறுமாற்றினைத் தெளிவுபடுத்துக.

2. இக்கவிதையின் எடுத்துரைப்பு முறையில் காணத்தகும் நயத்தினை எடுத்துக் காட்டுக.

### குழுமச் செயற்பாடு

பத்திரிகைகள், சஞ்சிகைகள், நூல்களில் இருந்து புதுக்கவிதைகள் பற்றிய அறிமுகக் குறிப்புகள், திறனாய்வுகள் என்பவற்றைச் சேகரித்து ஒப்படையொன்று தயாரிப்போம்.

### திறன் வளர் செயற்பாடு

பின்வரும் படங்களைப் பார்க்கும் போது ஏற்படும் உணர்வுகளை கவிதையாக்குவோம்.







# 9 பெருமரமாகிப் போனதொரு வாழ்வு

**அஜயன் பாலா**

தமிழகத்தில் சென்னையில் வசித்து வரும் இவர் 'மயில்வாகனன்' என்ற சிறுகதைத் தொகுப்பை வெளியிட்டுள்ளார். 'பை சைக்கிள் தீவ்ஸ்' என்ற திரைக் கதையையும், **மார்லன் பிராண்டோ** எனும் ஆவணப் படத்தின் பிரதியையும் மொழி பெயர்த்துள்ளார். உலக சினிமா வரலாறு, மௌன யுகம் ஆகிய நூல்களுக்காகப் பரிசு பெற்றவராவார்.



இக்கட்டுரை 2014இல் இயற்கை எய்திய சினிமாச் சிற்பி பாலுமகேந்திராவின் ஆளுமையை வெளிப்படுத்துகின்றது. கிழக்கிலங்கையின் மட்டக்களப்பு அமிர்த கழியில் பிறந்த இவர் விஞ்ஞான பட்டதாரியுமாவார். திரைப்படக் கல்லூரியில் ஒளிப்பதிவு பற்றிக் கற்று, தங்கப்பதக்கம் பெற்றுச் சித்தியடைந்தார். ஒளிப்பதிவாளர், இயக்குனர், தயாரிப்பாளர், சினிமாத்துறை சார்ந்த விரிவுரையாளர் என்று விரியும் இவரது பன்முக ஆளுமையை இக்கட்டுரை விபரிக்கின்றது.

ஒரு மகா கலைஞனின் முழுமையான இறப்பு பாலுமகேந்திரா அவர்களுக்கு வாய்த்துள்ளது என்று சொன்னால் அது சாதாரண சொல்லல்ல. காலத்தினூடே இடையீடாக வெட்டி எழுதப்படும் ஒரு அமரச்சொல்.

அவரது ஆதர்சனமான அழகு அவரது இறப்பிலும் தலைமாட்டில் நின்றெரியும் காலதீபத்தின் அமர விளக்காக எரிந்து கொண்டிருக்கிறது. தனிப்பட்ட வாழ்க்கையைத் தவிர்த்து ஒரு கலைஞனாகக் கனவுகளை முழுமையாக நிறைவேற்றியவனது பயணம் அவருடையது. அவர் கடைசிவரை அவருடைய வேலைகள் அனைத்தையும் தனி ஒருவராகவே தனி ஆளுமையாகவே செய்திருக்கிறார். பாலுமகேந்திரா சினிமாப் பட்டறை, திரைப்படத் தயாரிப்பு, இயக்கம் இவற்றோடு விழாக்களில் பங்கெடுப்பது, வெளிவிவகாரங்கள் இவை எவற்றுக்கும் அவர் யாரையும் அடுத்த நிலையில் பிரதானமாக வைத்துக்கொண்டதில்லை. இதற்கு நம்பிக்கை ஒரு காரணம் அல்ல. மாறாக அவர் தன் காரியங்களைத் தானே நேரடியாகச் செய்யவிரும்புவார். பாலுமகேந்திரா சினி மாப் பட்டறைக்குக் கூட அவர் நடிப்புத் தவிர்த்து இதர வகுப்புக்களுக்குக் கூட வேறு ஆசிரியர்களை நியமிக்கவில்லை. கிட்டத்தட்ட தனி மனிதனாகவே அவர் தன்னையும் தான் சார்ந்த செயற்பாடுகளையும் நிர்வகித்துக் கொண்டார். 74 வயதில் ஒருவர் அப்படி நடந்து கொண்டது அக் காரியங்களுக்குள் அவர் கொண்டிருந்த ஈடுபாடு, பிடிப்பு இவற்றைத் தாண்டி அக்காரியங்கள் அவர் தனது இறுதிநாளுக்கு முன்பாக தான் நிறைவேற்ற வேண்டிய கடமைகள் என்ற உணர்வோடு செயற்பட்டமைதான் அதற்கு காரணமாக இருந்து வந்திருக்கிறது.

குரசேவாவின் 'இகிரு' படத்தின் நாயகன் போலத்தான் அவருடைய தீவிரம் இருந்து வந்தது. அப்படத்தில் நாயகன் 'வாட்டனபே'. வயது முதிர்ந்த நகராட்சி அதிகாரி. இறப்பு நெருங்கிவிட்டதொரு தருணத்தில் இதுவரை வாழ்ந்த வாழ்க்கைக்கு ஒரு அர்த்தம் உண்டாக்கிவிடும் மனப்பிரயாசையுடன் அவர் உழன்று கொண்டிருப்பார். இறுதியில் ஏழை மக்கள் வசிக்கும் பகுதியில் சிறுவர்களுக்கான பூங்கா ஒன்றை நிர்மாணித்து விடுவதென முடிவெடுத்து அக்காரியத்தில் தன்னை முழுவதுமாக அர்ப்பணித்துக்கொள்வார்.

கிட்டத்தட்ட இறுதி நாட்களில் பாலுமகேந்திராவின் முகமும் 'இகிரு'வின் வாட்டன பேவினுடையைதைப் போலவே மாறி இருந்தது. சினிமாப் பட்டறை துவங்கிய பின்பும் கூட அவர் முகம் தீவிரத்தைத் தேடியது. அந்தத் தீவிரம் என்னவாக இருக்கும்? மனிதர் இந்த வயதில் எதற்காக பிரயாசைப்படுகிறார்? என்ற கேள்விகள் அடிக்கடி எழும். நானும் கூட இரண்டு மாதங்களுக்கு முன் சிட்டி சென்டரில் நடந்த திரைப்பட விழாவில் வி.ஐ.பி. க்கான லவுஞ்சில் நிதானமாக அவருடன் பேச ஒரு சந்தர்ப்பம் கிடைத்தபோது அவரது இன்னும் நிறைவேற்ற முடியாத கனவாகச் சிலவற்றைச் சொன்னார். அதில் ஒன்று நூறு பேரிடம் 50,000 ரூபாய் வாங்கி கூட்டுறவு முறையில் நல்ல படம் எடுப்பது. எந்த சமரசமும் இல்லாத அவரவர் விருப்பத்தோடு

கூடிய சுதந்திர சினிமாவாக இருக்க வேண்டும். உன்னைப் போன்றவர்கள் இனிக் காத்திருக்கவேண்டிய அவசியமில்லை என்றார். ஆனால் அடுத்த சில நாட்கள் கழித்து அவரது ‘தலைமுறைகள்’ படம் வெளியான போது அவர் கனவு வெறும் சினிமா சார்ந்தும் கூட என்பதை அறிந்து கொண்டேன்.

இகிரு வில் நாயகன் வாட்டனபே. இறுதியில் அப்படி ஒரு பூங்காவை உண்டாக்கிப் பனிகொட்டும் நள்ளிரவில் அந்த ஊஞ்சலில் மகிழ்ச்சியுடன் ஆடியபடி திறப்பு விழாவுக்கு முந்தின நாள் நிம்மதியாக இறந்து போவான்.

பாலுமகேந்திராவின் கடைசிச் சுவாசம் கூட அப்படியாகத்தான் பிரிந்தது. கிட்டத்தட்ட வாட்டனபேவினுடையதைப் போல அமைந்தது. அவர் சினிமாப் பட்டறையில் உடல் கிடத்தப்பட்டிருக்க அங்கு பயிலும் மாணவர்கள் அவரது உடலைச் சுற்றி பாதுகாப்புச்சங்கிலியாக கைகோத்து நின்ற காட்சி அவரது லட்சியக் கனவின் உருவகம் போலவே இருந்தது.

அவரது இறுதி ஊர்வலமும் அவர் மயான மேடையில் சாம்பலாகிய பின்னும் அகலமறுத்த கூட்டமும் அதற்கு சான்று. அனைவருமே அவரோடு நேரடியாகவோ மறைமுகமாகவோ பிணைக்கப்பட்டிருந்தனர். எது எல்லோருக்குள்ளும் அவரை நோக்கி ஈர்க்க வைத்தது என்று யோசித்த போது தமிழ்த் தலைமுறைக்கு அவர் துவக்கி வைத்த காட்சி வழிப் பாதையும், காட்சியியல் தொடர்பான மெனக்கெடலும், சிந்தனையும், ஆரோக்கியமான கலைச் சூழலுக்கான சமரசமில்லாத மிடுக்கான வாழ்வும், சினிமாக் காரர்களின் சொகுசையும், பவிசையும், பணத்தையும் அனாயாசமாகச் சுண்டு விரலால் ஒதுக்கிய திமிரும்தான் என்பதை உணரமுடிந்ததுது.

எழுபதுகளின் இறுதியில் தமிழ்ச் சூழல் கொஞ்சம் முகத்துக்குச் சோப்பு போட்டு கழுவிக்கொண்டு கண்ணாடி பார்த்துத் தன்னைத் திருத்திக்கொண்ட போது பாலுமகேந்திரா புதிய சட்டங்களின் மூலமாக அசையும் பிம்பங்களுக்குள் ஒரு கவித்துவத்தை நிகழ்த்தினார். முன்னதாக தேவராஜ், மோகன், பாரதிராஜா போன்றோருடைய படி நிலை மாற்றங்கள் தமிழரின் ரசனையை முழுவதுமாக மாற்றிக்கொண்டிருந்த உன்னதமான தருணம் அது. சினிமாப் பாணியில் சொன்னால் தமிழ்ச் சினிமாவுக்கு ஒரு சன்ரைஸ் ஷாட் நிகழ்ந்து கொண்டிருந்த நிமிடங்கள். அதுவரை வசனங்களையும், கதாபாத்திரங்களையும் மட்டுமே நம்பிய தமிழ்ச் சினிமா பின்புலன்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துக் கொண்டிருந்த நேரம்.

இத்தனைக்கும் நிவாஸ் போன்றவர்கள் **‘பதினாறு வயதினிலே’, ‘‘கிழக்கே போகும் ரயில்’’** போன்ற பாரதிராஜாவின் படங்கள் மூலமாக செறிவான கட்டமைவை காமிரா கோணங்களில் நிகழ்த்திக்கொண்டிருந்தாலும். இயற்கையின் நுண்மையை சூரிய பிரமையில் பிரதிபலிக்கும் மனிதர்களைக் கடந்த இதர உயிர்களின் அழகை அதன்

இயல்போடு மிகைப்படாமல் சட்டகத்தினுள் உயிர்ப்பூட்டிய கலைஞன் பாலுமகேந்திரா ஒருவரே. **'அழியாத கோலங்களின் 'பூவண்ணம் போல நெஞ்சம்'** பாடலில் ஷோபா, பிரதாப் போத்தன் நடந்து வரும் காட்சிகளில் அவர்களைக் காட்டிலும் உற்சாகமாகக் காற்றுக்குத் தலையாட்டும் ஆற்றோரம் வளர்ந்த நாணல்களின் நெஞ்சை அள்ளும் அழகு தமிழ்ச் சினிமாவின் கவித்துவங்களுக்குத் துவக்கப் புள்ளி மட்டுமல்லாமல் படத்தில் இடம்பெற்ற ஓடை, வயல்வெளி, மணற்பரப்பு, பாலம், மரங்கள், நாணல், புதர்கள் ஆகியவற்றையும் பாத்திரங்களாக மாறி தமிழின் நிலப்பரப்புக்கான சினிமாவாக அழியாத கோலங்கள் உயிர்பெற்றிருந்தது. ஒளிப்பதிவில் பேக்லைட் எனப்படும் உத்தியை இதுவரை இவரைப்போல இயற்கை ஒளியில் வெகுசிறப்பாகக் கையாண்டவர்கள் வேறு எவரும் இல்லை. இவருக்கு அடுத்தபடியாக அதில் கைதேர்ந்தவராக அசோக்குமார் தனிச்சிறப்புக் கொண்டவராக இருந்தாலும், முதன்முதலாகப் பொன்னிறக் கேசங்களை இயற்கையான பின் ஒளியில் நிகழ்த்திக் காட்டிய சினிமாக் கவித்துவம் அவருடையது. அவருக்குப் பிறகு வந்தவர்களில் இயற்கை ஒளியைச் செறிவாகத் திரைச் சட்டகத்தில் உள் வாங்கிக் கொண்டவர்களுள் அசோக்குமார், ராஜீவ் மேனன், மது அம்பாட் போன்றவர்கள் குறிப்பிடத்தகுந்த உயரங்களைக் கண்டிருப்பினும், அவர் காண்பித்த பச்சை நிறத்தை வேறு எவரும் காண்பிக்கவில்லை. இதற்காக வண்ணக்கலவை செய்யும் கிரேடிங்கில் அக்காலத்தில் எந்தக் கம்பியூட்டர் உபகரணங்களும் இல்லாமல் கைகளால் ஒவ்வொரு காட்சியாகச் சரிசெய்து வந்த காலங்களில் ஆங்கிலத்தில் லில்லி எனப்படும் புதிய உத்தியை இதற்காக அவர் பயன்படுத்தி வந்துள்ளார்.

மேலும், பாத்திரங்களின் உடலில் காணப்படும் மவுனம் வேறு எவருக்கும் சித்திக்கவில்லை. அவர் வெறும் ஒளிப்பதிவாளர் என்பதைக் கடந்து இயக்குனராகவும் தொழில் நுட்ப மேதைமையைக் கடந்த ஒரு அகதரிசனம் அவருக்குள் இருந்ததுவும் ஒரு காரணம்.

இதே போல சில் ஹவுட் ஷாட்டுக்கு முதன் முதலாகக் கைதட்டல் வாங்கியதும் அவரது ஒளிப்பதிவு மூலமாகத்தான். இதற்கு முன் கறுப்பு - வெள்ளையில் சில் ஹவுட் ஷாட்டுக்கள் இடம்பெற்றிருப்பினும், அவரது படங்கள் மூலம்தான் அவை அழகியலின் கூறுகளுடன் பாமர ரசிகனும் கைதட்டுமளவிற்கு ரசனையை மேம்படுத்தியிருக்கிறார்.

நாயகன் என்றாலே அவன் சிவப்பாக இருக்கவேண்டும் கறுப்பாக இருந்தால் வசீகரமாக அல்லது எல்லோரையும் ஈர்க்கும் தன்மை கொண்டவனாக இருக்க வேண்டும் என்பதையெல்லாம் பிரதாப் போத்தனின் சோடாப்புட்டிக் கண்ணாடி மூலமாக உடைத்தவர். அழியாத கோலங்களில் கோமாளி போன்ற பிரதாப்பின் தோற்றம் துவக்கத்தில் அனைவருக்கும் புதிராகத்தான் இருந்திருக்கக்கூடும். ஆனால் அதே தோற்றம் 'மூடுபனி' திரைப்படத்தில் கொலைகாரனாக மாறிய தருணத்தில் அனைவரும் அதிர்ந்து போனதும் உண்மை.

உண்மையில் பாலுமகேந்திரா என்ற பெயர் மக்கள் மத்தியில் சென்று சேர்ந்ததற்கு மூடுபனிதான் ஒரு முக்கிய காரணம். த்ரில்லர் என்பதைத் தாண்டி தமிழில் அசலான பிலிம் நோயர் வகைப்படமாக அது வெளிப்பட்டிருந்தது.

படத்தில் பாத்திரத்தின் பார்வைக் கோணத்தில் கேமரா ஒவ்வொரு அறையாகத் தேடிப் பார்க்கும். அந்தக் குறிப்பிட்ட ஷாட் தமிழ்ச் சினிமாவின் ரசனையை ஒரு அங்குலத்துக்கு உயர்த்தியது மட்டுமல்லாமல், பாலுமகேந்திரா என்ற நவீன தொழில் நுட்பக் கலைஞனை மக்கள் மத்தியில் உயர்ந்த இடத்துக்கு அழைத்துச் சென்றது.

மேற்சொன்ன படங்களில் பாடல் காட்சிகளின் படமாக்கப்பட்ட விதமும் அவரது தனித்த அடையாளம். அதுவரை இசைக்கேற்ப அதன் தாளத்திற்கேற்ப கெமரா முன் நடிக - நடிகையர் நடனம் ஆடிக்கொண்டிருந்ததை அபத்தமாக ஒதுக்கித் தள்ளி சாதாரணமாக நடந்து வருவது, நாயகி நாயகன் சிரிப்பது, பாடல் வரிகளைப் பாடாமல் அல்லது வரிகளுக்குத் தொடர்பில்லாமல் காதலின் மகிழ்வூட்டும் தருணத்தில் லயித்துக் கிடப்பது போன்ற காட்சிகளைத் தொகுத்துக் கொடுப்பது ஆகியவையும் அவரது காட்சியியல் தனித்துவங்கள்.

அதேபோல அவரது படங்களுக்கென, அவரது கதாபாத்திரங்களுக்கென பிரத்யேக உடைகளை அவர் வரித்துக்கொண்டார். தலையை விரித்துப் போட்ட நிலையில் நாயகியைத் திரையில் காண்பிப்பது அபசகுனமாகக் கருதப்பட்ட காலத்தில் முதன்முதலாக தலையைப் பின்னாமல் அல்லது ஜோடனை எதுவும் இல்லாமல் ஷோபாவை ஒரு புடவை ஒரு குங்குமப்பொட்டு ஆகியவற்றின் மூலம் தமிழ் அடையாளம் சார்ந்த அழகியலைக்கண்டு பிடித்தவர். மூன்றாம் பிறைத் திரைப்படத்தில் 'பொன் மேனி உருகுதே' பாடல் காட்சியில் இருவருக்குமான உடைத் தேர்வு இன்று வரை அப்பாடலைத் தமிழின் சிறந்த பதிவாகக் காப்பாற்றித் தந்துள்ளது என்றால் மிகையில்லை.

எந்தத் தருணத்திலும், கதையின் வேகத்தைக் கூட்டுவதற்காக அவர் கதை நிகழும் இடத்தைக் காண்பிக்காமல் விட்டதில்லை. அது ஒரு அலுவலகமாக இருந்தால் அதன் முகப்பு அல்லது பெயர்ப்பலகை காண்பிக்கப்படும். வீடாக இருந்தால் வாசல் கதவு இதெல்லாம் காண்பிக்கப்பட்டபின்தான் வீட்டுக்குள் நுழைவார். படம் பார்ப்பவனுக்குள் கதையின் நிகழ்வு முழுமையாக இருக்க வேண்டுமானால் அவனுக்குள் நிலவியல் ரீதியான புரிதல்கள் அவசியம் வேண்டும் என்பார். அவர் படைப்பின் ஒழுங்குக்கு இவை மிக முக்கியமாகப் பங்காற்றி வந்துள்ளன.

அவரது அனைத்துத் திரைக்கதைகளின் முடிவும் அவரது இன்னொரு தனித்துவம், அவர் ஒருபோதும் இறுதிக்காட்சியில் கதாபாத்திரங்களைப் பேசவிட்டதில்லை. இரண்டு முரண்களைக் காண்பித்துப் பார்வையாளனின் மனதில்

ஆழமான பாதிப்பை உருவாக்குவதில் மட்டுமே அவர் தீவிர கவனம் செலுத்துவார். அழியாத கோலங்களின் இறுதிக் காட்சி போல நம்மைப் பெரும் துக்கத்தில் வீழ்த்தும் காட்சி வேறு எதுவும் இருக்க முடியாது. **மூன்றாம்பிறை, மறுபடியும், யாத்ரா (மலையாளம்) வீடு, சந்தியாராகம்** என அவரது திரைக்கதைகளின் முடிவு பெரும் காவியத்தன்மைக்குள் செல்வதாகவே இருந்து வந்துள்ளது. காட்சி ரீதியான பெரும் அழகியல் தன்மை கொண்ட யாத்ராவின் இறுதிக்காட்சி அவரது மேதைமையின் உச்சம் எனச் சொல்லலாம்.

**'நீங்கள் கேட்டவை'** அவருக்கான வகைமாதிரியான படம் அல்ல; என்றாலும் அதன் மூலம் பானுசந்தர், அர்ச்சனா என இரண்டு நட்சத்திரங்களின் உதயத்திற்கு அத்திரைப்படம் தன் கடமையை நிறைவேற்றியது.

**'ஓ வசந்த ராஜா'** பாடல் காட்சி மூலம் கங்கை கொண்ட சோழபுரம் கோயிலை கேமரா மூலம் இரண்டாவது முறையாகக் கட்டியமைத்த ராஜேந்திர சோழன் அவர். கருத்த அழகியைத் தமிழ் முதன் முதலாகப் பார்த்து ஆச்சரியப்பட்டது. வெள்ளைத் தோல்தான் அழகு என்ற தமிழரின் பொதுப்புத்தியில் கரடுதட்டிப்போன ரசனையைத் தடம் மாற்றிக் கருத்த பெண்களின் கவர்ச்சியான அழகை மாற்றி நிறுவியவர்.

திரைப்படத்துறையின் இத்தகைய சாதனைகள் மட்டுமே அவரது புகழுக்குக் காரணமில்லை. மாறாக அவர் திரைப்படம் தாண்டி அவரிடமிருந்த சில திரைப் பண்புகள்தான் அவரது நிலைத்த புகழுக்கு காரணம்.

வணிக சினிமாவுக்காக எந்தச் சமரசமும் செய்து கொள்ளாதவர். புகழின் உச்சத்தில் இருந்த போதும், அவர் சாதாரண அம்பாசிடர் கார்மட்டுமே வெகுநாட்களாக வைத்திருந்தார். அதுவும் கூட இல்லாமல் பல சமயங்களில் ஆட்டோவில் செல்பவராக இருந்து வந்தவர். அவரது வளர்ப்பு மகனான இயக்குனர் பாலாவின் நிர்ப்பந்தத்தின் பேரில் அவர் வாங்கிக் கொடுத்த உயர்ந்த ரகக் காரைப் பயன்படுத்தத் துவங்கினார். தாஜ் ஹோட்டலில் நடந்த 'மறுபடியும்' வெற்றி விழாவில் கலந்து கொண்ட இயக்குனர் பாரதிராஜா, 'உங்களைப் போல எந்தச் சமரசத்துக்கும் ஆட்படாமல் எளிமையான வாழ்க்கையை வாழ்வது என்னை வெட்கம் கொள்ள வைக்கிறது' என வெளிப் படையாகப் பாராட்டியிருந்தார்.



## பொருளுணர் திறன் செயற்பாடு

1. பாலுமகேந்திராவின் தனித்துவமான ஆளுமைகள் எவையெனக் கட்டுரை ஆசிரியர் குறிப்பிடுகின்றார்?

2. ஒளிப்பதிவுத்துறைக்குப் பாலுமகேந்திரா ஆற்றிய பங்களிப்புகளை விளக்குக.

3. சினிமாக் கதாபாத்திரங்களைப் புனைவதில் பாலுமகேந்திரா ஏற்படுத்திய புரட்சிகள் எவை என்று குறிப்பிடப்படுகின்றன.

4. பாரதிராஜாவின் பார்வையில் பாலுமகேந்திரா பற்றிய சித்திரிப்பு உமக்கு ஏற்படுத்தும் தாக்கத்தை விபரிக்குக.

5. பாலுமகேந்திராவின் செயற்பாடுகளின் தீவிரத்தை கட்டுரை ஆசிரியர் விபரிக்குமாற்றினை விளக்குக.

## குழுமச் செயற்பாடு

**‘இன்றைய இளைஞர்களின் ஆக்கத்திறனுக்கும் சிந்தனைத் தூண்டலுக்கும் பெரிதும் உதவுவன கருத்தியல் திரைப்படங்களே!** என்ற தலைப்பில் விவாதிப்போம்.

## திறன் வளர் செயற்பாடு

பாலுமகேந்திராவின் **தலைமுறைகள்** என்ற திரைப்படத்தை முன்வைத்து பின்வரும் தலைப்பில் திரைவிமர்சனம் எழுதுவோம்.

1. கதையோட்டம்
2. காட்சியமைப்பும், ஒளிப்பதிவும்
3. இசையும், பாடல்களும்
4. பாத்திரப்படைப்பு
5. நடிப்பு

# 10 ஒரு சோடிக் கண்கள்

## அ. ஓ! வண்டிக்காரா

**கவிஞர் நீலாவணன் (1931 - 1975)**

கிழக்கிலங்கையின் பெரியநீலாவணை என்ற கிராமத்தில் பிறந்தவர். இவரது இயற்பெயர் கே. சின்னத்துரை என்பதாகும். பயிற்றப்பட்ட ஆசிரியராகப் பணியாற்றிய இவர், சில பா நாடகங்களையும், சிறுகதைகளையும், நவீன காவியங்கள் சிலவற்றையும் ஆக்கியுள்ளார்.



ஓ, ஓ வண்டிக்காரா என்ற இப்பாடல் கவிஞரும், நடிகருமான சில்லையூர் செல்வராசன் அவர்களால் மெல்லிசைப் பாடலாகப் பாடப்பட்டு இலங்கை வானொலியில் அடிக்கடி ஒலிபரப்பப்பட்டது.

**ஓ... ஓ... வண்டிக்காரா**
**ஓட்டு வண்டியை ஓட்டு**
**போவோம் புதிய நகரம் நோக்கி**
**பொழுது போகும் முன்னோட்டு**

**ஓ... ஓ... வண்டிக்காரா...**

**காவில் கோவில் கழனிகளெங்கும்**
**காதல் தோயும் பாட்டு**
**நாமும் நமது பயணம் தொலைய**
**நடந்து செல்வோம் கூட்டு.**

**ஓ... ஓ... வண்டிக்காரா...**

**பனியின் விழிநீர்த் துயரத் திரையில்**
**பாதை மறையும் முன்னே**
**பிணியில் தேயும் நிலவின் நிழல் நம்**
**பின்னால் தொடரும் முன்னே...**

**ஓ... ஓ... வண்டிக்காரா...**

**அரும்பதங்கள்**

கா - சோலை
கழனி - வயல்
பிணி - துயரம்

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. *கவிஞரின் பயணம் எதை நோக்கி விரைகிறது?*

2. *இக்கவிதையில் சந்தம் இயல்பாய் அமையுமாற்றினைத் தெளிவுப்படுத்துக.*

3. *பின்வரும் அடிகளின் இலக்கியச் சிறப்பினை விளக்குக.*

   **அ. நாமும் நமது பயணம் தொலைய**
   **நடந்து செல்வோம்**

   **ஆ. பிணியில் தோயும் நிலவின் நிழல் நம்**
   **பின்னால் தொடரும் முன்னே**

## ஆ. அழகான ஒரு சோடிக் கண்கள்

### பாவலர் பஸில் காரியப்பர் (1940 - 2006)

*கிழக்கிலங்கையின் சம்மாந்துறையைப் பிறப்பிடமாகக் கொண்டவர். நூற்றுக் கணக்கான கவிதைகளைப் படைத்த இவரது ஆளுமையைக் கௌரவிக்கும் வகையில் 1978 ஆம் ஆண்டு பாவலர் என்ற பட்டம் வழங்கி கௌரவிக்கப்பட்டது. ஆத்மாவின் அலைகள் என்ற தொகுப்பையும் வெளியிட்டுள்ளார்.*

*அழகான ஒருசோடிக் கண்கள் என்ற இப்பாடல் மெல்லிசைப் பாடலாக இலங்கை வானொலியில் ஒலிபரப்பப்பட்டது.*

அழகான ஒரு சோடிக் கண்கள் - அவை
அம்புகள் பாய்ச்சி என் உளமெலாம் புண்கள்

புவியியல் கற்றிடும் வேளை - அவை
புகையுள்ளே மின்னிச் சிரித்திடுங் காலை
தவித்துத் துடிப்பதென் வேலை - கல்வி
தங்குவதெங்கே மனம் ஒரு பாலை!

ஆட்சியியல் மறுபாடம் - உடல்
அங்கே தெரியும் மனம் எங்கோ ஓடும்
ஆட்சி செய்யுமுனைச்சாடும் - நான்
ஆழிச்சுழியில் மிதந்திடும் ஓடம்!

தாய்மொழிப் பாடம் நடக்கும் - நறை
தாங்கிய கண்களோ பின்னலடிக்கும்
'ஏய்'! என்று என்னைப் பிடிக்கும் - மனம்
எப்படிக் கண்ணே பாடம் படிக்கும்...?

தத்துவப்பாடம் நடக்கும், அவை
தத்தித் திமிக்கி இமைகள் மடிக்கும்!
வித்தையில் பித்துப்பிடிக்கும் - நம்
வீட்டாரறிந்தால் கன்னந்தடிக்கும்!



### பொருளுணர் திறன் செயற்பாடு

1. **'உளமெலாம் புண்கள்'** என்று கூறப்படுவதற்குக் காரணம் யாது?
2. இப்பாடலுக்குச் சந்தம் மெருகூட்டுமாற்றினைத் தெளிவு படுத்துக.
3. 'ஆழிச்சுழியில் மிதந்திடும் ஓடம்'
   'தத்தித் திமிக்கி இமைகள் மடிக்கும்' ஆகிய வரிகளில் வெளிப்படும் உணர்வுச் சித்திரிப்பை எடுத்துக் காட்டுக.

### குழுமச் செயற்பாடு

மெல்லிசைப் பாடல்கள் சிலவற்றைத் தேடி வகுப்பறையில் மெட்டுடன் பாடிக்காட்டுவோம்.

### திறன் வளர் செயற்பாடு

அழகான ஒரு சோடிக் கைகள் என்ற தலைப்பில் மெல்லிசைப்பாடல் ஒன்றினை ஆக்குவோம்.

# 11 புகழ் வேட்டை

**அ.ச. ஞானசம்பந்தன் (1916 - 2002)**

இவர் தமிழகத்தின் திருச்சிராப்பள்ளியில் பிறந்தவர். தமிழறிஞர், இலக்கிய விமர்சகர், விரிவுரையாளர் எனப் பல பரிமாணங்களில் இவரது ஆளுமை வெளிப்பட்டுள்ளது. இவரது ஆளுமையின் வெளிப்பாடாக 35 ஆய்வு நூல்கள், மூன்று மொழிபெயர்ப்பு நூல்கள், பல பாட நூல்கள் என அறுவடையாகியுள்ளன. *'புதிய பார்வை'* என்ற அவரது இலக்கிய விமர்சன நூல் சாகித்திய அகடமி பரிசு பெற்றமை குறிப்பிடத்தக்கதாகும்.



இக்கட்டுரை மூவேந்தர்களின் (சேர, சோழ, பாண்டியர்) புகழ் நாட்டத்தையும், குறுநில மன்னர்களின் புகழ் நாட்டத்தையும் ஒப்பிட்டு நோக்குகின்றது. பல்வேறு புனைவுகளினூடாகக் கட்டமைக்கப்பட்டிருக்கும் மூவேந்தர்களின் செயல்களைப் பற்றியும் சிந்திக்க வைக்கின்றது.

''வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும்'' நல்லுலகத்தை பண்டு தொட்டு ஆண்டவர் மூவேந்தர் எனப்படுவர். சேர, சோழ பாண்டியர் எனக் கூறப்பெறும் இவர்களைப் பற்றிப் பண்டை இலக்கியங்கள் பெருமையுடன் பேசு கின்றன. இம்மூவரும் சேர்ந்து ஆட்சி புரிந்த இடத்தின் பரப்புத்தான் யாது என்று நினைக்கின்றீர்கள்? வடக்கே வேங்கட மலை (தற்போது திருப்பதி என்று கூறும் மலையே) தெற்கே கன்னியாகுமரி; மேற்கும், கிழக்கும் கடல்கள். வடக்கிலிருந்து தெற்கே ஏறக்குறைய 500 மைல்கள். கிழக்கிலிருந்து மேற்கே அகன்ற இடத்தில் 400 மைல்கள் (குமரி முனையில் ); இந்த அளவு குறுகிய நிலத்தை ஆட்சி செய்தவர் மூவர். ''மண் திணிகிடக்கைத் தண்டமிழ்க் கிழவர், முரசு முழங்கு தானை மூவர்'' (புறம்,35) என்ற புறப்பாடல் இதற்குச் சான்று. இந்த அளவுடைய நாட்டை மூவர் ஆட்சி செய்தாலும், இவர்கள் ஒவ்வொருவரும் தத்தமைக் கூறிக் கொள்ளும் பொழுது, பேரரசர்களாகவே (சக்கரவர்த்திகள்) கூறிக் கொண்டனர். இவ்வரசர்கள் ஒரோவழி இதை மறந்திருப்பினும், உழை இருப்போர் அவர்களுக்கு நினைவூட்டிக் கொண்டே இருந்தனர்.

மேலே கூறப்பட்ட பாடலின் அடுத்த அடியே போதுமானது. ''சோழன் குள முற்றத்துஞ்சிய கிள்ளி வளவனை'' வெள்ளைக்குடி நாகனார் என்ற புலவர் பாடிய பாடலாகும் அது. ''முரசு முழங்குதானை மூவருள்ளும், அரசெனப்படுவது நினதே பெரும!'' (35) என்று கூறிய புலவர் பெருமான் இன்னும் ஒரு படி மேலே சென்று நாடு எனப்படுவது எனதே என்று கூறிவிடுகின்றார். தமிழ்நாட்டை மூவர் ஆட்சி செய்தாலும், ''அரசன் '' என்று கூறினால் சோழனைத்தான் குறிக்குமாம்! நாடு என்று கூறினால், சோழ நாட்டைத்'' தான் குறிக்குமாம்!

இன்னும் சில சந்தர்ப்பங்களில் இவர்கள் ஆளும் பகுதிகளை ''உலகம்'' என்று கூடக் குறிப்பிட்டனர். ''பிரமனார்'' என்ற புலவர் பொதுமை சுட்டிய மூவர் உலகமும், பொதுமை இன்றி ஆண்டிசினோர்க்கும்'' (புறம்,357) என்று கூறிய அடிகள் ஆழ்ந்து நோக்கற்குரியவை. உலகம் என்ற சொல்லால் நாட்டின் ஒரு பகுதியைச் சுட்டிக் கூறுதல் அக்கால மரபுதான். ''மாயோன் மேய காடுறை உலகமும்'' என்று தொல்காப்பியம் கூறுகின்றது என்றாலும், ''மூவர் உலகம்'' என்று புறப்பாடல் புலவர் கூறும்பொழுது, அவர் இவர்களுடைய நாட்டின் பரப்பை ஓரளவு மிகுதிப்படுத்தியே கூறுகின்றார் என்பது விளங்கும். ஒவ்வொரு சந்தர்ப்பத்தில் இம்மூவருள் வலிமை பெற்ற ஒருவன் ஏனைய இருவரையும் அடக்கி ஆளுதலும் உண்டு. இன்னும் கூறப்போனால், இவர்களுள் ஒவ்வொருவனும் ஏனையோரை அடிப்படுத்தலையே தன் வாழ்நாளின் குறிக்கோளாகக் கொண்டிருந்தான். ''பிரமனார்'' 357 - ஆம் பாடலில் ''பொதுமை இன்றி ஆண்டிசினோர்க்கும்'' என்று கூறுவது இவ்வாறு ஒரோவழி ஏனைய இருவரையும் வெற்றிக் கண்ட ஒருவனையே குறிக்கின்றது.

கரிகாற் பெருவளத்தான் போன்ற ஒரு சிலர் தமிழ் நாட்டின் எல்லையைத் தாண்டிச் சென்று, பிற நாடுகளிலும் வெற்றி கண்டார்களாயினும், பெரும்பான்மையான

*தமிழ் மன்னர்கள் வெற்றி கண்டது பிற தமிழ் மன்னர்களையேயாம். தமிழனை மற்றொரு தமிழன் போரிட்டுத் தொலைப்பதைப் பெருவெற்றியாகக் கொண்டாடி மகிழ்ந்தனர் அந்நாளில் பெரும்பான்மையான தமிழர். சில சந்தர்ப்பங்களில் இவர்களுடைய போர் அவ்வளவில் நின்றுவிடாமல், யாதொரு தீங்கும் புரியாத மக்களையும் வருத்தத் தொடங்கிற்று. வெல்லப்பட்டவர் நாட்டை (தமிழ் நாட்டின் மற்றொரு பகுதிதான்) அழித்து, நெருப்பூட்டல் ஒரு வழக்கம்.*

**கரும்பு அல்லது காடு அறியாப்**
**பெருந்தண்பணை பாழாக**
**ஏம நல்நாடு ஒள் எரி ஊட்டினை** (புறம், 16)

*(கரும்பு விளையும் விளை நிலங்களை எல்லாம் நெருப்பூட்டினாய்) என வரும் அடிகள் நம் சிந்தனையைக் கிளறாமல் இருக்க முடியாது. இவ்வாறு இவர்கள் வெற்றிக் கொண்டாட்டம் கொண்டாடும் பொழுதுகூடத், தோற்றவரைப் பற்றி நினைத்ததில்லையா? அவர்களும் தம்மைப்போன்ற மொழி பேசும் நாகரிகம் உடையவர் என்ற எண்ணம் இவ்வெற்றி வீரர்கட்குத்தோன்றி இராதா? போரில்லாத நாட்கள் மிகவும் குறைவு என்று கூறத்தக்க முறையில் இவர்கள் வாழ்ந்துள்ளனர். இப்பெருமன்னர்கள் ஒரே வழி வாளாவிருந்தாலும், இவர்களுக்குக் கீழ் வாழ்ந்த சிற்றரசர்கள் வாளா விருப்பதில்லை. இவ்வாறு போரிட்டு மடியக் காரணம் யாது? படை வைத்திருந்தமையின் வாளாவிருக்க முடியாமல் ஓயாது போரிட்டனரா? புறப்பாடல்களை ஒருமுறை புரட்டினவருங் கூட ஓர் உண்மையை அறியாமல் இருக்க முடியாது. ஏனைய எத்துணைக் காரணங்கள் இருப்பினும், இவர்கள் ஓயாமல் பூசலிட்டதுக்குத் தலையாய ஒரு காரணம் காணப்படுகின்றது. மனித மனதின் ஆழத்தில் காணப்பெறும் இரண்டு உணர்ச்சிகளே இதன் காரணம் என்று நினைக்க வேண்டியுள்ளது. இயற்கையாகத் தோன்றும் வெறுப்புணர்ச்சி ஒன்று; ஏனையது, புகழ் ஈட்ட வேண்டுமென்று தோன்றும் உணர்ச்சி. இவை இரண்டும் கூடினவிடத்து விளைவது போரேயன்றி, வேறு யாதாக இருத்தல் இயலும்?*

**மன்னர் உலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நிறீஇத் தாய்மாய்ந்தனரே** (புறம், 165)

*(நிலை பேறில்லாத இந்த உலகில் புகழை நிலை நாட்டிப் பலர் மாய்ந்தனர்.)*

**சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்**
**நூற்றுஇதழ் அலரின் நிரைகண்டு அன்ன**
**வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து**
**வீற்றிருந் தோரை எண்ணும் காலை**
**உரையும் பாட்டும் உடையோர் சிலரே!**

**மரைஇலை போல மாய்ந்திசினோர் பலரே!**
**புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்**
**வலவன் ஏவா வான ஊர்தி**
**எய்துப என்ப...** **(புறம், 27)**

*(தாமரையின் மலர்களைப் போலப் பலரும் ஒன்றாகவே காட்சியளிக்கும் இவ்வுலகில், பிறரால் பாடப்பெறும் சிறப்புடையோர் சிலரே! பலர் பிறரால் புகழப்படாமல் இறந்து போகின்றனர். புலவரால் புகழ் பெறும் சிறப்புடையோர் வானுலகமும் பெறுவர்)*

*இத்தமிழருடைய புகழ்ப் பைத்தியம் மிகவும் அழகாக இருந்தது என்பதைக் காட்ட நூற்றுக்கணக்கான உதாரணங்கள் தர இயலும்.*

**தோன்றிற் புகழோடு தோன்றுக; அஃதி லார்**
**தோன்றலில் தோன்றாமை நன்று** **(குறள்,236)**

*என்று குறளாசிரியர் கட்டளை இடும் முன்பே இம்மக்கள் தம் வாணாளில் பெறவேண்டிய ஒரு குறிக்கோளாக இதனைக் கொண்டிருந்தனர் என்பதை நன்கு அறிய முடிகின்றது. இலக்கணமும் இதற்குப் பெரியதோர் இடந்தந்து, ''பாடாண் திணை'' என்றதொரு திணையையே வகுத்துவிட்டது.*

*மனிதனாகப் பிறந்தவன் புகழீட்டியே தீர வேண்டுமென்றால் அதற்குரிய வழிகள் யாவை எனக் கேட்கத் தோன்றுகின்றதல்லவா? வழிகள் பலவாக இருக்கலாம். எந்த வழியை மேற்கொண்டால் புகழ் பேசுகின்றவர்கள் எளிமையாகப் புகழ்வார்கள்? அந்த வழியே சிறந்த வழி என்று நினைத்திருத்தல் கூடும் அக்கால மக்கள். மேலும் புகழ் ஈட்டும் வழியைப்பெறச் செய்யக்கூடுமாயின், அது மிகவும் நலமானதாகப்பட்டிருக்கும். இயற்கையாக மனதில் தோன்றும் வெறுப்புணர்ச்சிக்கு வடிவு கொடுப்பதன் மூலம் இரண்டு பயன்கள் கிட்டுகின்றன. முதலாவது யாரை வெறுக்கின்றோமோ அவர் மேல் போர்தொடுத்து வெற்றி காணமுடிகின்றது. இரண்டாவது, அவ்வாறு பெறும் வெற்றியைப் பிறர் புகழவும் காரணமாகிறது.*

*இவ்வாறு இரண்டு வழிகளிற் பயன்பெறக் கூடுமாயின், வன்மை மிக்க அரசர்கள் ''போர்'' என்ற வழியை மேற்கொண்டதில் வியப்பிருத்தல் இயலாது. மேலும் அந்த அரசர்கள் புரியும் இந்தப் போர்களைத் தம்முடைய நாட்டு மக்களின் நலத்திற்காகவே செய்ததாகவும் கூறினர்; அம்மக்களும் இதனை நம்பினர்.*

*பிறருடைய நாட்டின்மேல் போர் தொடுத்துச் செல்லுதல் அரசர்க்குரிய அறமாகவும் போற்றிக் கூறப்பெற்றது. தற்காப்புச் செய்யுமுறையில் போரிடுதல்*

*அன்றியும், பிறர் மேல் படைகொண்டு வலுப்போருக்குப் போதலும் அறமெனக் கருதப்பட்டது. புகழ் வேட்டையாடப் பிறருடைய நிலத்தைப்பற்றிக் கவலை கொள்ளாமல் போரிடுதலை ஒரு வாய்ப்பாகக் கொண்டனர் அற்றை நாள் தமிழர். எவ்வளவு பெரிய அரசனும் இதற்கு விலக்காமாறு இல்லை. மேலும் ஓரிரண்டு போர்களில் வெற்றி கண்டுவிட்டால் அது குடிப்பழக்கம்போல் ஆகிவிடும். அவ்வெற்றி தந்த வெறி மேலும் மேலும் போர் செய்யத் தூண்டும். தாம் இவ்வாறு போர் செய்து அதனால் பெறுவதாகக் கருதிய புகழ் உண்மையானதா என்று ஆராய அவர்கள் முற்படவில்லை.*

*அரசராகத் தாம் பிறந்ததே போர் செய்யத்தான் என்றுக் கூடப்பலர் கருதி விட்டனர். இத்தகைய ஒரு நிலையில் அறிவுடைப் பெரு மக்கள் சிலர் மனத்திலாதல் ஓர் ஐயம் தோன்றி இருத்தல் வேண்டும். கேவலம் போரிடுதல் ஒன்றுதானா புகழை வளர்க்கும்? இது தவிர இவ்வரசர் பெருமக்கள் செய்யத்தக்க நற்செயல்கள் வேறு இல்லையா? இவ்வாறு சிலர் தம்மைத்தாமே கேட்டுக்கொண்டு பெற்ற விடைகளும் புறப்பாடல் முதலியவற்றில் காணக் கிடைக்கின்றன. ''மாங்குடி மருதனார்'' என்ற புலவர் தம்முடைய அரசனுக்குண்டான போர் வெறியைத் தணிக்க ''மதுரைக் காஞ்சி'' என்றதொரு நூலையே (அவ்வளவு பெரிய நூல் அது) இயற்றினார் என்றால் பழந்தமிழர் போர் வெறி என்ற பாலைவனத்தில் இஃது ஒரு நீர் ஊற்றுப் போன்று காணப்படுகின்றது. 782 வரிகளையுடைய அப்பாடலில், அப்புலவர், ''பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுந்செழியனுக்கு'' நல்லதோர் அறிவுரை வழங்குகின்றார்.*

**பொற்புவிளங்கு புகழவை நிற்புகழ்ந்து ஏத்த**
**விளங்குஇழை மகளிர் பொலங்கலத்து ஏந்திய**
**மணங்கமழ் தேறல் மடுப்ப நாளும்**
**மகிழ்ந்து இனிது உறைமதி பெரும**
**வரைந்துநீ பெற்ற நல்ஊ ழியையே**
**(மதுரைக்காஞ்சி, 778 - 82)**

*(உனக்கிருக்கும் வாழ்நாள் ஓரளவுடையதாகலின், நல்ல முறையில் உண்டு உடுத்து மகிழ்ச்சியுடன் வாழ்வாயாக!)*

*இதே புலவர் இதே மன்னனைப் பாடும் புறப்பாட்டு ஒன்றில் இன்னும் ஒருபடி மேலே செல்கிறார்.*

**ஒண்தொடி மகளிர் பொலங்கலத்து ஏந்திய**
**தண்கமழ் தேறல் மடுப்ப மகிழ்சிறந்து**
**ஆங்கினிது ஒழுகுமதி பெரும ஆங்கது**
**வல்லுனர் வாழ்ந்தோர் என்ப... (புறம், 24)**

(இவ்வாறு, இன்புற்று வாழ்வதே வாழ்க்கை எனப்படும் என்று அவர் கூறும் பொழுதுதான்,இவ்வாறு செய்யாதவர்களினுடைய வாழ்வு எவ்வளவு பயனற்றது என்பதையும் அறிய முடிகிறது.)

போர் செய்தலையே தம் வாணாளின் குறிக்கோளாகக் கொண்ட இம்மன்னர்கள் புகழடைவதற்கு மேற்கொண்ட வழி சற்று விந்தைதயானதே! இதனைக் காட்டிலும் வேறு வழியில் வாழ்வதால் நல்லதொரு புகழை அடையமுடியும் என இவர்கள் ஏனோ நினைக்கவில்லை? ஆனால், இப்பேரரசர்கள் வாழ்ந்த அதே காலத்தில் சில சிற்றரசர்களும் வாழ்ந்துள்ளனர். அவர்கள் வாழ்க்கையில் மேற்கொண்ட குறிக்கோள் முற்றிலும் வேறானதாகக் காணப்படுகின்றது. கடை எழு வள்ளல்களைப் பற்றியும் இப்புறப்பாடல்கள் பேசுகின்றன. அவர்களும் புகழ் படைத்தவர்களாகவே உள்ளனர். என்றாலும், என்ன வேற்றுமை? புகழ் என்ற ஒன்றை அடைய முற்றிலும் வேறுபட்ட இரு வழிகளைக் கையாண்டுள்ளனர். யாருடைய வழி சிறந்தது? போர் வெறி கொண்டு , நாட்டிற்கு நன்மை என்ற பெயரால் தமிழர்களுடைய குருதியைத் தமிழ் மண்ணில் ஆறாகப் பெருகவிட்டுத் தம்முடைய மக்களும், தோற்ற மக்களும் ஒரு சேர அவதிப்படச் செய்த இப்போர் வெறியர்களும் புகழடைந்து விட்டதாகச் செருக்குற்றிருந்தனர். பிறருக்குத் தீங்கு புரிபவர்களைக் கனவிலும் கருதாதவர்களாய் வாழ்ந்த அவ்வள்ளல்களும் புகழ் பெற்றனர். அறிவின் துணைக் கொண்டு புகழ் தேட முயன்ற இப் போர் வெறியர்கள் எங்கே? இவ்விரு சாராரும் பெற்றது ஒரே புகழ்தான் என்றாலும், இருவரும் கையாண்ட வழிகள் எவ்வளவு மாறானவை? அடையும் பயன் ஒன்றேயாயினும், மேற்கொள்ளும் வழி வேறுபாட்டால் இருவரும் இரு வேறு துருவங்கட்குச் சென்று விட்டனர்.



அறிவு வழி மேற்கொண்ட இவர்கள் புகழ் சிறந்ததா? அன்றி, அன்பு வழி மேற்கொண்ட அவர்கள் புகழ் சிறந்ததா? அறிவு அறிவு என்று கூவி, அறிவிற்கு வணக்கம் செலுத்தும் தற்காலத் தமிழ் நாடு ஒருவேளை இப்போர் வெறியர்களைப் பாராட்ட முன்வரலாம். ஆனால், உண்மையில் இவர்கள் புகழ் நிலை நின்றதா? இது நன்கு ஆராயற்பாலது.

## அரும்பதங்கள்

உழை - பக்கம்
நிறீ இ - நிலைநாட்டி
விசும்பு - ஆகாயம்

## பொருளுணர் திறன் செயற்பாடு

1. மூவேந்தரின் ஆட்சிப்பரப்பு, அவர்தம் மனநிலை பற்றிக் கட்டுரை ஆசிரியர் கூறுவனவற்றை எழுதுக.
2. மூவேந்தர்கள் பற்றிப் புறநானூற்றுப் புலவர்கள் கூறுவனவற்றை விளக்குக.
3. புகழ்வேட்டை என்ற தலைப்பின் பொருத்தப்பாடுப் பற்றி கருத்துரை வழங்குக.
4. 'தான் கூறவந்த விடயங்களை ஆதாரத்துடன் விளக்குவதில் ஞானசம்பந்தன் வெற்றிபெற்றுள்ளார்' இக்கூற்றை விளக்குக.

## குழுமச் செயற்பாடு

''மனிதன் புகழ்பெறுவதற்கு அன்பே காரணம்'' என்ற கருத்தையொட்டி விவாதம் ஒன்றினை நடத்துவோம்.

## திறன் வளர் செயற்பாடு

பின்வரும் கருப் பொருளை அடிப்படையாகக் கொண்டு சிறுகவிதை ஒன்றினை ஆக்குவோம்.

**அன்பின் வழியது உயிர்நிலை**